# ‘சங்க இலக்கியத்தில் வாழ்வியல் சிந்தனைகள்’

**சென்னைப் பல்கலைக் கழக**
**முனைவர் (பிஎச்.டி.) பட்டப்பேற்றிற்காக**
**அளிக்கப்பெறும் ஆய்வேடு**


**அ. ஐயப்பன்,** எம்.ஏ.,எம்.ஃபில்.,பி.எட்.
முழுநேர ஆய்வாளர்
தமிழ்த்துறை
மாநிலக் கல்லூரி
(தன்னாட்சி)
சென்னை - 600 005


***நெறியாளர்***


**முனைவர் வீ. அசோகன்,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.
இணைப்பேராசிரியர்
தமிழ்த்துறை
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை - 600 005






**தமிழ்த்துறை**
**மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)**
**சென்னை - 5.**

**ஜுன் 2011**

**முனைவர் ப. மகாலிங்கம்,** எம்.ஏ.,எம்ஃபில்,பிஎச்.டி.
தமிழ்த்துறைத் தலைவர்
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை - 600 005.

## துறைத்தலைவர் சான்றிதழ்

மாநிலக் கல்லூரியின் (தன்னாட்சி) தமிழ்த்துறையில் முழுநேர ஆய்வு மாணவர் **திரு. அ. ஐயப்பன், எம்.ஏ., எம்.ஃபில்.,பி.எட்.,** சென்னைப் பல்கலைக் கழக முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக **"சங்க இலக்கியத்தில் வாழ்வியல் சிந்தனைகள்"** என்னும் தலைப்பில் வழங்கும் இந்த ஆய்வேடு, அவர்தம் சொந்த முயற்சியில் உருவாக்கப் பெற்றது எனச் சான்றளிக்கிறேன்.

இடம் : சென்னை

நாள் : 22-6-11

**முனைவர் ப. மகாலிங்கம்**

தமிழ்த்துறைத் தலைவர்

**முனைவர் வீ. அசோகன், எம்.ஏ., எம்.ஃபில்.,பிஎச்.டி.**
இணைப் பேராசிரியர்
தமிழ்த்துறை
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை - 600 005.

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

**"சங்க இலக்கியத்தில் வாழ்வியல் சிந்தனைகள்"** என்னும் தலைப்பில் சென்னைப் பல்கலைக் கழக முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக என் மேற்பார்வையில் **திரு.அ.ஐயப்பன்** அவர்கள் நிகழ்த்தியுள்ள இவ்ஆய்வேடு ஆய்வாளருடைய சொந்த முயற்சியில் உருவானதாகும்.

இதற்கு முன் இவ்வாய்வேடு வேறு பட்டப்பேற்றிற்கோ, ஆய்வரங்கிற்கோ, அளிக்கப் பெறவில்லை எனச் சான்றிதழ் வழங்குகிறேன்.

இடம் : சென்னை

நாள் : 22.6.2011

**முனைவர் வீ. அசோகன்**
**(மேற்பார்வையாளர்)**

Dr. V. ASHOKAN
Associate Professor
Department of Tamil
Presidency College
Chennai 600 005.

**அ. ஐயப்பன், எம்.ஏ.,எம்.ஃபில்.,பி.எட்.,**
முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழ்த்துறை
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை - 5.

# ஆய்வாளர் உறுதிமொழி

**''சங்க இலக்கியத்தில் வாழ்வியல் சிந்தனைகள்''** என்னும் தலைப்பில் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காகப் படைக்கப்பட்ட இவ்வாய்வு என் சொந்த முயற்சியில் உருவானதாகும்.

இதற்கு முன் இவ்வாய்வேடு வேறு பட்டத்திற்கோ, ஆய்வரங்கிற்கோ அளிக்கப் பெறவில்லை என உறுதியளிக்கிறேன்.

**அ. ஐயப்பன்**

இடம் : சென்னை-5

அ. ஐயப்பன்

நாள் : 22.6.11

**(ஆய்வாளர்)**

**நெறியாளர் ஒப்பம்**

**முனைவர் வீ. அசோகன்,** எம்.ஏ., எம்.ஃபில்.,பிஎச்.டி.
இணைப் பேராசிரியர்
தமிழ்த்துறை
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை - 600 005.

# நன்றியுரை

**“சங்க இலக்கியத்தில் வாழ்வியல் சிந்தனைகள்”** என்னும் தலைப்பில் சென்னை மாநிலக் கல்லூரி தமிழ்த்துறையில் முழுநேர முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்வதற்கு அனுமதி வழங்கிய சென்னைப் பல்கலைக் கழகத்திற்கும், மாநிலக் கல்லூரி முதல்வர் அவர்களுக்கும், தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர் ப. மகாலிங்கம்** அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி.

என் ஆய்வுக்கு மேற்பார்வையாளராகப் பொறுப்பேற்று நல்ல பல கருத்துக்களை வழங்கி, ஆய்வேடு செம்மையாகவும், சீரிய நிலையிலும் அமையக் காரணமாகி, சிக்கல்களை களைந்து வழிகாட்டியாக உதவிய சென்னை மாநிலக் கல்லூரி தமிழ்த்துறை இணைப்பேராசிரியர் **முனைவர் வீ. அசோகன்** அவர்களுக்கு என் பணிவான நன்றி.

மேலும் ஆய்வு தொடர்பான நூற்களைத் தந்து உதவிய மேனாள் முனைவர் **பெ.அர்த்தநாரீசுவரன்** அவர்களுக்கும் எனது நன்றி உரித்தாகுக.

என்னை முனைவர் (பிஎச்.டி) பட்டப்படிப்பு மேற்கொள்ளச் செய்த என் மனைவி **திருமதி. கோ. வேலம்மாள் எம்.எஸ்.சி.,எம்.எட்.,எம்.ஃபில்.** அவர்களுக்கும், எனது சகோதரன் **திரு. ஈஸ்வர பிள்ளைக்கும்,** என் மைத்துனன் **கோ. கணேஷ் குமாருக்கும்,** என் மகன் **ஐ.வே. அனுஷ்கோபிக்கும்,** மகள் **சிவசக்திக்கும்,** என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுத் தொடர்பாக தேவையான நூல்களை இனிய முகத்துடன் தந்துதவிய மாநிலக் கல்லூரி நூலகர் அவர்களுக்கும், கன்னிமரா நூலகர் மற்றும் சென்னைப் பல்கலைக் கழக நூலகர் அவர்களுக்கும் உ.வே.சா. நூலகர் (அடையாறு) அவர்களுக்கும் என மனமார்ந்த நன்றி. ஆய்வேட்டினை சிறப்புற அமைய உதவிய ஆய்வு மாணவர்கள் **தி.மு. சிவப்பிரகாசம், மு. நாராயணனுக்கும் எனது நன்றி.**

இவ்வாய்வேட்டைச் சிறப்பாக கணினி வழியே தட்டச்சு செய்துதவிய **தாம்பரம் மாணவர் நகலகத்தாருக்கும்** என் நன்றி.

"சங்க இலக்கியத்தில் வாழ்வியல் சிந்தனைகள்"

# பொருளடக்கம்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| குறள் | - | திருக்குறள் |
| சிலம்பு | - | சிலப்பதிகாரம் |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பா.எண். | - | பாடல் எண் |
| மேலது | - | மேற்குறிப்பிட்ட நூல் |
| உ.ஆ. | - | உரை ஆசிரியர் |
| ப.ஆ. | - | பதிப்பு ஆசிரியர் |

# முன்னுரை

சங்ககாலம் தமிழக மக்களின் வசந்த காலம். வாழ்க்கையில் பல் வளமும் பெற்று விளங்கும் சிறந்த காலம். மன்னனும், மக்களும் சிறப்புகள் பல பெற்றுச் செழிப்புற்ற காலம். வீரமும் காதலும் செங்கோலோச்சிய காலம். உலகத்திற்கே நாகரிகத்தை வெளிப்படுத்திய காலம்.

நம் தமிழகம் கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே தோன்றிய நாகரிகப் பழமை கொண்டது என்றும் இறவாது வாழும் இலக்கியங்களால் முன்னோர் பெருமைகளை முறைப்பட எடுத்தியம்பும் கீர்த்தி மிக்கது. தமிழர்கள் அகவாழ்க்கையிலும், புறவாழ்க்கையிலும் நேரிய வழிநின்றனர். இறவாத புகழுடைய புது நூல்கள் தோன்றிய காலத்தே பழமையான இலக்கியங்களினால் செழுமை பெற்று விளங்குவது தமிழ்மொழி.

தமிழினம் மூத்த குடி என்ற பெருமையைப் பெற்றது. தமிழ் மண்ணில் தோன்றிய பாடல்கள் யாவும் எதார்த்தமானவை. இயற்கைக்கு மாறான கற்பனையைக் காணமுடியாத தனித் தன்மை உடையது.

சங்கப்பாக்கள் பொருளாலும், அளவாலும், தரத்தாலும் நிகரற்று விளங்கக் கூடிய சிறப்புடைத்து. இலக்கண, இலக்கியம் எனும் இருபெரும் கிளைகளாகத் தழைத்து நிற்பது. ஐவகை நிலத்து ஐந்திணை ஒழுக்கங்களையும் தாங்கி நிற்பவை.

சங்ககாலத் தமிழர்களின் வரலாற்றுப் பேழையாகக் கருத்துக் கருவூலமாக விளங்கி வருவன சங்கப் பாக்களாகும். அகம், புறம் என்னும்

இருவேறு வாழ்க்கை நெறிமுறைகளையும், இல்லற வாழ்வையும், புறவுலக வாழ்வையும் தெளிவுற எடுத்துரைக்கும் காலக்கண்ணாடியாகவும் திகழ்வன.

தனிமனித வாழ்வின் நெறிமுறைகளை முறையாக எடுத்துரைக்கும் கருவூலமே சங்கப்பாக்கள். தனிமனித வாழ்க்கை, குடும்ப வாழ்க்கை போன்ற நெறிமுறைகளையும், சமுதாய வாழ்வியலையும் படம் பிடித்துக் காட்டும் கால வரலாற்றுச் சான்றாதாரமாகும்.

பண்டைத் தமிழரின் சீர்மிகு வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்ட வல்லதாக அமைவது பாட்டும், தொகையுமான சங்கப்பாக்களே ஆகும். இவற்றிற்கு இலக்கணமாக அமைவது பழந்தமிழ் இலக்கணமான தொல்காப்பியமாகும்.

ஈராயிரமாண்டுகளுக்கு முற்பட்ட தமிழகத்தில் உணவுக்குப் பஞ்சம் இருந்ததில்லை. மலைகளிலும், காடுகளிலும் இயற்கையாகக் கிடைத்த காய்களும், கிழங்குகளும், கனிகளும் அவர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்தன. மலைச்சாரல் பகுதிகளில் தேன், தினை, வரகு, நெல் போன்றவை மிகுதியாக விளைந்து மக்களின் பசிப்பிணியைத் தீர்த்தன.

கடற்கரைப் பகுதியில் விளைந்த உப்பும், மீன்களும் அந்நிலத்து மக்களுக்குக் கிடைத்தது போக எஞ்சியவை நாட்டின் பிற பகுதிகளில் உள்ள மக்களுக்குப் பண்டமாற்று முறையில் விற்பனை செய்யப்பட்டு தங்களுக்குத் தேவையான பொருட்களைப் பெற்றமையால் மக்கள் தன்னிறைவு பெற்றார்கள்.

மாடமாளிகைகளையும், அடிப்படை வசதிகள் கொண்ட வீடுகளையும் மக்கள் தமக்கென அமைத்துக் கொண்டார்கள். தேவையான ஆடைகளைத் தயார் செய்யவும் கற்றிருந்தனர்.

அடிப்படைத் தேவையான உணவு, உடை, இருப்பிடம் கிடைத்த மக்கள் இல்லற நெறியோடு வாழ்ந்தனர். ஆடவர்கள் தங்கள் நிலத்தின் தன்மைக்கும் சூழலுக்கும் ஏற்ற மகளிரை களவு வழியிலும், பெற்றோர் வழியிலும், காளையை அடக்கியும் மணம் செய்து மனம் ஒத்த இல்லறத்தில் சுற்றம் தழுவி நன்மக்களைப் பெற்று மன்னனும் நாடும் போற்ற வளமான வாழ்க்கையை மேற்கொண்டனர்.

''வினையே ஆடவர்க்கு உயிரென்றும், இல்லற மகளிர்க்கு ஆடவரே உயிரென்றும்'' சான்றோர் போற்றும் நன்னெறிகளைக் கடைபிடித்து விருந்தோம்பி, சுற்றம் தழுவி, சடங்குகள், விழாக்களால் தெய்வம் போற்றிச் செம்மார்ந்த வாழ்க்கை வாழ்ந்தனர்.

பழந்தமிழக மக்கள் ஐந்திணை ஒழுக்க நெறிகளைப் போற்றி வாழ்ந்தனர். இல்லாமை, இயலாமை, கல்லாமை, பொல்லாமை நீங்கிய வாழ்க்கையை வாழ்ந்தார்கள். அவர்கள் வாழ்ந்த வாழ்க்கையின் சான்றாக விளங்குவன சங்கப்பாக்கள்.

ஐந்திணை அடிப்படையில் அமைந்த ஐந்திணைக் காதல் செவ்வியது; புனிதமானது; உலகமக்களுக்கெல்லாம் நம் பண்பை எடுத்துரைப்பது. எல்லோரையும் சீரான வாழ்க்கை வாழ வழி கோலுவது;

இத்தகு சிறப்புகளை உள்ளடக்கிய பாக்களைப் பாட்டும் தொகையும் என்ற பெயர்களால் சுட்டுகிறோம்.

**''நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு**
**ஒத்த பதிற்றுப் பத்து ஓங்கு பரிபாடல் - கற்றறிந்தார்**
**ஏத்துங் கலியொடு அகம் புறம் என்று**
**இத்திறத்த எட்டுத் தொகை''**

**''முருகு பொருநாறு பாணிரெண்டு முல்லை**
**பெருகு வளமதுரைக்காஞ்சி - மருவினிய**
**கோல நெடுநல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்**
**பாலை கடாத்தொடும் பத்து''**

என்னும் இரு பழைய வெண்பாக்களும் சங்க நூல்கள் பதினெட்டு என்பதற்கான பழமையான சான்றாகும். இவற்றுள் செம்பாதி பாடல்கள் அகப்பொருளையும், எஞ்சிய பகுதி புறப்பொருளையும் சுட்டுவன.

அன்பால் இணைந்த தலைவனும் தலைவியும்

**''உயிரினும் சிறந்தன்று நாணே, நாணினும்**
**செயிர்தீர்க் காட்சிக் கற்புச் சிறந்தன்று''**

என்பதனை வாழ்வியல் அறமாகக் கொண்டார்கள்.

பெண்டிர்க்கு உயிரைக் காட்டிலும் நாணம் சிறப்புடையது என்றும், ஆடவர்க்கு பெருமையும் உரனும் அணிகலன் என்ற கருத்தும் உறுதிப்பட்டது.

ஆடவர்க்கும், மகளிர்க்கும் உரிய கடமைகள் வகுக்கப்பட்டன.

**‘‘ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே**
**சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே**
**வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே**
**நன்னடைநல்கல் வேந்தற்குக் கடனே**
**ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்**
**களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே’’**

என்ற பொன்முடியார் பாடல் வழி ஒவ்வொருவரின் கடமையும் முன்னிலைப்படுத்தப்பட்டன.

பெண் தன் உள்ளங்கவர்ந்த ஒருவனையே, அதுவும் வீரம் சார்ந்த ஆண்மகனையே மணந்து கொள்ள விரும்பினாள்; மணம் செய்தும் தன் கருத்தை நிலைப்படுத்தினாள்.

அறிவாலும், அழகாலும், பண்பாலும், வயதாலும், குடிப்பிறப்பு, செல்வம் முதலியவற்றாலும் ஒத்த தலைவனும், தலைமகளும் நல்லூழின் காரணமாகப் பிறர் கொடுக்கவும், எடுப்பவும் இன்றித் தாமேதமியராய்க் கூடி, அவனையே கணவனாகவும் பெற்றனள்.

**‘‘அல்லில் ஆயினும் விருந்து வரின் உவக்கும்’’**

முல்லைசான்ற கற்பின் மெல்லியளாகப் பெண் மகள் விளங்கினாள்.

**‘‘ஒன்றன் கூறுஆடை உடுப்பவரே ஆயினும்**
**ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை’’**

என்று ஆடவருடன் இணைந்து இல்லறத்தை நல்லறமாகப் போற்றினர்.

வாழ்தல் வேண்டிப் பொய் கூறாது; மெய்யைக் கூறி அதனால் வந்த பழியையும் ஏற்றனர். வீரமும், நெஞ்சில் ஈரமும் கொண்டு கற்பு நெறி

வழுவாது காதல் வாழ்க்கையிலும், கற்பு நெறியிலும் இருபாலரும் ஒன்றினர். வறுமையான நிலையிலும் செம்மார்ந்த வாழ்க்கை வாழ்ந்தனர்.

மன்னர்கள் புலமைக்கும் புலவர்க்கும் தலை வணங்கினர். புலவர்கள் தாங்கள் பரிசாகப் பெற்ற பொருளை மற்றவர்களுக்கும் கொடுத்து ஆண்டுகள் பல கழிந்த நிலையிலும் நரை, திரையில்லாத பெருமைமிகு வாழ்க்கை வாழ்ந்தனர்.

கல்வி, வீரம், காதல், அன்பு போன்றவற்றில் ஆடவரும் மகளிரும் ஒத்த தன்மையராய் விளங்கினர். மக்கள் போர்ப்பயிற்சிகள் பெற்றதோடு கல்வி, கலைகளிலும், வான நூற்புலமையிலும் வணிகத்திலும் தேர்ச்சி பெற்றவர்களாய் விளங்கினார்கள்.

வீரத்தினை விளைநிலமாக்கி, பொருள் தேடி அவற்றை வகுத்து குடும்பப் பொறுப்புகளில் கவனம் செலுத்தினர். நாடு வாழ்ந்தால் தானும் வாழமுடியும் என்ற நம்பிக்கை கொண்டனர். தனக்காக மட்டும் வாழாது பிறர்க்காகவும் வாழ்ந்தனர். புகழுக்காக உயிரையும் கொடுக்க முன் வந்தனர். பழிவரும் என்றால் உலகமே பரிசாகக் கிட்டினும் வேண்டாமென ஒதுக்கினர்.

ஆடவர்களின் அருந்துணையாய் மகளிர் விளங்கி இல்லறநெறியில் சிறக்க வாழ்ந்து, சுற்றம் தழுவி, அன்பு மொழிகளால் அகிலத்தையே அரவணைத்து, கூடாவொழுக்கத்தையுடையவரையும் திருத்தி நல்லொழுக்க நெறி நிற்கவும் துணை செய்தனர்.

இத்தனைச் சிறப்புகளையும் விரிவாகவும், விளக்கமாகவும் நம் மண்ணின் பெருமைகளோடு எடுத்துரைக்கும் சங்கப்பாக்கள் உள்ளவரை

தமிழரின் மானம் குறையாது நிலைத்தே நிற்கும். தமிழரின் மானமும், ஈரமும் மற்றவர்க்கும் தலை வணங்காது மானங் காத்து தமிழின் மேன்மை காக்கும்; தரணிக்கு நம் புகழை எடுத்துரைக்கும்.

## ஆய்வுத் தலைப்புத் தேர்வு

சங்கப்பாக்களில் ஒவ்வொரு பாடலிலும் தமிழரின் மானமும், வீரமும், காதலும், கருணையும், அன்பும் குடி கொண்டிருக்கும். தொடர்ந்து ஆற்றொழுக்காய் அழகிய கருத்துகளை எடுத்துரைக்கும். தன்மானச் சின்னமாய் விளங்கிய தமிழர்களின் வாழ்க்கைச் சிந்தனையை எடுத்துரைக்கும் என்ற கருத்தை முன்னிலைப்படுத்தி அமைந்த தலைப்புத்தேர்வே ‘சங்க இலக்கியத்தில் வாழ்வியல் சிந்தனைகள்’ என்ற தலைப்புத் தேர்வும் தேடலுமாகும்.

## ஆய்வின் எல்லை

சென்னை நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் வெளியிட்ட சங்கத் தொகுதிகள் ஆய்வின் முதன்மை ஆதார நூல்கள், சங்கம் சார்ந்த வரலாற்று நூல்கள், சங்கப்பாடல்கள் குறித்த விரிவுரைகள், சொற்பொழிவுகள், ஆய்வுக் கட்டுரைகள், ஆய்வேடுகள் போன்றவை துணைமை ஆதாரங்களாகும்.

## ஆய்வின் கருதுகோள்

சங்கப்பாக்களின் வழியே வெளிப்படும் வாழ்வியல் சிந்தனைகளையும், மக்கள் வாழ்க்கை, பண்பாட்டு உறவுகள், சடங்கு முறைகள் வழியே வெளிப்படும் சிந்தனைச் சிதறல்களையும் தொகுத்து வெளிக் கொணர்தலாகும்.

## ஆய்வின் அணுகுமுறை

'விளக்கமுறைத் திறனாய்வு' என்னும் ஆய்வியல் நெறிமுறையினை மையப்படுத்தியதாக இவ்வாய்வேடு அமைகின்றது.

## ஆய்வின் நோக்கம்

- பொய்ம்மை நெறி நீங்கிய மெய்ம்மை நெறியில் ஆடவரும் மகளிரும் இணைந்த இல்லற நெறிமுறைகளைக் காணுதல்.
- ஆடவர்கள் நெஞ்சில் வீரமும், மகளிர் நெஞ்சில் ஈரமும் கொண்டு இல்லற நெறி நின்றமையை வெளிப்படுத்துதல்.
- வறுமையிலும் செம்மார்ந்த வாழ்க்கை வாழ்ந்த பண்டைத் தமிழரின் வாழ்வியல் கோட்பாடுகளை வரன்முறை செய்தல்.
- காதல், வீரம், அன்பு, கருணை, கொடை, மக்கட்பேறு, விருந்தோம்பல், பகை வெல்லும் திறன், மக்கள் நலனில் கருத்து கொண்ட மன்னர்கள் தங்கள் மக்களின் வாழ்க்கை சிறக்கக் குளம் தொட்டு வளம் பெருக்கிய திறன் காணல்.
- ''வினையே ஆடவர்க்கு உயிரென்றும், மகளிர்க்கு ஆடவரே உயிரென்றும்'' வாழ்ந்த இன்பியல் வாழ்க்கை முறைகளை வளப்படுத்தியமைத்தல்.

**ஆய்வேட்டின் அமைப்பு**

''சங்க இலக்கியத்தில் வாழ்வியல் சிந்தனைகள்'' என்னும் இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களைக் கொண்டமைகின்றது.

முன்னுரையில் ஆய்வுத் தலைப்புத் தேர்வு, ஆய்வின் எல்லை, முதன்மை, துணைமை ஆதாரங்கள், ஆய்வின் கருதுகோள், ஆய்வின் நோக்கம், ஆய்வேட்டின் அமைப்பு ஆகியவை சுட்டப்பெறுகின்றது.

**இயல் ஒன்று**

**''சங்க இலக்கியப் பாடல்கள் - ஒரு பார்வை''** இவ்வியலில் ஆய்வுக்கு முதன்மை ஆதாரங்களான பாட்டும் தொகையும் என்ற பதினெண் நூற்கள் (2381) அவற்றின் பொது மற்றும் சிறப்புத் தன்மைகள், அகம், புறம் பற்றிய சிந்தனைகள், பாடல்களில் இடம் பெற்றுள்ள உள்ளுறை, இறைச்சி, உவமைகள் பற்றிய கருத்துகள் யாவும் தொகுத்துரைக்கும் இயலாக அமைகின்றது.

**இயல் இரண்டு**

**''சங்க கால மகளிர் வாழ்க்கை''** இவ்வியலில், உயிரினும் சிறந்தது நாணம் என்ற மகளிரின் கற்பு வாழ்க்கை முறை; வாழ்வியல் சூழல், கல்வி, இசைப் பயிற்சியில் நாட்டம்; மகளிர் காதல் நெறியும், கற்பு வாழ்க்கை முறையும், அன்பின் பெருக்க உணர்வும், தாயன்பும், தாய் சேய் உறவு முறைகளும், மகளிர் வீர நிலையும் எடுத்துரைக்கும் இயலாக அமைகின்றது.

**இயல் மூன்று**

**"சங்ககால ஆடவர் வாழ்க்கை"** இவ்வியல், வினையே ஆடவர்க்கு உயிர் என்று உயரிய வாழ்க்கை வாழ்ந்த ஆடவரின் வீரத்தின் சான்றாய் விளங்குகின்றது. ஒவ்வொரு நிலத்தும் ஆடவரின் வாழ்க்கை முறைகள், செய்த தொழில்கள், அரசுப் பணிகளிலும், பிற பணிகளிலும் சமுதாயம் தழைக்கவும் குடும்பம் தழைக்கவும் ஆடவர்கள் துணை நின்றமை போன்றவற்றையும் தலைவனின் செயல்பாடுகள், அன்பின் பெருக்கம், சமுதாய நலன், குடும்ப உறவில் பங்கு கொள்ளல், பொருளீட்டல், பகைமேற் செல்லல் போன்ற நிலைப்பாடுகளையும் சுட்டும் இயலாகவும் அமைகின்றது.

**இயல் நான்கு**

**"சங்க இலக்கியத்தில் வாழ்வியல் சிந்தனைகள்"** இவ்வியலானது மக்கள் வகுத்தமைத்த பாகுபாடுகள், நோயற்ற வாழ்க்கை நெறிமுறை, உணவு முறைகள், மணப்பொருட்களில் நாட்டம், வளமான வாழ்க்கை முறை, வணிகம், மன்னன் மக்களின் கூட்டு வாழ்க்கைமுறை, பல்துறை அறிவு, குடும்ப அமைப்பு முறை, தொழிலடிப்படை, கொடை நலன், விழாக்கள் சடங்குகளில் மக்கள் கொண்ட ஈடுபாடுகள், வான நூற்புலமை போன்ற நிலைகளில் மக்களின் பண்பாட்டு, சமுதாய வளர்ச்சி நிலைகளைத் தொகுத்துரைக்கும் இயலாக அமைகிறது.

**இயல் ஐந்து**

**"மக்களின் மேம்பாடு"** என்னும் இவ்வியல் தனிமனிதனின் வளர்ச்சி, சமுதாய மேம்பாடு, மக்களின் மனவளம், பொருட் சிறப்பு, நல்வினை,

தீவினைப் பாகுபாடுகள், மனை வாழ்க்கை, தலைவன் தலைவியின் அன்பு நிலை, மக்கட்பேறு, குடிப்பெருமை, வளமார் வாழ்க்கை, நட்பு நிலை, சான்றோர் திறன், நன்றி மறவாமை, வறுமையிலும் செம்மை, கொடைநலன், மக்களின் கடமைகள் ஆகியன மேம்பாடு அடைவதற்கான வழி என்பதனைத் தொகுத்தும் பகுத்தும் வழங்கும் இயலாக அமைகின்றது.

**முடிவுரை**

'சங்க இலக்கியத்தில் வாழ்வியல் சிந்தனைகள்' என்ற இவ்வாய்வேட்டின் வழியே கண்டறியப்பட்ட ஆய்வுப் பயன்களைத் தொகுத்துரைக்கும் இயலாக முடிவுரை அமைகின்றது.

மேலாய்வுக் களங்கள் சுட்டப் பெறுவதோடு, பின்னிணைப்பில் ஆய்வுக்குப் பயன்பட்ட முதன்மை ஆதார நூல்களும், துணை நூல்களும் நிரல்பட அகரவரிசைப்படுத்தப்பட்டுள்ளது.

# இயல் இரண்டு

## சங்க கால மகளிர் வாழ்க்கை

### முன்னுரை

சங்க காலம் தமிழ் இலக்கிய வரலாற்றின் பொற்காலமாகும். சங்கப்பாக்கள் பழந்தமிழ்ப் பண்பாட்டின் நிலைக்களனாய் அமைபவை. சங்க கால மகளிரின் அரும்பெரும்பண்புகளில், பெண்களே வாழ்வின் கண்கள் என வாழ்ந்தனர். ‘பெண் இன்றேல் ஆணில்லை. ஆணின்றேல் பெண் இல்லை’, என்றபடி ஆணும் பெண்ணும் இணைந்து இல்லற நெறிப்படுகின்ற வாழ்வே முழுமையான வாழ்வு எனக் கொள்ளப்பட்டது.

மக்களோடு மகிழ்ந்து மனையறம்’ காத்து என்பர் நம்பியகப் பொருள் ஆசிரியர். இது குறித்தே, ‘மனைக்கு விளக்கம் மடவார்; மடவார் தமக்குத் தகைசால் புதல்வர்’, என்ற மொழியும் எழுந்தது. உமையொரு பாகனாய்ச் சிவபெருமான் கொலு வீற்றிருப்பதும் தமிழர்தம் வாழ்வின் தத்துவத்தினை நன்கு விளக்கும். சங்ககால மகளிர் வாழ்க்கை நிலையினை இவ்வியல் ஆராய்கின்றது.

### தொல்காப்பியர் காலம்

‘மாதர் காதல்’ என்றார் தொல்காப்பியனார். மேலும் அவர் பெண்ணுக்குப் பின்வரும் பண்புகள் இன்றியமையாதன என்றும் குறிப்பிட்டார்.

**"உயிரினும் சிறந்தன்று நாணே, நாணினும்**
**செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று"**[1]

என்று தொல்காப்பியக் களவியல் நூற்பா கூறுவதினின்றும் 'மகளிர்க்கு உயிரைக் காட்டிலும் நாணம் சிறந்தது. அந்த நாணத்தைக் காட்டிலும் கற்பு நனி சிறந்தது' என்பது புலனாகின்றது.

பிறிதோரிடத்தில் 'ஆண்களுக்குப் பெருமையும் உரனும் வேண்டப்படுவன' என்று குறிப்பிட்ட தொல்காப்பியனார், பெண்களுக்கு,

**"அச்சமும் நாணும் மடனுமுந் துறுதல்**
**நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப"**[2]

என்றார்.

இதன் வழி, அச்சம், நாணம், மடம், என்பன மகளிர்க்குரிய பண்புகளென்பது தெரிகின்றது. மகளிர்தம் மனத்தில் குறிப்பின்றித் தோன்றும் நடுக்கம், அச்சம் என்று கூறப்படும். பெண் தன்மையோடு பொருந்தாத புறச் செயல்களில் ஒழுகாது ஒதுங்கி வாழ்தலே நாணம் எனப்பட்டது.

இவ்வுலகினையும் இதில் தோற்றங் கொண்டுள்ள பொருள்களின் இயல்பினையும் பிறர் தமக்கு அறிவிக்க அதனை அறிந்துணர்ந்து பின்னர் அவ்வாறு அறிவால் மேற்கொண்ட கொள்கையினைச் சிறிதும் நெகிழவிடாது போற்றுதல் மடன் என்று கூறப்படும்.

இவ்வாறு பெண்கள் ஆடவர் அவாவுறும் நற்குண நற்செய்கைகளில் மேம்பட்டிருக்க வேண்டும் ஆடவர் மகளிர்பால் குடி கொண்டிருக்க வேண்டும் என்று விரும்பிப் போற்றும் பண்புகளைத் தொல்காப்பியனார்,

**''செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும்**
**அறிவும் அருமையும் பெண்பாலான்''[3]**

என்று பாராட்டுவர்.

இதற்கு விளக்கம் கூறவந்த உரையாசிரியர் இளம்பூரணர், ''செறிவு என்பது அடக்கம்; நிறைவு என்பது அமைதி; செம்மை என்பது மனங்கோடாமை; செப்பு என்பது சொல்லுதல்; அறிவு என்பது நன்மை பயப்பனவும் தீமை பயப்பனவும் அறிதல், அருமை என்பது உள்ளக்கருத்து அறிதலருமை'' என்று தம் நுண்மாண் நுழைபுலம் விளங்கும் வண்ணம் உரைவிளக்கம் தந்துள்ளார்.

கண்ணிறைந்த பேரழகு கொண்டு ஆடவர் உளங் கவர்ந்து நிறையும் நங்கை 'காரிகை' எனப்பட்டாள். இது பற்றியே மணிமேகலையாசிரியர் 'சீத்தலைச் சாத்தனார்' தம் காவியத் தலைவி மணிமேகலையைச் சுதமதி வாயிலாகப் பின்வருமாறு அறிமுகப்படுத்தியுள்ளார்.

**''மணிமேகலை தன் மதிமுகந் தன்னுள்**
**அணிதிகழ் நீலத் தாய்மல ரோட்டிய**
**கடைமணி யுகுநீர் கண்டன னாயிற்**
**படையிட்டு நடுங்குங் காமன்''[4]** என்கிறார்.

பெண்ணொருத்தியின் அழகினை மதுரை சேந்தன் பூதன் என்ற புலவர்,

**''பூவொடுபுரையும் கண்ணும் வேய் என**
**விறல் வனப்பு எய்திய தோளும் பிறை என**
**மதி மயங்குறூஉம் நுதலும், நன்றும்**
**நல்லமன் வாழி – தோழி ! – அல்கலும்**

**தயங்குதிரை பொருததாழை வெண்பூக்**
**குருகுஎன மலரும் பெருந்துறை**
**விரிநீர்ச் சேர்ப்பனொடு நகா அ ஊங்கே''[5]**

இரவுதோறும் விளங்கும் அலைகளால் மோதப்பெறும் தாழையினது பெண்மையான பூ, நாரையைப் போல, மலர்வதற்கு இடமாகிய, பெரிய துறைகளோடு கூடிய, அகன்ற நீர்ப்பரப்பினையுடைய நெய்தல் நிலத்தலைவனோடு கூடி மகிழ்வதற்கு முன்பு, என் கண்களும் பூவைப்போல விளங்கும் என் தோள்களும், மூங்கில் என்னும்படியாக எல்லோரையும் வெற்றி கொள்ளும் அழகினையுடையன. என் நெற்றியும் பிறை போலிருந்த வளர்ந்த மதியை மயங்கச் செய்யும். இங்ஙனம் யாவும் பெரிதும் நல்லனவாய் இருந்தன. அது இப்பொழுது கழிந்தது என்று வருணித்துள்ளார்.

மகளிர் மென்மையான உடலமைப்பினைப் பெற்றவர். புறவுலகின் பொய்ம்மையும் சூதும் அறியாதவர். உலகின் இடையூறு நிலைகளையும் விலங்கு முதலியவற்றால் நேர்ந்திடும் இடுக்கண்களையும் உணராதவர். ஆனால் உள்ளத் திண்மையால் தம்மைத் தாமே பாதுகாத்துக் கொண்டு இல்லறத்திறனை நல்லறமாக ஓம்பும் ஆற்றல் சான்றவர்கள் பெண்களே.

இவ்வாறு மகளிர் பாற் காணத்தகும் மென்னீர்மையினைச் 'சாயல்' என்ற சொல்லால் நற்றமிழர் வழங்கினர். சாயலாகிய மென்மைத் தன்மையினை இயல்பாகப் பெற்றிருத்தலின் பெண்டிர் பண்டு 'மெல்லியலார்' எனப் பொருட்செறிவோடு வழங்கப் பெற்றனர். இத்தகு மென்மை, வன்மையினைத் தடுத்து நிறுத்தும் ஆற்றல் சான்றது.

தலைவன் பாங்கனிடம், தன்னால் காணப்பட்டவள் யாவள் என்பதையும் அவளால்தான் உற்ற இடுக்கண் எத்தகையது என்பதனையும் குறிப்பிட்டுத் தன்னுடைய குறையை முடிக்குமாறு வேண்டுகிறான் தலைவன். இதனை,

> **''மால்வரை இழிதரும் தூவெள் அருவி**
> **கல் முகைத் ததும்பும் பல்மலர்ச் சாரற்**
> **சிறுகுடிக் குறவன் பெருந்தோட்குறுமகள்**
> **நீர் ஓரன்ன சாயல்**
> **தீ ஓரன்ன என் உரன் அவித்தன்றே''[6]**

குறிஞ்சித்திணையில் அமைந்த இப்பாடல் குறவனுடைய பெரியதோளை மென்மைத் தன்மையுடைய குறமகளின் மென்சாயல் அழித்தது என்ற குறுந்தொகைப் பாடலின் அடிகள் இக்கருத்து நுட்பத்தினைப் புலப்படுத்தி நிற்கிறது.

**வாழ்வியல் சூழல்**

பெண்ணின் வாழ்வினை இரு பிரிவாகப் பகுத்துணரலாம். திருமணத்திற்கு முன்னர்த் தன் பெற்றோர் வீட்டில் வாழும் களவு வாழ்வு; திருமணம் முடித்துத் தன் காதற் கணவன் வீட்டில் வாழும் கற்பு வாழ்வு என இருவகைப்படுத்திக் காணலாம்.

**மகளிர்க் கல்வி**

மகளிர் அக்காலத்தே கல்வி கேள்வியில் வல்லவராயிருந்தனர். ஆடவர் பயிலுவதற்குரிய கல்வி வேறு, பெண்டிர் பயிலுவதற்குரிய கல்வி வேறு, போர், தூது, காவல், பொருளீட்டல் முதலிய புறத்துறைகள் ஆண்

மகனுக்குரிய துறைகளாகும். எனவே, இத்துறைக் கல்வியே ஆடவர்க்கு வேண்டப்படுவதாயிற்று.

மகளிர் தம் குடும்பப் பாங்கிற் கேற்பவும் பண்பிற்கேற்பவுமான கல்வி பயின்றனர். தம் குடும்பப் பணி தடையின்றி நடைபெறத் துணைகோலும் கல்வியினை வீட்டிலிருந்தவாறே மகளிர் பயின்றனர். அவர் கற்ற கல்வி அவர்தம் உடலுறுப்புகளுக்கு இயைந்த கல்வியாகவும், பிற்காலத்தில் அவர் மனை வாழ்வினை மாண்புற நடத்துதற்கு ஏற்பத் துணைச் செய்வதாகவும் இருந்தது.

மகளிரைப் பொறுத்தவரை அவர்தம் குடும்பமே நல்ல பல்கலைக் கழகமாகவும், அவர்தம் தாயரே சிறந்த பேராசிரியராகவும் விளக்கமுற்றனர். அக்கால மகளிர் இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழ்த்துறைகளையும் கற்றுத்துறைபோய் வித்தகராயிருந்தனர்.

இளமையிலேயே நிறைகல்வியுற்றவரை ‘முதுக்குறைவி’ என வழங்கினர். ‘முதுக்குறைந்தனளே விழவுமுதலாட்டி’ என்ற தொடர் சங்க இலக்கியங்களில் பல இடத்தும் வரக் காணலாம். கண்ணகியும் சிலப்பதிகாரத்தில் ‘சிறுமுதுகுறைவி’ எனக் கோவலனால் பாராட்டப்படுகின்றாள்.

**“சிறுமுதுக் குறைவிக்குச் சிறுமையும் செய்தேன்!”**[7]

என்றுரைப்பதால் அறியலாம்.

பெண்கல்வி சிறந்த தமிழ் நாடாகச் சங்க காலத் தமிழகம் விளங்கியது சான்றாகப் பெண்பாற் புலவர் சிலர் பெயர்கள் வருமாறு: அஞ்சியத்தை மகள்

நாகையார், அள்ளூர் நன்முல்லையார், ஆதிமந்தியார், ஊட்டியார், ஊண்பித்தையார், ஒக்கூர் மாசாத்தியார், ஔவையார், கச்சிப்பேட்டு நன்னாகையார், காக்கைப்பாடினியார் நச்செள்ளையார், காவற்பெண்டு, குறமகள் இளவெயினியார், நக்கண்ணையார், நெட்டிமையார்.

நெடும்பல்லியத்தை, பாரி மகளிர், பூங்கணுத்திரையார், பூதப்பாண்டியன் தேவி, பெருங்கோப்பெண்டு, பேய் மகள் இளவெயினி, பொத்தியார், போந்தைப் பசலையார், மாறோக்கத்து நப்பசலையார், வெண்ணிக் குயத்தியார், வெள்ளிவீதியார், வெறி பாடிய காமக்கண்ணியார் முதலியோர் அக்காலப் புலமை மெல்லியலாரிற் சிலராவர்.

இவர்களில் அரசனுக்கே அறவுரை கூறித் திருத்திய ஔவையார் போன்ற பெண் பாற்புலவர்களை மறக்கவும் இயலாது. ‘காக்கை பாடினியம், சிறு காக்கை பாடினியம்’ என்னும் இரண்டு யாப்பிலக்கண நூல்கள் காக்கை பாடினியார் என்னும் பெண்பாற்புலவரால் இயற்றப் பெற்றனவாக அறியும் போது மகளிர்தம் கல்வியின் மாண்பு தெற்றெனப் புலனாகின்றது.

**இசை நாட்டம்**

ஆடவரினும் பெண்டிரே இசைப் பயிற்சி மிக்கிருந்தனர். அவர்கள் குரல் இயற்கையாகவே இனிமை நிரம்பியிருந்தது. எனவே இசைத் தமிழ், மகளிர்வழிப் பெரிதும் வளர்ந்தது.

தாலாட்டுப்பாடல் தாய்மார் வளர்த்த இயலிசைத் தமிழ் இலக்கியம், யானை முதலிய காட்டுவிலங்களும் மறவர்களும் அவர்தம் இசைக்கு

வயப்பட்டுத் தம் கொடூரத் தன்மை மறந்து நின்றமையைச் சங்க இலக்கியங்கள் நமக்கு நன்கு புலப்படுத்துவனவாம்.

**"ஆறுஅலை கள்வர் படைவிட அருளின்**
**மாறுதலை பெயர்க்கும் மருவுஇன் பாலை"**[8]

எனப் பொருநராற்றுப்படை குறிப்பிடுகின்றது.

**தினைப்புனங்காத்தல்**

மலைவாழ் மகளிர் தினைப் புனங்களில் கிளியோட்டித் தினைப்புனத்தினில் விளைந்த முற்றிய தினைக் கதிர்களைக் காத்தனர் என்பது சங்க இலக்கியத்தில் பலவிடங்களில் பேசப்படுகின்றது, சான்றாக

**"சுனைப்பூக் குற்றுத் தொடலை தைஇ**
**புனக்கிளி கடியும் பூங்கட் பேதை**
**தான் அறிந்தன்றோ இலலோ – பானாள்**
**பள்ளி யானையின் உயிர்த்து, என்**
**உள்ளம் பின்னும், தன் உழையதுவே"**[9]

என்று சுனைப்பூவினைப் பறித்து மாலை தொடுத்தலும் தினைப்புனத்தில் கிளி கடிதலும் மலைவாணர் மகளிரின் விளையாட்டுகள் எனக் குறிப்பிடுகின்றது பொதுவாக இளமகளிர் அக்காலத்தே கவலையிற் தோயாமல் எஞ்ஞான்றும் மகிழ்ச்சியில் திளைத்திருந்தனர் என்பதனை நற்றிணைப்பாடல் ஒன்று கொண்டு அறியலாம்.

**"விளையாடு ஆயமொடு ஓரை ஆடாது,**
**இளையோர் இல்லிடத்து இற்செறிந்திருத்தல்**
**அறனும் அன்றே, ஆக்கமுந் தேய்ம்' என**
**குறு நுரை சுமந்து நறு மலர் உந்தி,**
**பொங்கி வரு புதுநீர் நெஞ்சுஉண ஆடுகம்"**[10]

இப்பகுதிகொண்டு, மகளிர் வீட்டின் வெளியே சென்று விளையாடாமலிருப்பது அறமாகாது என்பதும், அதனால் செல்வமும் தேய்ந்துவிடும் என்பதும் தெரிய வருகின்றன.

விளையாடும் மகளிர் கூட்டத்தினைக் குறிப்பிடும் பொழுதெல்லாம் சங்க காலப் புலவர்கள் 'ஓரையாயம்' என்றும், 'பொய்தன் மகளிர்' என்றும் குறிப்பிடுகின்றனர். பஞ்சாய்க் கோரைப்புல் கொண்டு செய்யப்பட்ட பாவை கொண்டு மகளிர் அந்நாளில் விளையாடிய விளையாட்டு 'ஓரை' எனப்பட்டது.

வண்டலயர்தல், சிற்றில் இழைத்தல், துணங்கையாடல், குரவையாடுதல் முதலிய விளையாட்டுகள் மகளிர் விளையாட்டுகளாகச் சங்க இலக்கியத்தில் குறிப்பிடப் பெறுகின்றன.

**''பாசவல் இடித்த கருங்காழ் உலக்கை**
**ஆய்கதிர் நெல்லின் வரம்புஅணைத் துயிற்றி**
**ஒண்தொடி மகளிர் வண்டல் அயரும்''**[11]

என்று குறுந்தொகை விளக்குகின்றது.

**''அவல் எறி உலக்கை வாழைச் சேர்த்தி**
**வளைக் கை மகளிர் வள்ளை கொய்யும்,**
**முடந்தை நெல்லின் விளைவயல்''**[12]

என்று குறிக்கும் பாடற்பகுதியும் நெய்தல் நிலமகளிர் விளையாட்டினைக் குறிப்பிடும்.

தாம் வளர்க்கும் பாவைபாற் பேரன்பு செலுத்தினர் பெண்கள். தாம் வளர்க்கும் பாவைக்கு ஏதேனும் தீங்கு நேரிடின் அதனைப் பொருட்படுத்தித் தாங்களும் துன்புறுவர் என்பதனைக்

**"தாதின் செய்த தண்பனிப் பாவை**
**காலை வருந்தும் கையாறு ஓம்பு' என,"**[13]

குறுந்தொகை சுட்டுகின்றது. அப்பெண்கள் பாவையைத் தம் மடிமீது கிடத்திப் பாலூட்டி மகிழ்ந்து பிற்கால வாழ்வின் நடைமுறைக்குரிய பயிற்சியினை இக்கால விளையாட்டு வழியினிலேயே பெறுகிறார்கள் என்பதனை ஐங்குறுநூற்றின்கண் அமைந்துள்ள அழகிய பாடல் விளக்குகின்றது.

**"கண்டிகு அல்லமோ, கொண்க ! நின் கேளே ?**
**உறாஅ வறுமுலை மடாஅ**
**உண்ணாப் பாவையை ஊட்டுவோளே"**[14]

இக்காலத்தும் இளமகளிர் மரத்தாலியன்ற பொம்மைகள் இரண்டனுக்கு, மணமகன் மணமகள் என்ற பெயர் சூட்டி மணவினை நடத்தி மகிழ்வதனைக் காணலாம். அதுபோன்றே சங்க காலத்திலும் மகளிர் பஞ்சும், பட்டும், பூந்தாதும் கொண்டு தாம் செய்த அழகிய பொம்மைகளுக்குப் பெயர்கள் இட்டு, பல வீடுகளுக்குச் சென்று பிச்சை எடுத்து வந்து பிறர்க்கு வழங்கி மணவிழா விளையாட்டு நிகழ்த்தினார் என்பதனைக் கலித்தொகை குறிப்பிடுகின்றது.

சிலம்பும் வளையும் அணிந்த இளமகளிர், பொன்னாற் செய்த கழற்காய் கொண்டு, மணல் மேடுகளிலே இருந்து விளையாடுகிறார்கள் என்பதனை,

**''அடுநை ஆயினும் விடுநை ஆயினும்**
**நீ அளந்து அறிதி, நின்புரைமை – வார் கோல்**
**செறி அரிச் சிலம்பின், குறுந் தொடி மகளிர்**
**பொலம் செய் கழங்கின் தெற்றி ஆடும்**
**தண் ஆன் பொருநை வெண் மணல் சிதைய**
**கருங் கைக் கொல்லன் அரம் செய் அவ்வாய்**
**நெடுங் கை நவியம் பாய்தலின், நிலை அழிந்து**
**வீ கமழ் நெடுஞ் சினை புலம்ப, காவு தொறும்**
**கடி மரம் தடியும் ஓசை தன் ஊர்**
**நெடு மதில் வரைப்பின் கடி மனை இயம்ப**
**ஆங்கு இனிது இருந்த வேந்தனொடு, ஈங்கு நின்**
**சிலைத் தார் முரசம் கறங்க**
**மலைத்தனை என்பது நாணுத் தகவு உடைத்தே''**[15]

என்ற பாடல் வழியே அறிய முடிகின்றது.

**''பொய்தல மகளையாய் பிறர்மனைப் பாடி நீ**
**எய்திய பலர்க்கு ஈத்த பயம் பயக்கிற்பதோ**
**....................................................**
**சிறு முத்தனைப் பேணி, சிறுசோறு மடுத்து, நீ**
**நறு நுதலவரொடு நக்கது நன்கு இயைவதோ''**[16]

என்று கலித்தொகையும் சிறுமகளிர் வீட்டின் முற்றத்தில் கழங்காடுகின்றனர் என்றுரைக்கின்றது.

மேலும்,

**''குறுந்தொடி மகளிர்**
**மணலாடு கழங்கு''**

மகளிர் புதுப்புனலாடியும் மகிழ்கின்றனர் என்றுரைக்கின்றது.

**''உரையினி மாதராய் உண்கண் சிவப்பப்,**
**புரை தீர் புனல்குடைந்து ஆடின்''**[17]

என்று சிலம்பு குன்றக்குரவையும் எடுத்துரைக்கின்றது.

**''வணங்கிறைப் பணைத்தோ ளெல்வளை மகளிர்**
**துணைங்கை நாளும் வந்தன''**

என்ற பாடற்குறிப்பு மகளிர் நிகழ்த்திய துணங்கைக் கூத்தினைக் குறிப்பிடும். அந்நாளில் ஆடவர் விளையாடாமல் மகளிர் மட்டுமே விளையாடும் விளையாட்டு மகளிர் பூப்பந்தாகும். தங்கள் காற்சிலம்பு 'கலீர், கலீர்' என ஒலிக்க, அவர்கள் பந்தாடிப் பின்னர் முன்றிலின் மணற்பரப்பிலிருந்து தங்கள் வளையல்கள் 'கலகல' வென்று ஒலி செய்யக் கழற்காய் விளையாட்டு ஆடுவார்கள்.

**''தமனியப் பொற்சிலம்பு ஒலிப்ப, உயர்நிலை**
**வான்தோய் மாடத்து, வரிப்பந்து அசைஇ,**
**கைபுனை குறுந்தொடி தத்த, பைபய,**
**முத்த வார்மணல் பொற்கழங்கு ஆடும்''**[18]

என்று குறிப்பிடுவது நோக்கத்தக்கது.

'தைநீராடல்' என்ற நோன்பினைத் திருமணமாகாத மகளிர் மேற்கொண்டனர். வைகறையில் நீராடி இறைவனைப் பாடித் தொழுது பரிசாக நல்ல கணவனை வேண்டுகின்றனர்.

**''வை எயிற்றவர் நாப்பண், வகை அணிப்பொலிந்து, நீ**
**தையில் நீர் ஆடிய தவம் தலைப்படுவாயோ''**[19]

என்கிறது கலித்தொகை.

இதனால் திருமணத்திற்கு முன்னர் மகளிர், உடலுக்கு உறுதி தந்து, உள்ளத்திற்கு உவகை ஊட்டி, வாழ்விற்குப் பயிற்சி நல்கும் நல்ல விளையாட்டுகளையே தேர்ந்தெடுத்து விளையாடினர்.

பருவ வயது வந்துற்ற பெண்கள் தங்கட்கேற்ற காளைகள்பால் காதல் கொண்டார்கள். அக்கால ஆடவனுக்கு வீரமே வாழ்வாக விளங்கியது. 'பொன்முடியார்' என்ற பெண்பாற்புலவர் வயது நிறைந்த இளைஞன் ஒருவனைக் குறிப்பிடுகின்ற பொழுது,

**''ஈன்று புறந்தருதல்என் தலைக்கடனே ;**
**சான்றோர் ஆக்குதல் தந்தைக்குக் கடனே ;**
**வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே ;**
**தண்ணடை நல்கல் வேந்தற்குக் கடனே**
**ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கி**
**களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே''**[20] என்பார்.

முல்லைநில மகளிர் தம்மால் விரும்பி வளர்க்கப்பெற்ற வலிய எருதுகளைப் பிடித்து அடக்கும் அஞ்சாநெஞ்சமும் ஆற்றலுமுடைய காளையரையே மணக்க விரும்பினர். இதனை,

**"கொல் ஏற்றுக் கோடு அஞ்சுவானை மறுமையும்**
**புல்லாளே ஆயமகள்"**[21]

என்று 'முல்லைக்கலி' அழகுறக் குறிக்கின்றது.

இந்நாளைப் போல் அல்லாமல், அக்காலத்தே மகளிரை மணந்து கொள்ள ஆடவரே மகளிர்தம் அணிகலன்களுக்கெனப் பெரும்பொருளினைப் பரிசமாகத் தந்தார்கள் என்பதனை அறிந்து மகிழ்ந்து போற்றுகின்றோம். அதற்காகத் தகுதியில்லாதவன் ஒருவன் பெரும்பரிசுப் பொருளைக் கொணர்ந்து தந்தாலும் தங்கள் மகளைப் பழந்தமிழ்ப் பெருமக்கள் மணஞ்செய்து கொடுக்க மறுத்துவிட்டனர்.

இதற்குப் பின்வரும் புறநானூற்றுப் பகுதி சான்று கூறும்.

**"முழங்குகடல் முழவின் முசிறி அன்ன,**
**நலம்சால் விழுப்பொருள் பணிந்துவந்து கொடுப்பினும்,**
**புரையர் அல்லோர் வரையலள் இவள் எனத்**
**தந்தையும் கொடாஅன்"**[22]

என்று குறிக்கின்றது.

சங்ககால மகளிர் இறை நம்பிக்கையுடையவர்கள். மணமாகாத மகளிர் முருகனை நோக்கி, 'யாம் எம் நெஞ்சமர்ந்த காதலரைக் கனவிற் கூடியுள்ளோம். அது பொய்யாகாமல் நனவின் கண்ணும் எம் திருமணத்தை முடித்து வைக்க வேண்டும்', என இறைஞ்சுகின்றனர்.

மணமான மகளிரோ தமக்கு நல்ல பிள்ளைகள் பிறக்க வேண்டுமென நோன்பு நோற்கின்றனர். மேலும் தம் கணவர் மேற்கொண்ட செயல்கள் செம்மை பெறவும். போரில் வெற்றி வந்தெய்தவும் வரமருள வேண்டும்

என்று திருமுருகனை ஒரு மணமாக இறைஞ்சி நிற்கின்றனர். திருப்பரங்குன்றத்திலே நடைபெறும் வழிபாடு இது:

**''அருவரைச் சேராத் தொழுநர்**
**கனவின் தொட்டது கை பிழையாகாது**
**நனவின் சேஎப்ப நின் நளி புனல் வையை**
**வருபுனல் அணிக என வரம் கொள்வோரும்**
**'கரு வயிறு உறுக எனக், கடம்படுவோரும்**
**'செய் பொருள் வாய்க்க எனச் செவி சார்த்து வோரும்,**
**'ஐ அமர் அடுக' என அருச்சிப் போரும்''**[23]

என்கிறது பரிபாடல். பத்துப்பாட்டுள் ஒன்றான 'மதுரைக்காஞ்சி' கொண்டு சிவபெருமான், மாயோன், முருகன் முதலாய தெய்வங்களை மகளிர் வழிபட்ட செய்தியை அறியலாம். தாமரைப்பூவினைக் கையிலே பிடித்தாற்போலத் தாம் பெற்றெடுத்த அருமைக் குழந்தைகளைக் கையினால் தழுவியெடுத்துக்கொண்டு, தம் கணவருடன் பூசைக்குரிய பூவினையும் நறும்புகையினையும் எடுத்துக்கொண்டு திருக்கோயிலுக்குச் சென்று தெய்வத்தை வழிபட்டு நின்றனர்.

**''திண்கதிர் மதாணி, ஒண் குறு மாக்களை,**
**ஓம்பினர்த் தழிஇ தாம்புணர்ந்து முயங்கி,**
**தாது அணி தாமரைப் போது பிடித்தாங்கு,**
**தாமும் அவரும் ஓராங்கு விளங்கக்**
**காமர் கவினிய பேரிளம் பெண்டிர்,**
**பூவினர், புகையினர், தொழுவனர் பழிச்சிச்**
**சிறந்து புறங்காக்கும் கடவுட் பள்ளியும்''**[24]

என்கிறது மதுரைக்காஞ்சி.

நல்ல பண்புடைய பெண்மக்களைப் பெற வேண்டும் என்று கேட்டு இறைவன் திருவருளை இறைஞ்சுகின்றனர் என்பதனால் பெண்மக்கட் பேற்றின் சிறப்புப் புலனாகும். இதனை,

**''குன்றக் குறவன் கடவுள் பேணி**
**இரந்தனன் பெற்ற எல் வளைக் குறு மகள்''**[25]

என்னும் கபிலர் வாக்கால் உணரலாம்.

நல்ல ஒழுக்கம் நிறைந்த பெண் வைகறையில் துயிலுணர்ந்து தன் கணவனைத் தொழுதாள் என்று திருவள்ளுவர் குறிப்பிடுவார்.

**''தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுது எழுவாள்**
**பெய்யெனப் பெய்யும் மழை''**[26] என்பார்.

தன்னால் விரும்பப்பட்ட தலைவனையே தனக்கு வாழ்க்கைத் துணைவனாக அளிக்க வேண்டும் என்று தன் குல முதற்கடவுளாம் குமரனை நன்னீரும் நறுமலரும் கொண்டு இறைஞ்சுகின்றான் மலை வாழ் மங்கையொருத்தி வேண்டுவதை

**''குன்றக் குறவன் காதல் மட மகள்**
**மன்ற வேங்கை மலர் சில கொண்டு,**
**மலை உறை கடவுள் குல முதல் வழுத்தி''**[27]

என ஐங்குறுநூறு சுட்டுகின்றது.

இத்தகைய நல்ல பண்புகள் நிறைந்த தலைவி, தலைவன் பெற்ற பேறுகளில் தலைசிறந்த பேறாவாள், இது குறித்தே வள்ளுவரும்,

**''இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்**
**இல்லவள் மாணாக் கடை''**[28]

என்று குறிப்பிட்டார்.

'தூங்கலோரி' என்ற சங்க காலப் புலவரும் 'ஒரு பசுவினால் வரும் ஊதியத்தைக் கொண்டு உண்ணும் உணவையுடைய செல்வச்சிறப்பில்லாத இல்வாழ்க்கை, அழகையுடைய இளைய தலைவி வாழ்க்கைப்பட்டுப் புக்கனளாக இப்பொழுது விழாவையுடையதாயிற்று' என்று பாடுகின்றார்.

**''உடுத்தும், தொடுத்தும், பூண்டும் செரிஇயும்**
**தழை அணிப் பொலிந்த ஆயமொடு துவன்றி,**
**விழவொடு வருதி நீயே ; இஃதோ**
**ஓர்ஆன் வல்சிச் சீர்இல் வாழ்க்கை**
**பெருநலக் குறமகள் வந்தென**
**இனிவிழவு ஆயிற்று என்னும் இவ் ஊரே''**[29]

எனும் குறுந்தொகை சான்றாகும்.

அறிவாலும், அழகாலும், பண்பாலும், வயதாலும், குடிப்பிறப்பு, செல்வம் முதலியவற்றாலும் ஒத்த தலைமகனும் தலைமகளும் நல்லூழின் வழிப்பட்டுப் பிறர் கொடுக்கவும் எடுப்பவும் இன்றித் தாமே தமியராய்க் கூடுகின்றனர். அக்கூட்டத்திற்குப் பின்னர்த் தலைமகன் பிரிந்து சென்றுவிடுவானோ என்று தனக்கே இயல்பாகவுடைய அச்சங்கொண்டு கலங்குகின்றாள் தலைமகள்.

அப்பொழுது தலைவன் அவளை நோக்கி பின்வருமாறு தெரிவிக்கின்றான்: ''என் தாயும் உன் தாயும் ஒருவருக்கொருவர் எத்தகு உறவினர்? என் தந்தையும் உன் தந்தையும் எந்த முறையில் உறவினராவார்? இப்பொழுது பிரிவற்றிருக்கும் நீயும் நானும் முன்பு எவ்வாறு அறிவோம்? இப்பொழுதோவெனில், செம்மண் நிலத்திலே பெய்த மழைநீர்

அம்மண்ணோடு கலந்து அதன் தன்மையை அடைதல் போல அன்புடைய நம் நெஞ்சம் தாமாகவே ஒன்றுபட்டன'' என்று கூறுகின்றான். இதனை

**''யாயும் ஞாயும் யார் ஆகியரோ?**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்?**
**யானும் நீயும் எவ்வழி அறிதும்?**
**செம்புலப் பெயல் நீர் போல**
**அன்புடை நெஞ்ச தாம் கலந்தனவே''**[30]

எனக் குறுந்தொகை குறிப்பிடுவதைக் காணலாம்.

சங்க கால மகளிர் தம் தலைவன்பால் கொண்ட காதல் தலையாய காதலாகும். தன் நெஞ்சத்தைப் பிணித்தவனிடம் தலைவி எல்லையற்ற காதல் கொண்டிருந்தனள் என்பதனை நன்றாக அறியலாம். தலைவி தலைவன்பால் கொண்ட காதல், நிலத்தினும் பெரியதாய், வானினும் உயர்ந்ததாய், ஆழ்கடலினும் ஆழமுடைத்தாய் விளங்கியது.

தலைவன் நீண்ட நாட்களாகச் சந்தித்தபடியே திருமணம் பற்றிய சிந்தனை இல்லாமல் உள்ளான். இதனை தோழி உணர்ந்த நிலையில் தலைவன் சிறைப்புறமாக நிற்பது கண்டும் காணாதது போன்று தலைவனுக்குத் தலைவியின் மீது உண்மையான அன்பு இல்லை என்கிறாள். அது கண்ட தலைவி தலைவன் தன் மீது எல்லையற்ற அன்பு கொண்டுள்ளான் என்கிறாள். இதனை விளக்கும் வகையில் அமைந்த பாடல்,

**''நிலத்தினும் பெரிதே ; வானினும் உயர்ந்தன்று ;**
**நீரினும் ஆர்அளவின்றே – சாரல்**
**கருங்கோற் குறிஞ்சி பூக் கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே''**[31]

என்று தலைவனின் உயர் குணத்தைத் தலைவி தோழியிடம் குறிப்பிடுவதன் வாயிலாகத் தலைவன் தலைவி மீது கொண்டுள்ள காதல் புலப்படுகிறது.

தலைவி இப்பிறவியில் இறக்க அஞ்சுகின்றாள். அஃது இறப்புக்கு அஞ்சியன்று; இறப்பின், மறுபிறப்பிற் காதலனைக் கூட இயலுமோ என்ற உள்ளுணர்ச்சியில் அஞ்சுகின்றாள் எனப் புலவர் ஒருவர் நயமுறக் கூறுகின்றார்.

**"சாதல் அஞ்சேன், அஞ்சுவல் சாவின்**
**பிறப்புப் பிறிது ஆகுவது ஆயின்**
**மறக்குவேன் கொல், என் காதலன்' எனவே"**[32]

என்கிறாள் தலைவி.

இந்தப் பிறவி மட்டுமல்லாது எழுமையும் தொடரும் தன்மைத்து தலைவி தலைவன்பாற்கொண்ட காதல் என்பது பின்வரும் குறுந்தொகைப்பாடற் பகுதியால் விளங்குகின்றது.

**"இம்மை மாறி மறுமை ஆயினும்,**
**நீ ஆகியர் எம் கணவனை ;**
**யான் ஆகியர் நின் நெஞ்சு நேர்பவளே"**[33]

இத்தகு ஆராக் காதல் கொண்ட தலைவி தன் உள்ளம் கவர்ந்த கள்வனையே மணக்க விரும்புகின்றாள். அதற்கு ஏதேனும் இடையூறு நேர்ந்தால், அவனோடு உடன் போக்கிற்கு ஒன்றுபடுகின்றாள். தலைவனோடு சென்றவுடன்தான் தாய்க்கு அவள் காதல் நெஞ்சம் புலனாகின்றது.

'பாலையும் உண்ணாளாகி, பந்தையும் விரும்பாளாகி, முன்னர்த் தன்னோடு விளையாடும் மகளிர் கூட்டத்தோடு விளையாடிய தலைவி, இப்பொழுது வேனிலால் கரிந்த மலைப்பகுதியில் எவ்வாறு எளிதென உணர்ந்து சென்றாளோ!' எனக் கலக்கத்தோடு வியக்கின்றாள்:

> **"பாலும் உண்ணாள், பந்துடன் மேவாள்**
> **விளையாடு ஆயமோடு அயர்வோள் இனியே,**
> **எளிதுஎன உணர்ந்தனள் கொல்லோ முளிசினை**
> **ஓமைக்குத்திய உயர்கோட் ஒருத்தல்**
> **வேனிற் குன்றத்து வெவ்அறைக் கவர்அன்**
> **மழை முழங்கு கடுங்குரல் ஓர்க்கும்**
> **கழை திரங்கு ஆரிஇடை, அவனொடு செலவே"**[34]

என குறுந்தொகை குறிப்பிடுகின்றது.

இவ்வாறு காதலன் பின் சென்ற தலைவியைச் செவிலித்தாய் பின் தேடிச்செல்லும் பொழுது, வழியில் எதிர்ப்பட்ட முக்கோற்பகவரை - தவம் செய் அறவோரை வினவுகின்றாள்.

அதற்கு மறுமொழியாக அச்சான்றோர், "மலையிடை பிறந்த சந்தனமும், கடலிடைப் பிறந்த முத்தும், யாழிடைப் பிறந்த இசையும் முறையே பூசுவோருக்கும், அணிவோருக்கும், கேட்போருக்குமே இன்பம் பயக்குமே அல்லாது, தாம் பிறந்தவிடத்திற்குப் பயன் தாரா. அதேபோல் உன் மகளும் உனக்குப் பயனின்றிச் சிறந்த தலைவனைத் தேர்ந்து தெளிந்து அவன் பின்னே சென்றனள், அதுவே அவளுக்குரிய சிறப்பாகும். இம்மைக்கேற்ற அறமும் அஃதே என்று அறிவுரை புகன்றனர். இவ்வழகிய பகுதி கற்றார் ஏத்தும் கலித்தொகையில் வருகின்றது.

**''இறந்த கற்பினாட்கு எவ்வம் படரன்மின்**
**சிறந்தானை வழிபடஇச் சென்றனள்;**
**அறம் தலைப்பிரியா ஆறும் மற்று அதுவே''**[35]

பொழுது அக்கால மகளிரின் பண்பு கண்டு பாராட்டவும் செயலிழந்து நிற்கிறோம்.

மேலும்,

**''பிரசம் கலந்த வெண் சுவைத் தீம் பால்**
**விரி கதிர்ப் பொற்கலத்து ஒருகை ஏந்தி,**
**புடைப்பின் சுற்றும் பூந் தலைச் சிறு கோல்**
**உண் என்று ஒக்குபு பிழைப்ப தெண் நீர்**
**முத்துஅரிப் பொற்சிலம்பு ஒலிப்பத் தத்துற்று,**
**அரிநரைக் கூந்தற் செம் முது செவிலியர்**
**பரி மெலிந்து ஒழிய பந்தர் ஓடி**
**ஏவல் மறுக்கும் சிறு விளையாட்டி**
**அறிவும் ஒழுக்கமும் யாண்டு உணர்ந்தனள் கொல்?**
**கொண்ட கொழுநன் குடி வறன் உற்றென**
**கொடுத்த தந்தை கொழுஞ் சோறு உள்ளாள்**
**ஒழுகுநீர் நுணங்கு அறல் போல**
**பொழுது மறுத்து உண்ணும் சிறு மதுகையளே''**[36]

என்கிறது நற்றிணை.

இதுபோன்ற பிறதொரு தலைவி தன் தாய் வீட்டுத் தோட்டத்திலுள்ள தேன் கலந்த பாலைக்காட்டிலும் தலைவன் நாட்டிலுள்ள தழையையுடைய கிணற்றின் அடியிலுள்ள, மான் முதலிய விலங்குகள் உண்டு எஞ்சிய கலங்கல் நீரே இனியது என்று துணிகின்றாள்.

**‘‘அன்னாய் வாழி ! வேண்டு, அன்னை ! நம் படப்பைத்**
**தேன் யங்கு பாலினும் இனிய – அவர் நாட்டு**
**உவலைக் கூவற் கீழ**
**மான் உண்டு எஞ்சிய கலிழி நீரே’’**[37]

என்பதனை ஐங்குறுநூறு மூலம் அறியலாம்.

தொல்காப்பியனார் மகளிர்க்கு இன்றியமையாது இருக்க வேண்டிய பண்புகளாகப் பின்வருவனவற்றைக் கற்பியலில் குறிப்பிடுகின்றார்.

**‘‘கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்**
**மெல்லியல் பொறையும் நிறைவும் வல்லிதின்**
**விருந்துபுறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்**
**பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்’’**[38]

என்பார்.
தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார்,

**‘‘பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பென்னும்**
**திண்மை உண்டாகப் பெறின்?’’**[39]

என்றார். கொண்ட கொழுநன் கற்பித்த நெறியிலே நிற்றல் கற்பெனப்படும் என்கிறார். தொல்லாசிரியராம் தொல்காப்பியனார்,

**‘‘உயிரினும் சிறந்தன்று நாணே; நாணினும்**
**செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று’’**[40]

என்று குறிப்பிட்டுள்ளார். ‘கடவுள் சான்ற கற்பு’, ‘வடமீன் புரையுங் கற்பு’, ‘வறனொடும் வையகத்து வான் தரும் கற்பு’ என்று சங்க இலக்கியங்கள் கற்பின் மேம்பாடு பற்றிக் கூறுகின்றன.

சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகள், கவுந்தியடிகள் வாயிலாகக் கண்ணகியைப் பாராட்டும் பொழுது, ‘தன் துன்பத்திற்காக வருந்தாமல்

கணவன் துயர் குறித்தே வருந்தினாள்' என்றும், 'கற்புக்கடம் பூண்ட பொற்புடைத் தெய்வம் கண்ணகி போலப் பிறரைக் காணவிலாது', என்றும் குறிப்பிட்டுள்ளார். இதனை,

**''என்னொடு போந்த இளங்கொடி நங்கை – தன்**
**வண்ணச் சீறடி மண்மகள் அறிந்திலள்,**
**கடுங்கதிர் வெம்மையின் காதலன் தனக்கு**
**நடுங்குதுயர் எய்தி நாப்புலர வாடித்**
**தன் துயர் காணாத் தகைசால் பூங்கொடி,**
**இன் துணை மகளிர்க்கு இன்றி யமையாக்**
**கற்புக் கடம்பூண்ட இத்தெய்வ அல்லது**
**பொற்புடைத் தெய்வம் யாம்கண் டிலமால்''**[41]

என்கிறார் இளங்கோவடிகள்.

பொறையுடைமை என்ற பண்பு பெண்களுக்கு மிகவும் இன்றியமையாது வேண்டப்படும். இதனை,

**''அன்புடைக் கணவர் அழிதகச் செயினும்**
**பெண்பிறந் தோர்க்குப் பொறையே பெருமை''**[42]

என்று 'பெருங்கதை' குறிப்பிடுகின்றது. ''பூமியினும் பொறையுடையாள் எங்கள் தாய்'' என்று பாரதியாரும் பாடினார்.[43] தன் குழந்தையைத்தாய் அடித்தால், அது, 'அம்மா, அம்மா' என்று சொல்லியே அழுகின்றது. அது போன்றே தலைவியும், தலைவன் பல கொடுமை செய்தாலும் அவனை விட்டுப் பிரிய மறுக்கிறாள்.

**''தாய் உடன்று அலைக்கும் காலையும், வாய்விட்டு,**
**'அன்னாய் என்னும் குழவி போல,**
**இன்னா செயினும் இனிதுதலை யளிப்பினும்**

**நின்வரைப்பினள், என் தோழி ;**
**தன்உறு விழுமம் களைஞரோ இலளே!''[44]**

என்கிறது குறுந்தொகை.

தலைவன் பரத்தை வீடு நாடிச் சென்ற போதும் மனைவி அத்துன்பத்தைப் பொறுத்திருந்தாள். இதனைக் கற்பிற் சிறந்த கண்ணகியின் வாழ்வில் காண்கிறோம். மேலும்

**''சேக்கை இனியார்பால் செல்வான் மனையாளால்**
**காக்கை கடிந்து ஒழுகல் கூடுமோ ? கூடா ;**
**தகவுடை மங்கையர் சான்றாண்மை சான்றார்**
**இகழினும் கேள்வரை ஏத்தி இறைஞ்சுவார்''[45]**

என்கிறது பரிபாடல். இப்பகுதிக்குப் பின்வருமாறு பரிமேலழகர் உரை எழுதியுள்ளார்.

'பரத்தையர்பாற் சென்று தங்குபவனை அங்ஙனம் செல்லாமறகாத்தலும், சென்றானென்று நீக்கி ஒழுகுதலும் மனைவியாற் கூடுமோ? கூடா, சால்பு மிக்க கற்புடை மங்கையர் தம்மைக் கணவர் இகழ்ந்தாலும் தாம் அவரைப் போற்றுவர்'' என்று குறிப்பிட்டுள்ளார். இப்பகுதி கொண்டு சங்க கால மகளிரின் பொறுமைப் பண்பினையும், நற்குண மேம்பாட்டினையும் நாம் நன்றாக அறிந்து கொள்ள முடிகிறது.

## விருந்து போற்றல்

விருந்து போற்றும் வழக்கம் சங்க கால மகளிரிடம் சிறந்து விளங்கியது என்பதற்குப் பல சான்றுகளைக் காட்டலாம். 'விருந்தே புதுமை' எனக் கொண்டு விருந்தோம்பல் என்ற அதிகாரம் ஒன்றனை அமைத்து, வள்ளுவர்

வழி வழி வரும் விருந்தோம்பற்பண்பின் சிறப்பு வழங்கியுள்ளார். இச்சிறப்பினை,

**''மறப்பு அரும் கேண்மையொடு அறப்பரி சாரமும்**
**விருந்து புறந்தருஉம் பெருந்தண் வாழ்க்கையும்''[46]**

என்று சிலம்பு. மனையறம்படுத்த காதை கூறுகிறது.

**''அறவோர்க்கு அளித்தலும், அந்தணர் ஓம்பலும்,**
**துறவோர்க்கு எதிர்தலும், தொல்லோர் சிறப்பின்**
**விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை''[47]**

என்று கண்ணகியும் விருந்தின் சிறப்பைக் கொலைக்களக் காதையில் கண்ணகி வாயிலாக இளங்கோ எடுத்துக் காட்டுகிறார்.

சீதையானவள் அசோகவனத்தில் இருந்த போது

**''அருந்து மெல்லட காரிட**
**வருந்துமென் றழுங்கும்**
**விருந்து கண்டபோ தென்னுறு**
**மோவென்று விம்மும்;**
**மருந்து முண்டுகொல் யான்கொண்ட**
**நோய்க்கென்று மயங்கும்**
**இருந்த மாநிலஞ் செல்லரித்**
**திடவுமாண் டெழாதாள்''[48]**

வருந்துவதனின்றும் விருந்தோம்பலின் சிறப்புத் தெரிய வருகின்றது. இத்தகு சிறப்பு மிகுந்த விருந்தோம்பலினைச் செறிந்த நள்ளிரவிலும் விரும்பி மேற்கொள்ளும் நங்கையை,

**"அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும்**
**முல்லை சான்ற கற்பின்,**
**மெல் இயற் குறுமகள்"**[49]

என்று நற்றிணையும் பாராட்டுகின்றது.

**பொருளின் இன்றியமையாமை**

**"பொருளிலார்க்கு இவ்வுலகம் இல்லை"**[50] என்று வள்ளுவரும்

**"இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவு"**[51]

என்று வரும் குறுந்தொகை முதலிய தொடர்கள் பொருளின் இன்றியமையாத தன்மையினைப் புலப்படுத்தும்.

**அன்பின் பெருக்கம்**

பொருள் தேடிவரத் தலைவன் செல்லும்பொழுது தலைவி தனித்துத் துயருறுகின்றாள். அவன் துன்பத்திற்குத் துணையாவதே தனக்கு இன்பந் தருவது என்கிறாள் சங்ககாலத் தலைவி.

**"துன்பம் துணையாக நாடின் அது அல்லது**
**இன்பமும் உண்டோ எமக்கு?"**[52]

என்கிறது கலித்தொகை.

மேலும்,

**"ஒன்றன் கூறுஆடை உடுப்பவரே ஆயினும்**
**ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை"**[53]

என்றும் கலித்தொகை குறிப்பிடுகிறது.

**பிரிவுத் துயரம்**

தலைவன் பிரிந்து செல்ல எண்ணிய போது தோழி,

> **''மற்று இவள் இன்உயிர் தருதலும் ஆற்றுமோ**
> **முன்னிய தேஎத்து முயன்று செய் பொருளே!''**[54]

என்று கலித்தொகையும்,

> **''செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்**
> **வல்வரவு வாழ்வார்க் குரை''**[55]

என்று வள்ளுவரும் குறிப்பிடுவார். ஆயினும் தலைவன் தன் பயணத்தை நிறுத்தவில்லை. எனவே, தலைவன் பிரிந்து சென்ற பொழுது தலைவி பெரிதும் கலங்கி,

> **''வாளற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற**
> **நாளொற்றித் தேய்ந்த விரல்''**[56]

என்ற இரங்கத்தகு நிலையில் நெஞ்சம் நடுங்குகின்றாள்.

கணவனைப் பிரிந்த மகளிர் கூந்தலுக்கு எண்ணெய் இட்டு வாருதல் இல்லை. 'நெய்யோடு துறந்த மையிருங் கூந்தல்'' என்று புறநானூறு கூறும். கோவலனைப் பிரிந்த கண்ணகி கால்களில் சிலம்பணியாமலும், இடையில் மேகலை அணியாமலும், செயற்கை அணிகலன்களை அணியாமலும், காதில் தோடில்லாமலும், கண்களில் மையில்லாமலும், நெற்றியில் திலகமில்லாமலும், முகத்தில் புன்முறுவல் இல்லாமலும், கூந்தலில் எண்ணெய் இல்லாமலும், 'கையற்று வருந்தினாள்' எனச் சிலப்பதிகாரம் கூறும்.

**''அம்செஞ் சீறடி அணிசிலம்பு ஒழிய**
**மென்துகில் அல்குல் மேகலை நீங்க,**
**கொன்றை முன்றில் குங்குமம் எழுதாள்,**
**மங்கல அணியின் பிறிது அணி மகிழாள்,**
**கொடுங்குழை துறந்து வடிந்துவிழ் காதினள்,**
**திங்கள் வாள்முகம் சிறுவியர்ப்பு இரியச்**
**செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் மறப்பப்,**
**பவள வாள்நுதல் திலகம் இழப்பத்**
**தவள வாள்நகை கோவலன் இழப்ப,**
**மைஇருங் கூந்தல் நெய்அணி மறப்பக்**
**கையறு நெஞ்சத்துக் கண்ணகி''**[57]

என்று இளங்கோவும் கண்ணகியை சிலம்பில் அந்திமாலைச் சிறப்புச் செய் காதையில் காட்டுகிறார்.

கணவரைப் பிரிந்த மகளிர் மாலைக்காலத்தில் தம் கையே புனையாக நெய்யை வார்த்து விளக்கு ஏற்றிக் கணவர் வரும் வரவு நோக்கி காத்திருந்தனர்.

**''கயல்ஏர் உண்கண் கனங்குழை மகளிர்**
**கையுரை ஆக நெய்பெய்து மாட்டிய**
**சுடர் துயர் எடுப்பும் புன்கண் மாலை,**
**அரும்பெறற் காதலர் வந்தென, விருந்து அயர்பு**
**மெய்ம்மலி உவகையின் எழுதரு**
**கண்கலிழ் உகுபனி அரக்குவோரே''**[58]

என்று குறுந்தொகையும்,

**''மனைக்கு விளக்கு ஆகிய வாணுதல் கணவன்**
**முனைக்கு வரம்பு ஆகிய வென்வேல் நெடுந்தகை,**
**நடுகல் பிறங்கிய உவல் இடு பறந்தலை,**

**புன்காழ் நெல்லி வன்புலச் சீறூர்க்**
**குடியும் மன்னும் தானே ; கொடி எடுத்து**
**நிறை அழித்து எழுதரு தானைக்குச்**
**சிறையும் நானே – தன் இறை விழுமுறினே''[59]**

என்று புறநானூறும் குறிப்பிடுகின்றது.

போர்மேற் சென்ற தலைவன் போரில் இறந்து விட்டால் மனைவி உயிர் வாழ ஒருப்படாள். கைம்மை நோன்பு நோற்று, அல்லியரிசியாலாகிய எளிய உணவை உண்டு, பாயின்றி வெறுந்தரையில் படுத்து, குளிர்நீரில் குளித்து வாழும் வாழ்வினை மகளிர் விரும்பினாரில்லை. இதனைப் பூதப்பாண்டியன் பெருந்தேவி கூற்றால் அறியலாம்.

**''அணில் வரிக் கொடுங் காய் வாள் போழ்ந்திட்ட,**
**காழ் போல் நல் விளர் நறு நெய் தீண்டாது,**
**அடை இடைக் கிடந்த கை பிழி பண்டம்,**
**வெள் எட் சாந்தொடு புளிப் பெய்து அட்ட**
**வேளை வெந்தை, வல்சி ஆகப்**
**பரற் பெய் பள்ளிப் பாய் இன்று வதியும்**
**உயவல் பெண்டிரேம் அல்லேம் மாதோ''[60]**

என்று கூறுவதோடு காதலனின் எரிதீ நள்ளிரும் பொய்கையாகக் குளிர்ந்து தோன்றும் என்று கூறியுள்ளார்.

**''பல் சான்றீரே ! பல் சான்றீரே !**
**செல்க எனச் சொல்லாது, ஒழிக என விலக்கும்**
**பொல்லாச் சூழ்ச்சிப் பல் சான்றீரே !**
**அணில் வரிக் கொடுங் காய் வாள் போழ்ந்திட்ட**
**காழ் போல் நல் விளர் நறு நெய் தீண்டாது**
**அடை இடை கிடந்த கைபிழி பண்டம்**

**வெள் எட் சாந்தொடு, புளிப் பெய்து அட்ட**
**வேளை வெந்தை, வல்கி ஆக**
**பரற்பெய் பள்ளிப் பாய் இன்று வதியும்**
**உயவல் பெண்டிரேம் அல்லேம்மாதோ ;**
**பெருங் காட்டுப் பண்ணிய கருங் கோட்டு ஈமம்**
**நுமக்கு அரிதாகுகதில்ல ; எமக்கு எம்**
**பெருந் தோட் கணவன் மாய்ந்தென, அரும்பு அற**
**வள் இதழ் அவிழ்ந்த தாமரை**
**நள் இரும் பொய்கையும் தீயும் ஓரற்றே''[61]**

என்று கூறி கணவனை இழந்த மகளிர் ஆதரவற்ற நிலையில் பிறர் உதவியினை எதிர்பாராது பருத்திப் பஞ்சினை நூலாக நூற்றுத் தம் குடும்பத்தினை நம்பி வந்தனர். இவர்களைப் 'பருத்திப் பெண்டிர்' என்று சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றது.

**மூதின் மகளிர்**

ஈன்று புறந்தருதல் தாயின் கடமையாகும். மேலும் அவர்கள் வீரத்தில் மேம்பட்டவர்களாக எதிர்காலத்தில் விளங்கத் தாமே துணை நிற்றல் வேண்டும். மறக்குடி மகளிர்தம் இயல்பும் வீரமிகுதியும் கூறும் துறை, 'மூதில் முல்லை' என்பதாகும். வீரக்குடியிற் பிறந்த மகளிர் 'மூதின் மகளிர்' எனப்போற்றப் பெற்றனர்.

மறக்குடியிற் பிறந்த பெண்ணொருத்தி, முதல் நாள்போரில் தன் தமையனும், மறுநாள்போரில் தன் கணவனும் மடிந்த நிலையில் தன் குடிக்கு ஒருவனாயுள்ள இளஞ்சிறுவனை வேல் கைக்கொடுத்துச் 'செருமுகம்

நோக்கிச் செல்க' என அனுப்பினாள் என 'ஒக்கூர் மாசாத்தியார்' என்ற பெண்பாற்புலவர் புறநானூற்றில்

**''கெடுக சிந்தை ; கடிது இவள் துணிவே!**
**மூதில் மகளிராதல் தகுமே ;**
**மேல்நாள் உற்ற செருவிற்கு இவள் தன்னை,**
**யானை எறிந்து, களத்து ஒழிந்தனனே!**
**நெருநல் உற்ற செருவிற்கு இவள் கொழுநன்,**
**பெரு நிரை விலங்கி, ஆண்டுப் பட்டனனே!**
**இன்றும், செருப்பறை கேட்டு, விருப்புற்று, மயங்கி,**
**வேல் கைக் கொடுத்து, வெளிது விரித்து உடீஇ,**
**பாறு மயிர்க் குடுமி எண்ணெய் நீவி,**
**ஒரு மகன் அல்லது இல்லோள்,**
**செருமுக நோக்கிச் செல்க' என விடுமே!''**[62]

பதிவு செய்கிறார்.

சங்க கால மகளிர் காதலேயன்றி வீரத்திலும் மேம்பட்டு விளங்கினர். நல்ல மனைவியைப் பெற்ற கணவனையே புலவர் போற்றினர். ஓர் ஆடவனைப் புலவர் போற்றும் போது அவன் மனைவியின் சிறப்பு நோக்கியே பாராட்டினர். திருமுருகாற்றுப்படையில் 'நக்கீரர்' திருமுருகனை 'மறுவில் கற்பின் வாணுதல் கணவன்' என்றே பாராட்டியுள்ளார்.

'இந்த நல்ல மங்கையினுடைய கணவன் யான்' என்று கூறிக் கொள்வதில் அக்கால ஆடவன் பெருமை கொண்டனன்.

**''அமிழ்து பொதி செந்நா அஞ்ச வந்த**
**வார்த்து இலங்கு வைஎயிற்றுச் சின்மொழி அரிவையைப்**
**பெருகதில் அம்ம யானே ! பெற்றாங்கு**
**அறிகதில் அம்ம, இவ்வூரே ! மறுஇல்**

**நல்லோள் கணவன் இவன் எனப்**
**பல்லோர்கூற யாஅம் நாணுகம் சிறிதே!''**[63]

என்கிறது குறுந்தொகை.

மனைத்தக்க மாண்புடையவளாகவும், தற்கொண்டான் வருவாய்க்கு ஏற்பச் செலவு செய்பவளாகவும் வாழ்க்கைத்துணை ஒருவனுக்கு வாய்க்குமேயானால் அவன் நிறைவாழ்வு வாழலாம். இதனாலன்றோ வள்ளுவர் பெருமானும்,

**''புகழ்புரிந்த இல்இலோர்க்கு இல்லை இகழ்வார் முன்**
**ஏறுபோல் பீடு நடை''**[64]

என்று கூறிப்போந்தார். எனவே, மனைமாட்சி மகளிரிடத்துத் துலங்க வேண்டும் என்பதனை அவரே,

**''மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை**
**எனைமாட்சித்து ஆயினும் இல்''**[65] என்றார்.

வள்ளுவர் குறிப்பிடும் வாழ்க்கைத்துணை நலம் உடையவர்களாகவே சங்க கால மகளிர் பழுதறத் துலக்க முறுகின்றனர். பெண்ணின் பெருமை பீடுற விளங்கிய பொற்காலம் சங்க காலமாகும்.

**''வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்**
**தெய்வத்துள் வைக்கப் படும்.''**[66]

என்ற நிறைவான நிலையான வாழ்வினை சங்ககால மகளிர் தம் வாழ்வில் கடைபிடித்தமை புலனாகின்றது. எனவே தான் வள்ளுவரும் மகளிரை 'வாழ்க்கைத் துணை' என வகையுறப் பாராட்டியுள்ளார். பெண்ணைச் சுற்றியே உலகம் இயங்குகின்றது.

மெல்லியலாதாகிய மகளிர் பண்புகளின் உறைவிடமாயிருக்க வேண்டுவது பெரிதும் இன்றியமையாததாகும். இம்முறையிற் பார்ப்பின், சங்ககால மகளிர் அகத்தின்வழி இல்வாழ்க்கை ஆற்றிப் பெற்றோன் பெற்று தரும் பிணையாய், ஈன்று புறந்தரும் தாயாய் விளங்கி, வீடும் நாடும் விளக்குமுறத் தொண்டாற்றினர் என்பது அங்கை நெல்லிக் கனியெனப் புலனாகும்.

**தாய் - சேய் உறவு**

ஆதி கால குடும்ப அமைப்பில் தாய் தான் குழந்தைக்கு முதல் ஆசிரியர்; முதல் மருத்துவச்சி; முதல் காவலாளி. இவை எல்லாவற்றையும் விட உயிரின வாழ்க்கையில் இல்லாதவாறு உயிர் உள்ள வரை தொடர்கின்ற நீண்ட நெடும் உறவு கொண்டது.

''மனித உறவுகளின் மூலம் தாய் சேய் உறவாகத்தான் இருக்க முடியும் என்பது மானுடவியலார் கருதுவர். மனித வரலாற்றில் முதலில் தோன்றிய இரட்டையர்கள் இந்த இரட்டையர்களுக்குப் பிறகுதான் சகோதரன் - சகோதரி; கணவன்- மனைவி, தாய் -தந்தை, தந்தை- மகன், தந்தை - மகள் முதலிய உறவு முறைகள் தோன்றியுள்ளன என்பர் க.பஞ்சாங்கம்.[67]

அனைத்திற்கும் அடிப்படையான தாய்-சேய் உறவு புறநானூற்றுப் பாடல்களில் மிகுதியும் வெளிப்படுவதனைக் காண முடிகிறது. புறநானூற்றில் இடம்பெறும் தாயின் வீரத்தைக் குறித்துப் பாடல்கள் பல உள்ளன.

**சிறுவனின் வீரம்**

வீரருள் ஒருவன் பகைவர்படை முழுவதையும் கலங்கச் செய்து வெற்றி கொண்டமையை புறநானூற்றுப் பாடல் குறிப்பிடுகின்றது.

**''நறுவிரை துறந்த நரை வெண் கூந்தல்,**
**இரங் காழ் அன்ன திரங்கு கண் வறு முலை,**
**செம் முது பெண்டின் காதல்அம் சிறாஅன்**
**மடப்பால் ஆய்மகள் வள் உகிர்த தெறித்த**
**குடப் பால் சில் உறை போல,**
**படைக்கு நோய் எல்லாம் தான் ஆயினனே''**[68]

மணம்மிக்க பொருட்களைத் துறந்த நரைத்த வெண் கூந்தலையும், இலவமரத்தின் விதை போலச் சுருங்கிய கண்ணையும் வற்றிய முலையையும் உடைய மறக்குடியின் பண்புகளைக் கொண்ட முது மகளின் அன்புமகன். இளமைமிக்க ஆய மகள் தன் கூரிய நகத்தினைக் கொண்ட விரலால் குடம் நிறைய வைத்த பாலில் தெளித்த சிலவாகிய மோர்த்துளியைப் போலப் பகைவர் படை உடைத்துக் கெடுவதற்கு அச்சேயே காரணமானான் என்பதனால் முது பெண்டிர் தன் சேய் கொண்ட அன்பானது வெளிப்படுகிறது.[69]

**வீரத்தாய் சபதம்**

புறப்புண் பட்டு போர்க்களத்தில் நின்மகன் வீழ்ந்தான் என்னும் சொல்கேட்டு வஞ்சினம் கூறுவாரோடு சென்ற ஒரு தாய் உண்மையை நேரில் கண்டு உணர்ந்து உவகை கொள்கிறாள்.

**''நரம்பு எழுந்து உலறிய நிரம்பா மென் தோள்,**
**முளரி மருங்கின், முதியோள் சிறுவன்**
**படை அழிந்து, மாறினன் என்று பலர் கூற,**

**மண்டு அமர்க்கு உடைந்தனன் ஆயின் உண்ட என்**

**முலை அறுத்திடுவென், யான் எனச் சினைஇ**

**கொண்ட வாளொடு பிணம் பெயரா,**

**செங்களம் துழவுவோள், சிதைந்து வேறு ஆகிய**

**படு மகன் கிடக்கை காணூஉ,**

**ஈன்ற ஞான்றினும் பெரிது உவந்தனளே''**[70]

என்கிறது புறநானூறு.

ஒக்கூர் மாசாத்தியாரின் புறப்பாடல் மறக்குடிப் பிறந்த மகளிர்க்கும் சினமுண்டாதலைச் சிறப்பித்துப் பாடுவதனைக்கான முடிகிறது. கெடுக சிந்தை, கடிது இவள் துணிவே[71] என்ற வாகைத்திணையில் மூதின் முல்லையில் அமைந்த பாடல் ஆடவரையொத்து மகளிரும் வீரம் செறிந்தவர்களாய் விளங்கியமையைச் சுட்டுகின்றது.

**''கெடுக சிந்தை; கடிதுவள் துணிவே ;**

**மூதில் மகளிராதல் தகுமே ;**

**மேல் நாள் உற்ற செருவிற்கு இவள் தன்னை,**

**யானை எறிந்து, களத்து ஒழிந்தனனே;**

**நெருநல் உற்ற செருவிற்கு இவள் கொழுநன்**

**பெரு நிரை விலங்கி, ஆண்டுப் பட்டனனே;**

**இன்றும் செருப்பறை கேட்டு, விருப்புற்று மயங்கி,**

**வேல் கைக் கொடுத்து, வெளிது விரித்து உடீஇ,**

**பாறு மயிர்க் குடுமி எண்ணெய் நீவி,**

**ஒருமகன் அல்லது இல்லோள்,**

**செருமுகம் நோக்கிச் செல்க என விடுமே''**[72]

மறக்குடியில் பிறந்தவளே இம்மகள் முதல் நாள் போருக்குத் தந்தையை அனுப்புகிறார். தந்தையும் எதிரியின் யானைக்கூட்டங்களை வெட்டி வீழ்த்தி

தானும் இறந்தான். நேற்று நடைபெற்ற போரில் கணவன் குதிரைக் கூட்டத்தை அழித்துத் தானும் இறக்கிறான். மூன்றாம் நாளும் போர் முரசு ஒலிக்கிறது. தன் வீட்டிலிருந்து நாட்டைக்காக்க ஆண் மகன் இல்லையே என்று ஏங்குகிறார்.

தன் குடிக்கு ஒரு மகன் என்றும் பாராது வேலைக்கொடுத்து; வெள்ளாடை உடுத்தி, குடுமிக்கு எண்ணெய் தடவி போய் வா என்றால்லவா விடை கொடுக்கிறாள். இப்பெண் எப்பேர்பட்ட வீரமங்கை என்று எண்ணத் தோன்றுகின்றது.

போர்க்களத்தில் தன் மகன் களிநெறிந்து இறந்தான் எனக் கேள்விப்பட்டதால் அடைந்தாள் உவகை.

**‘‘மீன் உண் கொக்கின் தூவி அன்ன**
**வால் நரைக் கூந்தல் முதியோள் சிறுவன்**
**களிறு எறிந்து பட்டனன் என்னும் உவகை**
**ஈன்ற ஞான்றினும் பெரிதே கண்ணீர்**
**நோன் கழை துயல்வரும் வெதிரத்து**
**வான் பெயத் தூங்கிய சிதரினும் பலவே’’**[73]

கொக்கின் சிறகையொத்த வெண்மையான நரைத்த கூந்தலையுடைய முதியவள். அவளின் மகனான இளையோன் தன் மேல் வந்த களிற்றினைக் கொன்று அவனும் வீழ்ந்தான்.

இச்செய்தியைக் கேட்ட தாயானவள் அவனை ஈன்ற பொழுதினும் பெரிய அளவில் உவகை கொண்டாள். அவள் சிந்திய கண்ணீர் வலிய மூங்கில்களிலிருந்து கொட்டும் மழைத்துளியினும் மிகுதியாக இருந்தது என்கிறாள் பூங்கண் உத்திரையாள்.

சிறிய தூணைப் பற்றிக் கொண்டு நின்மகன் யாண்டுளன் என வினவும் சிறுமிக்குத் தாய் பதிலுரைக்கின்றாள். புலிதங்கிப் போகிய கல்லளை போன்றது என் வயிறு. அவனைக் காண வேண்டுமென்றால் போர்க்களம் சென்றால் காணலாம் என்றுரைக்கும் மறவர் குலப் பெண்ணாகத் தாய் - சேய் உறவில் மிகுதியும் நாட்டம் கொண்ட வீரமகளிர் வாழ்ந்த காலம் சங்ககாலம்.[74]

புறநானூற்றில் இடம் பெற்றுள்ள பொன்முடியார் பாடல் வழியேயும் சிறந்த தாய் - சேய் உறவு சுட்டப்படுவதனைக் காண முடிகின்றது.

**"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே"**[75]

நொச்சிப்பூச் சூடி போர் புரிந்த வீரன் ஒருவன் வீழ்ந்து கிடக்கிறான். அவன் மார்பில் புண்பட்டு இறந்து கிடப்பதை பெருமையோடு மகிழ்கிறார்.

**"மணி துணர்ந்தன்ன மாக்குரல் நொச்சி !**
**போது விரி பல் மரனுள்ளும் சிறந்த**
**காதல் நல் மரம் நீ; நிழற்றிசினே!**
**கடியுடை வியல் நகர்க் காண்வரப் பொலிந்த**
**தொடியுடை மகளிர் அல்குறும் கிடத்தி;**
**காப்புடைப் புரிசை புக்கு மாறு அழித்தலின்,**
**ஊர்ப் புறங்கொடாஅ நெடுந்தகை**
**பீடு கெழு சென்னிக் கிழமையும் நினதே"**[76]

தன் மகன் மன்னனுக்காகப் போரிட்டு இறக்க முடியவில்லையே என்று ஏங்குகிறாள் மற்றொரு தாய்.

இதனை,

**"வெள்ளை வெள் யாட்டுச் செச்சை போலத்**
**தன் ஓர் அன்ன இளையர் இருப்ப,**
**பலர் மீது நீட்டிய மண்டை என் சிறுவனைக்**
**கால் கழி கட்டிலில் கிடப்பி,**
**தூ வெள் அறுவை போர்ப்பித்திலதே"**[77]

வேந்தன் பொருட்டுத் தன் மகன் சாவது சிறப்பிற்குரியது என்றெண்ணுகிறாள் தாய். பெண் ஒருத்தி தன் கணவனுடன் சுரத்திடை வந்து கொண்டிருந்தாள். அப்போது நடைபெற்ற போரில் கணவன் விழுப்புண் பெற்று புகழ் கொண்டான். அதனால் தனிமையுற்ற பெண் ஊர்க்குயவனிடம் தனக்கும் எங்கள் இருவரையும் அடக்கம் செய்யத்தக்க தாழியைச் செய்க என்கிறாள்.

**"கலம் செய் கோவே! கலம் செய் கோவே!**
**அச்சுடைச் சாகாட்டு ஆரம் பொருந்திய**
**சிறு வெண் பல்லி போல, தன்னொடு**
**சுரம் பல வந்த எமக்கும் அருளி**
**வியல் மலர் அகன் பொழில் ஈ.மத் தாழி**
**அகலிதாக வனைமோ**
**நனந் தலை மூதூர் கலம் செய் கோவே"**[78]

என்று பெரும்பான்மையான புறநானூற்றுப்பாடல்கள் தாய்-சேய் உறவினை மையப்படுத்தினாலும் அம்மகனையே போற்றிப் புகழ்வதாக அமைவதற்குக் காரணம் ஆண்பிள்ளை அரசனுக்கு உடைமை. பெண்பிள்ளை குடும்பத்திற்கு உடைமை என்றும் கருதப்பட்டுள்ளது எனக் கொள்ளலாம்.

தாய் - சேய் உறவு முறைகளை புறநானூற்றில் 159, 160, 164, 211 ஆகிய பாடல்களாலும் காண முடிகின்றது. பாலில்லாது சேய் அழும் வறுமைக் கோலத்தை இப்பாடல்கள் வெளிச்சம் போட்டுக் காட்டுகின்றன. தன் சிறுவன் பழி நீங்க வள்ளலைப் பாடி பொருள் பெற விழையும் புலவனே மனக்கண்ணில் நிழலாடுகின்றான்.

பிள்ளை பெறுவதும், பிள்ளையை வளர்ப்பதும், போர்க்களத்தில் போரிடத்தயார் படுத்துவதும், ஆண்குழந்தை முதன்மை பெறுவதும் பெண்குழந்தை உடைமைப் பொருளாக்கப்படுவதும் ஆகிய இத்தகைய தாய் - சேய் நலமே குடும்பம் என்ற அமைப்பினைப் பெற்றிருந்தது.

## பெண்பாற்புலவர்களின் அகப்பாடல்கள்

சங்ககாலப் பெண்பாற் புலவர்கள் இலக்கணம், இலக்கியப் புலவர்கள் என்று முப்பதின்மர் என்று தமிழிலக்கிய வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். இந்த எண்ணிக்கை பலவாகும் என்றுரைக்கிறார் பேராசிரியர் க.பஞ்சாங்கம்.

''சங்ககால அட்டவணை தயாரித்த பேராசிரியர் ந.சஞ்சீவி 25 என்கிறார்.

பதிப்பாசிரியர் உ.வே.சா.38 என்கிறார். எஸ். வையாபுரிப் பிள்ளை 30 என்றும், புலவர் க.கோவிந்தன் 27 என்றும், ஔவை துரைசாமிப்பிள்ளை 34 என்றும் கூறுகின்றனர். பெண்பாற்புலவர்களின் பாடல்களை முனைவர் பட்டத்திற்காக ஆராய்ந்த அவ்வை நடராசன் 41 என்கிறார். இவற்றிலுள்ள

பழைய விதிகளைத் தகர்த்தினால் மேலும் சில பாடல்களை அகத்தில் சேர்க்கலாம் என்று க. பஞ்சாங்கம் குறிப்பிடுகின்றார்.[79]

**தலைவியின் காமநோய்**

ஔவையார் தலைவி ஒருத்தி தன்னைப்படுத்தும் காமநோயின் தன்மையைத் தடையின்றிப் பேசுகிறாள்.

**"முட்டுவேன் கொல், தாக்குவேன் கொல்?**
**ஓரேன், யானும் ; ஓர் பெற்றி மேலிட்டு**
**ஆ அ ! ஒல் எனக் கூவுவேன் கொல் ?**
**அலமரல் அசைவளி அலைப்ப, என்**
**உயவு நோய் அறியாது, துஞ்சும் ஊர்க்கே"**[80]

சுழன்று வீசும் தென்றல் காற்று என்னை வருத்துகின்றது. என் துன்பத்திற்குக் காரணமான காம நோயின் கொடுமை உணராமல் இவ்வூராரும் துயில்கின்றனர். என் நிலையை அறிவிப்பதற்காக மூட்டுவோரைத் தூக்குவேனா! ஏதோ ஒரு காரணம் 'ஆ' என்றும் ஓ என்றும் ஒலி எழுப்புவோரை என் செய்வேன் என்கிறார்.

அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் நான்கையும் பெண்மையின் குணங்களாக நம் முன்னோர் கூறினும் காமம் மிகுந்த நிலையில் அதனை எவ்வகையிலாவது வெளிப்படுத்த விழையும் சிந்தனை எழாமல் இருப்பதற்கு வாய்ப்பு இல்லை. காரணம் காதல், அன்பு, கருணை, காமம் என்பது ஒருவழிப் பாதையானது. ஆண், பெண் இருவர்க்குமே பொதுவானது.

காதலன் அருகில் இல்லாத போதும் காமநோய் மிகுதியாகிறது. திங்கள் அழகுடன் விளங்குகின்றது; அலையும் ஒலியடங்காது ஒலிக்கிறது. அன்றிலும் நரலும்; யாழிசையும் நான் உய்யாதவாறு இசைக்கிறது. அதனால் தலைவன் மேல் காமம் மிகுதியாகிறது. இதனை

**"திங்களும் திகழ் வான் ஏர்தரும்; இமிழ் நீர்ப்**
**பொங்கு திரைப் புணரியும் பாடு ஓவாதே;**
**ஒலி சிறந்து ஓதமும் பெயரும் ; மலி புனற்**
**பல் பூங் காணல் முள் இலைத் தாழை**
**சோறு சொரி குடையின் கூம்பு முகை அவிழ,**
**வளிபரந்து ஊட்டும் விளிவு இல் நாற்றமொடு**
**மை இரும் பணைமிசைப் பைதல உயவும்**
**அன்றிலும் என்புற நரலும், அன்றி,**
**விரல் கவர்ந்து உழந்த கவர்வின் நல் யாழ்**
**யாமம் உய்யாமை நின்றன்று;**
**காமம் பெரிதே களைஞரோ இலரே"**[81]

என்று வெள்ளி வீதியார் குறிப்பிடுவர். வெள்ளி வீதியாரின் மற்றொரு பாடல் குறுந்தொகையில் இடம் பெற்றுள்ளது. இடித்துரைக்கும் கேண்மையுடையீர்! உம்மிடம் யாம் குறையிழந்து வேண்டுவது ஒன்றுள்ளது. அதனை நும்குறையாக ஏற்று என் அகம் உருகாமல் நிறுத்தலைச் செய்ய வல்லீராயின் எனக்கு மிகவும் நன்மை உடையது வேறெதுவும் எனக்கு நன்மைதருவது ஆகாது.

**"இடிக்கும் கேளிர் ! நும் குறை ஆக**
**நிறுக்கல் ஆற்றினோ நன்றுமன் தில்ல;**
**ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கில்**
**கைஇல் ஊமன் கண்ணின் காக்கும்**

**வெண்ணெய் உணங்கல் போல**
**பரந்தன்று, இந்நோய்; நோன்று கொள்கு அரிதே''[82]**

என்கிறார். தலைவனைப் பிரிந்த தலைவியொருத்தி காம நோயால் மிகவும் மெலிகிறாள். இதனால் கவலையுற்ற தலைவி தோழியிடம் நேற்று வந்த மாலைப் பொழுது இன்றும் வருமாயின் எனக்குண்டாகும் காம வெள்ளத்திலிருந்து நீந்துதல் அறியேன் என்கிறாள்.

இதனை விளக்கும் பாடல்,

**''சுடர் சினம் தணிந்து குன்றம் சேர**
**நிறை பறைக் குருகினம் விசும்பு உகந்து ஒழுக,**
**எல்லை பைபயக் கழிப்பி, முல்லை**
**அரும்பு வாய் அவிழும் பெரும் புன் மாலை**
**இன்றும் வருவது ஆயின், நன்றும்**
**அறியேன் வாழி தோழி!- அறியேன்**
**ஞெமை ஓங்கு உயர் வரை இமையத்து உச்சி,**
**வா என் இழிதரும் வயங்கு வெள் அருவிக்**
**கங்கைஅம் பேர் யாற்றுக் கரை இறந்து இழிதரும்**
**சிறை அடு கடும் புனல் அன்ன, என்**
**நிறை அடு காமம் நீந்துமாறே''[83]**

என்றுரைத்து காமம் மிகுதலை வெள்ளம் என்கிறார்.

வினை காரணமாகத் தலைவன் தலைவியைப் பிரிந்தான். பிரிந்த தலைவன் வரவு நீட்டித்தமையால் தலைவி அறிவு மயங்குகிறாள்.

தலைவன் உள்ளத்தை யான் எவ்வாறு அறிந்து கொள்வேன்; பேரழகை பசலை நோய் கவர்ந்து கொண்டு நம்மை வருத்துவதை அவர் அறிவாரோ? வேட்கை நோய் என்னும் இனிய முளை முலையின் கண் முளைத்தது. அது

தளர்ந்து துன்பம் என்னும் தண்டாக வளர்ந்தது. ஊர்ப் பெரியவர்கள் கூறும் பழிச் சொற்கள் கிளையாகத் துளிர்களை ஈன்றது.

புலவர் பாடும் புகழினைப் பெற்ற நாணமில்லாத பெரிய மரமாகி இந்நிலவுலகம் முழுதும் நிழலாகப் பரப்பி அவர் என்னும் அரும்புகளைத் தோற்றுவித்தது. இந்நிலையிலும் கூட தலைவன் நம்மிடம் வரவில்லையே எனத் தலைவி தன் நெஞ்சிற்குக் கூறுகிறார்.

**“விசும்பு விசைத்து எழுந்த கூதளங் கோதையின்,**
**பசுங்கால் வெண்குருகு வாப்பறை வளைஇ**
**ஆர்கலி வளவயின் போதொடு பரப்ப,**
**புலம்புனிறு தீர்ந்த புதுவரல் அற்சிரம்”**[84]

வேட்கை மிகுந்த தலைவியின் மற்றொரு பாடலாக வெள்ளிவீதியார் பாடியது நற்றிணையில் இடம் பெற்றுள்ளது.

**“நிலவே, நீல் நிற விசும்பின் பல் கதிர் பரப்பி,**
**பால் மலி கடலின், பரந்து பட்டன்றே ;**
**ஊரே, ஒலி வரும் சும்மையொடு மலிபுதொகுபு ஈண்டி,**
**கலி கெழு மறுகின், விழவு அயரும்மே;**
**கானே, பூ மலர் கஞலிய பொழில் அகம்தோறும்**
**தாம் அமர் துணையொடு வண்டு இமிரும்மே;**
**யானே, புனை இழை ஞெகிழ்த்த புலம்பு கொள் அவலமொடு**
**கனை இருங் கங்குலும் கண்படை இலெனே;**
**அதனால் என்னொடு பொரும் கொல், இவ் உலகம் ?**
**உலகமொடு பொரும்கொல், என் அவலம் உறு நெஞ்சே?”**[85]

தலைவிக்குத் தலைவன் மேல் விருப்பம் மிகுதியாயிற்று. அது தாங்கவில்லை. இரவிலும் உறக்கமில்லாத தலைவியை வெள்ளி வீதியார் கொண்டு நிறுத்துகின்றார்.

பெண்கொண்ட காமநோய்க்கு ஆணின்மார்பே மருந்தாக அமைகிறது.

**“பூழ்க்கால் அன்ன செங்கால் உழுந்தின்**
**ஊழ்ப்படு முதுகாய் உழையினம் கவரும்**
**அரும்பணி அற்சிரம் தீர்க்கும்**
**மருந்து பிறிது இல்லை அவர் மணந்த மார்பே”**[86]

என்னுடைய காம நோய்க்கு மருந்து எண்னைத் தழுவிச் சென்ற அவருடைய மார்பே, வேறு எதுவும் இல்லை என்கிறார்.

**தலைவியின் கனவு**

தலைவி ஒருத்தி கனாக் காணுகிறாள். அதனைத் தன் தோழியிடம் தெரிவிப்பதாக அமைந்துள்ளது.[87]

**‘‘உள் ஊர் மாஅத்த முள் எயிற்று வாவல்**
**ஓங்கல்அம் சினைத் தூங்கு துயில் பொழுதின்,**
**வெல் போர்ச் சோழர் அழிசிஅம் பெருங் காட்டு**
**நெல்லி அம் புளிச் சுவைக் கனவியா அங்கு,**
**அது கழிந்தன்றே’’**[87]

தலைவன் பொருள் தேடிப் பிரிகிறான். அப்பிரிவு ஆறாத தலைவி கனவு கண்டு எழுகிறாள். தோழி! வௌவால் தான் தான் துயிலும் போது தனக்குக் கிடைக்கப்பெறாத நெல்லிக்கனியின் புளிப்புச் சுவைக்குக் கனவு காணும். அதுபோல் பரதவர் நிறைந்து கடற்கரைச் சோலையை நினைத்து உறங்கிய போதும் அதனையே கனவிலும் கண்டேன் என்கிறார். வரைவிடை

வைத்துப் பிரிந்த தலைவன் மேல் தலைவி கொண்ட காதலை வெளிப்படுத்துகிறது.

**தொகுப்புரை**

அன்பின் அடிப்படையில் காதலாகிக் கசிந்து காமமாகப் பெருகுவதனையும் பெண் கவிஞர்கள் பாடு பொருளாகவே கொண்டுள்ளனர். ஆண்களைப் போல பெண்களும் இல்லறம், களவு, கற்பு, வீரம், விருந்தோம்பல், மக்கட்பேறு, சுற்றம் தழுவுதல், கொடை போன்ற பல பண்புகளிலும் சிறந்து விளங்கியமைக்குச் சங்கப் பாடல்களே சான்றாக அமைகின்றன.

பெண்கள் இல்லத்தின் கண்கள் என்ற அளவில் இருந்தமையால் இல்லாள் என்றழைக்கப்பட்டாள். இல்லத்தை ஆள்பவள் இல்லாள். வந்த விருந்தினரை வரவேற்று அவர்களின் தேவைகள் அறிந்து உணவு முதலியன தந்து உதவிதல் பெண்களின் பிறவிக் குணமாகும். அல்லியாயினும் விருந்துவரின் உவக்கும் முல்லை சான்ற கற்பின் கனலியாய் மகளிர் விளங்கினர்.

நல்ல குடும்பத்தைச் சார்ந்த பெண்கள் தம் கையாலேயே கணவனுக்கு உணவு பரிமாறுவார்கள் என்பதற்கு முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல் சிவப்ப எனும் (குறுந்.167) குறுந்தொகைப் பாடலே சிறந்த சான்றாகும்.

கணவன் செய்யும் தவறுகளையும் பொறுத்துக் கொள்ளும் குணமும் மகளிரின் குணப்பண்பு, குலப்பண்பாகும். பரத்தையிடம் சென்று வந்த

கணவன் மேல் ஊடல் கொண்டாலும் பின்னர் கூடி இல்லறத்தை நல்லறமாக்கும் குணம் கொண்டவர்களாய் விளங்கினர்.

பழந்தமிழகப் பெண்கள் கணவன் கருத்துப்படி வாழ்க்கை நடத்தினர். தன் கணவன் தேடித்தரும் செல்வத்தைக் கொண்டு இல்வாழ்க்கை நடத்தினர். தன் வீட்டில் பொருள் இல்லாமைகூட அயலார் அறிதல் கூடாது என்ற உயர்வான சிந்தனையைக் கொண்டிருந்தனர்.

குப்பைக் கீரையைக் கூரிய நகத்தினாள் கிள்ளிய நிலையில் அக்கீரையை வேக வைக்கும்போது போடுவதற்கு உப்புக்கூட இல்லாத நிலை.

**''ஒல்கு பசி உழந்த ஒருங்கு நுண்மருங்குல்**
**வளைக்கை கிணை மகள் வள்உகிர்க் குறைத்த**
**குப்பை வேளை, உப்பு இலி வெந்ததை,**
**மடவோர் காட்சி நாணிக் கடையடைத்து,**
**இரும்பேர் ஒக்கலொடு ஒருங்குடன் மிசையும்''**

அதனால் வாசற்கதவைத் தாழிட்ட நிலையையும் சிறுபாணாற்றுப்படை (வரிகள் 135-139) காட்டுவதன் மூலம் மகளிர் இல்லறத்திலும் நல்லறம் கண்டமையைக் காணமுடிகிறது.

பழந்தமிழ்ப் பெண்கள் தங்கள் குடிப்பெருமையைக் காப்பதில் கண்ணும் கருத்துமாக விளங்கினர். குடும்பத்தின் பரம்பரைப் பண்பாடு அவர்களிடம் குடி கொண்டிருந்தது. கற்பின் தன்மையைக்காத்து செறிவும் நிறைவும் கொண்டவர்களாய் அறிவும் அருமையும் குணங்களாய்க் கொண்டு கல்வி கேள்விகளில் வல்லராய் விளங்கினர். இப்பிறவி மாறி எத்தனை

பிறவிகள் வந்தாலும் அத்தனை பிறவிகளிலும் தன் கணவனே தனக்கு மணாளனாக வேண்டுமென்று விரும்பினர்.

நெஞ்சில் வீரமும், உள்ளத்தில் ஈர உணர்வாகிய காதலையும் கொண்டு சுற்றம் பேணி மழலையருடன் குடும்பம் பல்கலைக்கழகமாக அமையும் வாழ்க்கை வாழ்ந்தனர்.

# சான்றெண் விளக்கம்

1. தொல்காப்பியம், களவியல் நூற்பா, 23. (தொல் : 1058)
2. மேலது, நூற்பா. 8.
3. தொல், பொருளியல் நூற்பா. 15.
4. மணிமேகலை, மலர்வனம் புக்ககாதை, 20- 23 வரிகள்.
5. குறுந்தொகை, பா.எண். 226.
6. மேலது, பா.எண்.95.
7. சிலம்பு, கொலைக்களக்காதை, வரி 68.
8. பொருநராற்றுப்படை, வரிகள் 21-22.
9. குறுந்தொகை, பா.எண். 142.
10. நற்றிணை, பா.எண்.68, 1-5 வரிகள்.
11. குறுந்தொகை, பா.எண். 238, 1-3 வரிகள்.
12. பதிற்றுப்பத்து, பா.எண். 29, 1-3 வரிகள்.
13. குறுந்தொகை, பா.எண்.48, 1-2 வரிகள்.
14. ஐங்குறுநூறு, பா. எண்.128.
15. புறநானூறு, பா.எண். 36.
16. கலித்தொகை, பா.எண்.59, 16-21 வரிகள்.
17. சிலம்பு, குன்றக்குரவை, பா.எண்.7. 1 : 2 வரிகள்.
18. பெரும்பாணாற்றுப்படை, 332 - 335 வரிகள்.
19. கலித்தொகை பா.எண்.59, 12-13 வரிகள்.
20. புறநானூறு, பா.எண்.312.

21. கலித்தொகை, முல்லைக்கலி, பா.எண்.103, 63-64 வரிகள்.

22. புறநானூறு, பா.எண். 343, 10-13 வரிகள்.

23. பரிபாடல், பா.எண். 8, 12-18 வரிகள்.

24. மதுரைக்காஞ்சி, 461 - 467 வரிகள்.

25. ஐங்குறுநூறு பா.எண்.257, 1-2 வரிகள்.

26. திருக்குறள், பா.எண். 55.

27. ஐங்குறுநூறு, பா.எண்.259, 1-3 வரிகள்.

28. திருக்குறள், பா.எண்.53.

29. குறுந்தொகை பா.எண். 295.

30. குறுந்தொகை, பா.எண்.40.

31. மேலது, பா.எண். 3.

32. நற்றிணை, பாடல் 397, 7-9 வரிகள்.

33. குறுந்தொகை, பா.எண்.49, 3-6 வரிகள்.

34. மேலது, பா.எண்.396.

35. கலித்தொகை, பா.எண்.9, 22-24 வரிகள்.

36. நற்றிணை, பா.எண்.110.

37. ஐங்குறுநூறு, பா.எண்.203.

38. தொல்காப்பியம், கற்பியல், நூற்பா, 11.

39. திருக்குறள், பா.எண்.54.

40. தொல்காப்பியம், களவியல் நூற்பா, 22.

41. சிலம்பு, அடைக்கலக் காதை, 137-144 வரிகள்.

42. கொங்கு வேளிர், பெருங்கதை, ப.120.

43. பாரதியார் கவிதைகள், ப.64.

44. குறுந்தொகை, பா.எண்.397, 4-8 வரிகள்.

45. பரிபாடல், பா. எண்.20, 86-89 வரிகள்.

46. சிலம்பு, மனையும் படுத்த காதை, 85-86 வரிகள்.

47. மேலது, கொலைக்களக் காதை, 71-73 வரிகள்.

48. கம்பராமாயணம், சுந்தரகாண்டம். காட்சிப் படலம், பா.எண். 15.

49. நற்றிணை, பா.எண்.142.

50. திருக்குறள், பா.எண்.247.

51. குறுந்தொகை, பா.எண்.283, 2வது வரி.

52. கலித்தொகை, பா.எண்.6, 10-11 வரிகள்.

53. மேலது, பா.எண். 18, 10-11 வரிகள்.

54. மேலது, பா.எண்.7, 19-21 வரிகள்.

55. திருக்குறள், பா.எண்.1151.

56. மேலது, பா.எண்.1261.

57. சிலம்பு, அந்தி மாலைச் சிறப்புச் செய்காதை, 47-57 வரிகள்.

58. குறுந்தொகை, பா.எண்.398, 3-8 வரிகள்.

59. புறநானூறு, பா.எண். 314, 1-2 வரிகள்.

60. மேலது, பா.எண்.246, 4-10 வரிகள்.

61. மேலது, பா.எண்.246.

62. மேலது, நூல், பா.எண்.279.

63. குறுந்தொகை, ப.எண்.14, 5-6 வரிகள்.

64. திருக்குறள், பா.எண்.59.

65. மேலது, பா.எண்.52.

66. திருக்குறள், பா.எண்.50.

67. க. பஞ்சாங்கம், சங்க இலக்கியம், ப.18.

68. புறநானூறு, பா.எண்.276.

69. சங்க இலக்கியம், புறநானூறு, தொகுதி-2, ப.620.

70. புறநானூறு, பா.எண்.278.

71. மேலது, பா.எண்.279.

72. மேலது, பா.எண்.279.

73. மேலது, பா.எண்.277.

74. மேலது, பா.எண்.86.

75. மேலது, பா.எண்.312, வரி 1.

76. மேலது, பா.எண்.272.

77. மேலது, பா.எண்.286.

78. மேலது, பா.எண்.256.

79. க.பஞ்சாங்கம், சங்க இலக்கியம், ப.110.

80. குறுந்தொகை, பா.எண்.28.

81. நற்றிணை, பா.எண்.335.

82. குறுந்தொகை, பா.எண்.58.

83. நற்றிணை, பா.369, 1-4 வரிகள்.

84. அகநானூறு, பா.எண்.273.

85. நற்றிணை, பா.எண்.348.

86. குறுந்தொகை, பா.எண்.68, 1-5 வரிகள்.

87. நற்றிணை, பா.எண்.87.

# இயல் மூன்று

# சங்ககால ஆடவர் வாழ்க்கை

## முன்னுரை

'வினையே ஆடவர்க்கு உயிரே' என்ற நிலையில் உடல் வலிமையுடையவர் ஐவகை நிலங்களிலும் பல்வேறு தொழில் முனைவோராக விளங்குகின்றனர். தச்சர், கொல்லர், கம்மியர் போன்றோர் தொழில் வழியே பல்வேறு பொருள்களையும் ஐவகை நிலத்தார்க்கும் வேண்டிய கருவிகளைப் படைக்கும் தொழிலில் ஈடுபடுகின்றனர். ஆடவர்களின் வாழ்வியலை இவ்வியல் தொகுத்துரைக்கின்றது.

## மக்கள் வாழ்க்கை

உழவர்கள் உழவுத் தொழிலில் நெல் முதலிய தானியங்களை விளைவிக்கின்றனர். கொல்லர்கள் படைக் கருவிகளைத் தயார் செய்து போர்க்கருவிகள் சரிபார்க்கும் பணியில் ஈடுபடுகின்றனர்.

வண்ணார் அழுக்கான ஆடைகளைத் தூய்மை செய்யும் பணியில் ஈடுபடுகின்றனர். குதிரைப்படை, யானைப்படை, காலாட் படை, தேர்ப்படை போன்ற படைகளில் மறவர்கள் ஈடுபடுகின்றனர்.

ஐவகை நிலங்களில் வாழும் மக்கள் ஆநிரை மேய்த்தல், ஆநிரை காத்தல், வேட்டையாடுதல்; தினை, நெல் போன்ற தானியங்களை உற்பத்திச் செய்கின்றனர்.

அரசனுக்கு உதவும் வகையில் அமைச்சர்கள் துணை புரிகின்றனர். வணிகர்கள் வணிகத்தில் ஈடுபாடு கொண்டு விளங்குகின்றனர். கள்ளுண்டு மகிழ்ந்தாலும், புலால் உண்ணுதலும் பண்டைத் தமிழர்களுடைய வாழ்வியலில் காணப்படும் நிகழ்வாகும்.

**ஐவகை நிலத்தவர்கள்**

ஐவகை நிலத்து மக்கள் தங்கள் வாழ்க்கை முறையை வகுத்துக் கொண்டு அந்நில அமைப்பிற்கேற்ற வகையில் தங்கள் வாழ்வியல் சூழல்களை வடிவமைத்துக் கொண்டார்கள். குறிஞ்சி நிலமக்கள் கானவர் என்று அழைக்கப்பட்டனர். கானவர் என்ற இச்சொல் திருமுருகாற்றுப்படையிலும்[1] குறிஞ்சிப் பாட்டிலும் நற்றிணையிலும் இடம் பெற்றுள்ளது.

இதனை,

> **“கொடுந்தொழில் வல்வில் கொலைஇய கானவர்”[1] என்றும்,**
> **“அந்தி அந்தணர் அயர கானவர்”[2] என்றும்,**
> **“கொடுவிற்கானவன்”[3] என்றும்**

முறையே திருமுருகாற்றுப்படையும், குறிஞ்சிப்பாட்டும், நற்றிணையும் குறிஞ்சி நில மகனைக் கானவர் என்ற சொல்லால் அழைத்தல் நிலத்தின் பெயரால் அமைந்ததாகக் கருதமுடிகின்றது.

**குறிஞ்சி**

குறவர் என்ற சொல்

**"நறைஅகில் வயங்கிய நளிபுன நறும்புகை**
**உறைஅறு மையின் போகி, சாரல்**
**குறவர் பாக்கத்து இழிதரும் நாடன்"[4]**

என்றும்,

**"தேம்பிழி நறவின் குறவர் முன்றில்"[5]**

என்று குறிஞ்சிவாழ் நிலத்து ஆடவர் பெயர்களுள் ஒன்றெனக் கருத முடிகிறது.

குறுந்தொகையிலும் அகநானூற்றிலும் இவர்கள் மலைப்பகுதிகளில் தங்கள் வாழ்க்கை முறையை வகுத்துக் கொண்டார்கள். மலை வாழ்க்கைக்கு ஏற்ற உடல் வலிமையைப் பெற்றிருந்தார்கள். இவர்களின் வீட்டு முன்பகுதியில் வேங்கை மரங்கள் வளர்ந்தோங்கியிருந்தன.

இவர்கள் காட்டில் வாழ்ந்தமையால் வில்லாற்றல் பெற்றவர்களாக விளங்கினர்.

இதனை,

**"சிலைநவில் எறுழ்த்தோள்"[6]**
**"வன் கைக் கானவன்"[7]**
**"கொடுந்தொழில் வல்லில் கொலைஇய கானவர்"[8]**

என்ற பாடல் வரிகளால் சிறப்பிக்கப்படுகின்றனர். வேட்டையாடுதல் இவர்களுடைய முக்கியத் தொழிலாக அமைந்திருந்தது. தினை பயிரிடுதல், உழவுத்தொழில் போன்றவற்றில் சிலர் ஈடுபட்டனர்.

மலை தானியங்களையும், தேன், தினைமாவு, கிழங்கு, பழம் முதலியவற்றையும் உணவாகக் கொண்டனர். தம்மிடம் வருபவர்க்கு முள்ளம் பன்றித் தசையுடன் சோறு அளித்தனர்.[9]

**''பெரும் பயிர் ஆதி, பிணங்கு அரில் குட நாட்டு**
**எயினர் தந்த எய்ம் மான் எறி தசைப்**
**பைஞ் ஞணம் பெருத்த பசு வெள் அமலை**
**வருநர்க்கு வரையாது தருவனர்''**[10]

**முல்லை**

முல்லை நிலமக்கள் மேய்ச்சல் தொழிலில் ஈடுபட்டிருந்தனர். ஆடுமாடுகளை வளர்த்தலே இவர்களுடைய முக்கியமான தொழிலாகும். குறுகிய கால்களையுடைய குடிசைகளில் வாழ்ந்தனர். வீட்டுமுன் மாடுகளைக் கட்டுவதற்குரிய தாம்புகள் கட்டப் பெற்ற சிறுமுளைகள் காணப்பட்டன. தீக்கடைக் கோலினால் தீயை மூட்டினார்.

ஆயர்கள் எப்போதும் செருப்பு அணிந்திருப்பர். ஆடுகளைக் கட்டுவதற்குரிய தடியைக் கையில் ஊன்றிக் கொண்டிருப்பர். ஆடுமாடுகளை ஓட்டும் காலத்துச் சீழ்க்கை ஒலி செய்வர்.

இதனை,

**''மடிவாய்க் கோவலர்''**[11]
**''மடி வாய் இடையன்''**[12]

என்று குறிப்பிடுவதனால் அறியலாம்.

**''ஒன்றுஅமர் உடுக்கை கூழ்ஆர் இடையன்''**[13]
**''அம் துவர் ஆடைப பொதவனோடு''**[14]

இதனை,

**''காயாம் பூங்கண்ணிக் கருந் துவர் ஆடை''**[15]

என்பதனால் அறியலாம். கதம்ப மாலைகளையே சூடிக் கொள்வர்; தழையிலான ஆடையையும் அணிவர்.

**''ஒன்றுஅமர் உடுக்கை கூழ் ஆர் இடையன்''**[16]

**''பாசிலை தொடுத்த உவலைக் கண்ணி**
**மாசு உண் உடுக்கை மடி வாய் இடையன்''**[17]

இப்பாடல்கள் அணியும் மலர் மாலையைச் சுட்டுவன. புல்லாங்குழல் ஊதுவர். யாழினை வாசித்தலும் உண்டு. தமது பொருள்களை உறியில் வைத்து கொண்டு செல்வர். தினை, வரகுச்சோறு, கூழ், பால், இறைச்சி ஆகியன உணவுப் பொருளாகும்.

**''உறிக்கா ஊர்ந்த மறுப்படு மயிர்ச்சுவல்''**[18]

**மருதம்**

உழவுத் தொழிலே முக்கியத் தொழிலாகும். உழுதுண்டு வாழ்வதையே தொழிலாகக் கொண்ட மக்கள் வாழுமிடம். இளைஞர்கள் ஏறுதழுவியே பெண்ணைத் திருமணம் செய்வர். ஆயரும், ஆய்ச்சியரும் குரவைக் கூத்தாடித் வணக்கம் செலுத்துவர்.

**''குரூஉக் கண் கொலை ஏறு கொள்வான்''**[19]

புறநானூற்றில் கையறு நிலைத்துறையில் அமைந்த சோணாட்டு முகையலூர்ச் சிறுகருந்தும்பியார் பாடல்,

**''ஊர் நனி இறந்த பார் முதிர் பறந்தலை**
**ஓங்கு நிலை வேங்கை ஒள் இணர் நறு வீப்**
**போந்தை அம் தோட்டின் புனைந்தனர் தொடுத்து**
**பல் ஆன் கோவலர் படலை சூட்ட,**
**கல் ஆயினையே – கடுமான் தோன்றல்,**
**வான் ஏறு புரையும் நின் தாள் நிழல் வாழ்க்கைப்**
**பாசிலர் செல்வம் அன்றியும் விரி தார்க்**
**கடும் பகட்டு யானை வேந்தர்**
**ஒடுங்கா வென்றியும் நின்னொடு செலவே''[20]**

நிரைமீட்டு உயிர்துறந்து நடுகல்லான தலைவனின் ஈரத்தையும் வீரத்தையும் விளக்கும் இப்பாடல் வழியே நோக்குகையில் நடுகல்லையும் தெய்வ நிலையில் வைத்து வழிபட்டமை புலப்படுகின்றது.

மக்கள் மிகுதியாக வாழும் இடம் மருத நிலமாகும். இங்கு மக்கள் சேர்ந்து வாழும் இடம் சிற்றூர், பேரூர் என்று வழங்கப்பட்டது. சிறுவர்கள் அழகிய சிறுதேர்களை உருட்டி விளையாடினார். மக்களுக்குத் தேவையான பலபொருள்களும் இந்நிலத்தில் கிடைத்தது.

உழவர்கள் நெல்லையும் கரும்பையும் பயிர் செய்தார்கள். ஏர்களில் உழவுத் தொழிலில் பயிற்சி பெற்ற நல்ல எருதுகளைப் பூட்டி உழுதனர்.

**''ஈரச் செவ்வி உதவின ஆயினும்,**
**பல எருத்துள்ளும் நல் எருது நோக்கி**
**வீறு வீறு ஆயும் உழவன் போல''[21]**

என்ற பாடலில் அறியலாம்.

நெற்குவியல்கள் மலைகளைப் போலக் குவிந்தன. களத்திற்கு வரும் இரவலர்க்கு நெல்லை வாரியும் வழங்கினர்.

**“பெருங் களம் தொகுத்த உழவர் போல,**
**இரந்தோர் வறுங் கலம் மல்க வீசி”[22]**

களத்திற்கு வருவோர்க்கு நெல் வழங்கியதோடு உணவும் அளித்தனர். மீனையும், கள்ளையும் நெல்லுடன் வழங்கினார்.

**“கண்பு மலி பழனம் கமழத் துழைஇ,**
**வலையோர் தந்த இருஞ்சுவல் வாளை,**
**நிலையோர் இட்ட நெடுநாண் தூண்டில்,**
**பிடிக்கை அன்ன செங்கண் வராஅல்,**
**துடிக்கண் அன்ன குறையொடு விரைஇ,**
**பகன்றைக் கண்ணிப் பழையர் மகளிர்**
**ஞெண்டு ஆடு செறுவில் தராய்க்கண் வைத்த**
**விலங்கல் அன்ன, போர்முதல் தொலைஇ**
**வளம் செய் வினைஞர் வல்சி நல்க,**
**துளங்கு தசும்பு வாக்கிய பசும் பொதித் தேறல்**
**இளங்கதிர் ஞாயிற்றுக் களங்கள் தொறும் பெறுகுவிர்”[23]**

என்பதனின்று உணரமுடிகிறது.

## நெய்தல்

நெய்தல் நில மக்கள் கடற்கரையை அடுத்த பெருமணற்பரப்பில் கடல் வளத்தை நம்பி வாழ்ந்தார்கள். இவர்களின் குடிசைகள் தாழைநாரால் கட்டப்பட்டு தருப்பைப் புல்லால் கூரையை அமைத்திருப்பர். வீடுகளின் முன் தூண்டில் கம்புகள் வைக்கப்பட்டிருக்கும். குடிசைகளின் முற்றத்தின் மீன் பிடிக்கும் வலைகள் இருக்கும்.

இந்நிலத்தில் உள்ள பரதவர்கள் குளங்களிலும், நீர் நிலைகளிலும் உள்ள மீன்களைப் பிடிப்பார்கள்.

**"வேழம் நிரைத்து, வெண்கோடு விரைஇ,**
**தாழை முடித்து, தருப்பை வேய்ந்த**
**குறியிறைக் குரம்பை, பறியுடை முன்றில்**
**கொடுங்காற் புன்னைக் கோடுதுமித்து இயற்றிய**
**பைங்காய் தூங்கும் பாய்மணற் பந்தர்,**
**இளையரும் முதியரும் கிளையுடன் துவன்றி,**
**புலவு நுனைப் பகழியும் சிலையும் மான,**
**செவ்வரிக் கயலொடு பச்சிறாப் பிறழும்**
**மையிருங் குட்டத்து மகவொடு வழங்கி,**
**கோடை நீடினும் குறைபடல்அறியாத்**
**தோள்தாழ் குளத்த கோடு காத்திருக்கும்,**
**கொடுமுடி வலைஞர் குடிவயிற் சேப்பின்"**[24]

இவர்கள் வலிமையான கையை உடையவர்களாகக் காணப்பட்டனர். பரதவர், வலைஞர், திமிலோன் என்றும் அழைக்கப்பட்டனர்.

மகளிர் மீனை வெயிலில் உலர்த்துவர். அப்பொழுது அதைக்கவர வரும் பறவைகளை ஓட்டுவர்.

**"கடுந் தேர்ச் செல்வன் காதல் மகனே ;**
**நிணச் சுறா அறுத்த உணக்கல் வேண்டி,**
**இனப் புள் ஓப்பும் எமக்கு நலன் எவனோ ?"**[25]

பரதவமகளிர் மீன்களை சுமந்து சென்று அடுத்துள்ள மருத நிலத்து ஊர்களில் விற்று நெல் முதலிய பொருள்களைப் பண்டமாற்றாகப் பெற்று வருவர்.

**"உப்பு நொடை நெல்லின் மூரல் வெண்மூசோறு**
**அயிலை துழந்த அம் புளிச் சொரிந்து**
**கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்"**[26]

உப்பு விளைத்தல் இவர்களின் பெருந்தொழிலாகும். உப்பு வணிகர்களின் வண்டிகள் வரிசையாகச் செல்லும். உமணர்கள் ஊர் திரும்பும் போது அவரோடு வரும் குரங்குகளும் தம் சிறுவரோடு கிலுஇலுப்பைக் கொண்டு விளையாடுகின்றன.

**''நோன்பகட்டு உமணர் ஒழுகையொடு வந்த**
**மகாஅர் அன்ன மந்தி, மடவோர்**
**நகாஅர் அன்ன, நளிநீர் முத்தம்**
**வாள்வாய் எருத்தின் வயிற்றகத்து அடக்கி**
**தோள்புறம் மறைக்கும், நல்கூர் நுசுப்பின்**
**உளர்இயல் ஐம்பால் உமட்டியர் ஈன்ற**
**கிளர்பூண் புதல்வரொடு கிலுகிலி ஆடும்**
**தத்துநீர் வரைப்பின் கொற்கைக் கோமான்''**[27]

இவர்களின் உணவு அரிசிக்கூழ், மீன், கள் முதலியன. சுறா மீனைக் கடவுளாக வழிபடும் மரபினர். தாழை மலரையும், புன்னை மலரையும் அணிவர். மீன்பிடிக்கச் செல்லாத காலத்து ஆடவர்கள் தம் உரிமை மகளிரோடு கடற்கரை வழிபாடு செய்தும் கள்ளுண்டும் பொழுதைக் கழித்தனர்.

**''மடல் தாழை மலர் மலைந்தும் ;**
**புன்தலை இரும் பரதவர்**
**பைந் தழை மாமகளி ரொடு,**
**பாய் இரும் பனிக் கடல் வேட்டம் செல்லாது**
**உவவு மடிந்து உண்டு ஆடியும்''**[28]

என்ற பாடல் வழி உணர முடிகிறது.

**பாலை**

முல்லை நிலமும் குறிஞ்சி நிலமும் திரிவதால் உண்டாவது பாலை நிலமாகும்.

> **''முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து,**
> **நல்லியல்பு இழந்து, நடுங்குதுயர் உறுத்துப்,**
> **பாலை என்பதோர் படிவம் கொள்ளும்''**[29]

பாலையில் வெயில் மிகுதியாகக் காணப்படும். பாலை நிலத்திலுள்ள பரல் கற்கள் வேல் போல் அங்கு நடப்பவரின் கால்களைக் குத்தும்.

போக்கு அறு வெஞ்சுரம் வளம் இழந்து நிற்கும் இந்நிலம் புன்நிலத்தைப் என்றனர். இங்கு வாழ்பவர்கள் எயினர், மறவர் எனப்பட்டனர். வீடுகளில் யாரும் உள்ளே நுழையாதபடி நாணைக் கோர்த்த அம்பும், வில்லும் வீடுகளில் அமைந்திருக்கும்.

இந்நிலத்து வாழும் மறவர்கள் உடல் வலிமை படைத்தவர்கள். புலிபோலும் பார்வையுடையவர்கள். அஞ்சா நெஞ்சம் கொண்டவர்கள். இவர்களுடைய ஆடை வெந்நிறமாக அமைந்திருக்கும் காலில் தோல் செருப்பு அணிந்திருப்பர்.

வேட்டையாடுதல் இவர்களின் முக்கியத் தொழிலாகும். ஆநிரைகளைக் கவர்த்தலும், வழிப்போக்கர்களை வருத்திப் பொருளைப் பறிப்பதும் உண்டு.

**தொழிற் கருவிகள்**

தத்தம் வாழ்க்கைக்குத் தேவையான கருவிகளைச் செய்தளிக்கும் பணியில் அத்துறையைச் சார்ந்தோர் ஈடுபட்டனர். இத்தகையோர் கம்மியர், தொழுவர் என்ற பொருளில் கையாண்டனர். கைத்தொழில் செய்வோர் கம்மியர் என்றும், தொழில் செய்வர் தொழுவர் என்று அழைக்கப்பட்டனர்.[30]

உடல்வருத்தி உழைப்பதற்கேற்ற வலிமையைப் பெற்றிருந்தனர்.

இரும்புபோன்ற உடல் வன்மை மிக்கவர்களை

**''பாம்பு பிடித்தன்ன**
**அம்கோட்டுச் செறிந்த அவிழ்ந்துவீங்கு திவலின்''**[31]

என்கிறது. இவர்களுள் தச்சர், கொல்லர், குயவர், பொன்செய் கம்மியர் முதலியவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள்.

**கொல்லர்கள்**

இரும்புத் தொழிலில் ஆண்கள் ஈடுபட்டனர். வன்மையான தொழிலாதலால் ஆண்களே இத்தொழிலில் ஈடுபட்டனர். இரும்பு அடிப்பதற்குரிய பட்டை, வெம்மையை ஆற்றுவதற்குரிய தொட்டி, சூடான பொருளை எடுப்பதற்குரிய கருவி ஆகியவற்றை நற்றிணை சுட்டுகின்றது.

**"இரும்பு செய் கொல்லன் வெவ் உலைத் தெளித்த**
**தோய் மடற் சில்நீர் போல,**
**நோய் மலி நெஞ்சிற்கு ஏமம் ஆம் சிறிதே''**[32]

இரும்பை உருக்குவதற்கு உலைகள் மிதித்தும், ஊதியும் அமைக்கப்பட்டிருந்தன என்பதை

**“நல் அரா நடுங்க உரறி, கொல்லன்**
**ஊது உலைக் குருகின் உள் உயிர்த்து”**[33]

என்று பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடும். உலையிலிருந்து வெளிப்படும் பெருங்காற்றைத் துன்பத்தில் இருப்பவர் வெளிவிடும் பெருமூச்சுக்கு ஒப்பிடுவர்.

**“செல்க பாக ! எல்லின்று பொழுதே**
**வல்லோன் அடங்குகயிறு அமைப்ப கொல்லன்**
**விசைத்து வாங்கு துருத்தியின் வெய்ய உயிரா”**[34]

இத்தகைய உலைக்களம் ஊரின் எல்லைப் பகுதிகளிலேயே அமைந்திருந்தது. இத்தகைய இரும்பு வேலை செய்பவர்களை இரும்பு செய் பொற்கொல்லன் என்கிறது பெரும் பாணாற்றுப்படை.[35]

போர்க்கு உரிய கருவிகளை வடித்துக் கொடுப்பதும் களிறுகளின் கொம்புகளுக்குப் பூண் அமைப்பதும், யானைகளைக் கட்டுவதற்குரிய சங்கிலிகளைச் செய்வதும் இவர்களுடைய பணியாகும்.

**“மென்பிணி வன்தொடர் பேணாது, காழ் சாய்த்து,**
**கந்து நீத்து உழிதரும் கடாஅ யானையும்”**[36]

என்றும்,

**“வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே”**[37]

பாடாண் திணையில் வாள் மங்கலம் துறையில் அமைந்த புறநானூற்றுப்பாடல்,

**“இவ்வே, பீலி அணிந்து, மாலை சூட்டி**
**கண், திரள் நோன் காழ் திருத்தி, நெய் அணிந்து,**
**கடியுடை வியல் நகரவ்வே ; அவ்வே,**

**பகைவர்க் குத்தி, கோடு, நுதி, சிதைந்து,**
**கொல் துறைக் குற்றிலமாதோர் என்றும்**
**உண்டாயின் பதம் கொடுத்து,**
**இல்லாயின் உடன் உண்ணும்,**
**இல்லார் ஒக்கல் தலைவன்''[38]**

என்னும் குறிப்பால் போர்க்கருவிகள் செப்பம் செய்திடக் கொல்லன் உலைக்களத்தே கிடப்பதனைக் காட்டுகிறார்.

கொல்லுத்தொழில் செய்த கொல்லர்கள் அரசனுடைய போர்ப்படைக்குத் தேவையான கருவிகளைச் செய்வதில் பெரிதும் ஈடுபட்டனர்.

**தச்சர்**

நுட்பமான மரவேலைப்பாடுகளைச் செய்யும் பணியில் ஆடவர்களே முழுமையும் ஈடுபட்டனர். இவர்களை மரங்கொல் தச்சர் என்று புறநானூறு குறிப்பிடுகின்றது.

**''மரம்கொல் தச்சன் கைவல் சிறாஅர்''[39]** என்று அழைக்கப்பட்டனர். மழு, உளி, முடுக்குகருவி, எறிகுறடு, துளைப்பான், சுத்தியல் போன்றவை இவர்களுடைய ஆயதங்களாகும். உழு கலப்பைகள் செய்வதோடு தேர், வண்டி போன்ற ஊர்திகளையும் செய்தனர்.

**''எடுத்து எறி ஞாட்பின் இமையான், தச்சன்**
**அடுத்து எறி குறட்டின், நின்று மாய்ந்தனனே''[40]**

என்றும்,

அரண்மனையின் கதவுகள் மரத்தால் செய்யப்பட்டிருந்தன என்பதை

**''கைவல் கம்மியன் முடுக்கலின், புரைதீர்ந்து,**
**ஐயவி அப்பிய நெய்அணி நெடு நிலை''**[41]

என்று சிறுபாணாற்றுப்படை மூலமும் அறிய முடிகின்றது.

**''உள்அரக்கு எறிந்த உருக்குறு போர்வை,**
**கருந்தொழில் வினைஞர் கைவினை முற்றி,**
**ஊர்ந்து பெயர் பெற்ற எழில் நடைப் பாகரொடு''**[42]

### பொற்கொல்லர்

பொன்னை உருக்கி அதன் மூலம் வேலைப்பாடுகளைக் கொண்ட ஆபரணங்களைச் செய்பவர்கள் பொற்கொல்லர்கள் என்றழைக்கப்பட்டனர் என்பதை

**''சூடுறு நன்பொன் சுடர் இழை புனைநரும்''**[43]

என்பதால் அறியலாம்.

பொன்னைக் கண்டறிய பொற்கொல்லர்கள் உரைகல் வைத்திருந்தனர்.

**''பொன்காண் கட்டளை கடுப்ப, கண்பின்''**[44]

என்பதற்கு சான்றாக பெரும்பாணாற்றுப்டை கூறுவதை அறிய முடிகிறது.

### செம்பு வேலைகள் செய்வோர்

செம்பை வார்த்து உருக்கி பானை முதலிய கலங்களைச் செய்யும் உலோகத்தால் செய்யப்படும் பாத்திரங்களைக் கடைந்து அழுத்தம் கொடுப்பர் கடையும்போது மின்னல் போன்று தோற்றமளிக்கும்.

**"மண் திணி ஞாலம் விளங்க, கம்மியர்**
**செம்பு சொரி பானையின் மின்னி"**[45]

என்கிறார் நற்றிணை. பொன், முத்து, மணி, பவழம் ஆகியவற்றைக் கொண்டு விலைமதிப்புடைய ஆபரணங்களைச் செய்தனர் என்பதை

**"பொன்னும், துகிரும், முத்தும், மன்னிய**
**மா மலை பயந்த காமரு மணியும்,**
**இடைபடச் சேய ஆயினும், தொடை புணர்ந்து,**
**அரு விலை நன் கலம் அமைக்கும் காலை,**
**ஒரு வழித் தோன்றியாங்கு"**[46]

என்று குறிப்பிடும் அணிகளுக்கு உதவிய பொருள்களைப் புறநானூறு சுட்டிச் செல்கின்றது.

கொடுமணம் என்னும் ஊர் நல்ல அணிகலன்களுக்குப் பெயர் பெற்று விளங்கியது என்கிறது பதிற்றுப்பத்தில்

**"கொடுமணம் பட்ட நெடுமொழி ஒக்கலொடு**
**பந்தப் பெயரிய பேர் இசை மூதூர்"**[47]

என்று கூறுவதாக அறியலாகிறது.

சங்கு போன்றவற்றை அறுத்துச் சுத்தம் செய்தனர் என்பதை

**"வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த**
**வளை களைந் ஒழிந்த கொழுந்தின் அன்ன"**[48]

என்று அகநானூறு குறிப்பிடுகிறது.

**குயவர்**

சங்ககாலத்தே மக்கள் மண்பாண்டங்களைப் பெருமளவில் பயன்படுத்தினர். பல நிலைகளில் மண்ணால் செய்யப்பட்ட பொருள்களையே பயன்படுத்தினார்கள். இறந்த உடலை தாழிகள் கொண்டு அடக்கம் செய்தனர். மண்பானைகள் நெருப்பில் வைத்து சுடப்பட்ட பின்னரே பயன்படுத்தப்பட்டன.

**''கலம் செய் கோவே ! கலம் செய் கோவே !**
**இருள் திணிந்தன்ன குரூஉத் திரள் பரூஉப் புகை''**[49]

இறந்த உடல்களைப் புதை குழியில் வைத்து அடக்கம் செய்தனர்.

**''கவிசெந் தாழிக் குவிபுறத்து இருந்த**
**செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவா ?''**[50]

என்று வெண்ணிக்குயத்தியார் குறிப்பிடுகின்றார்.

மேலும் உழவுத்தொழிலும், முக்கியத் தொழிலாகக் கொண்டு மக்கள் விளங்கினர். வன்மையான தொழில்களில் ஆண்களே பெரிதும் ஈடுபட்டனர்.

**பிறதொழில் செய்வோர்**

மக்கள் பருத்தித் தொழிலில் ஈடுபட்டனர். இதனை, பருத்தி வேலிச்சீறூர் என்பதை புறநானூறு.

**''பருத்தி வேலிச் சீறூர் மன்னன்**
**உழுத்தர் உண்ட ஓய் நடைப் புரவி,''**[51]

குறிப்பதிலிருந்து அறியலாம். முதிர்ந்து வெடித்த பருத்திக் காய்களிலிருந்து கிடைக்கும் பஞ்சை கொம்பால் அடித்துச் சுத்தம் செய்தனர்.

பட்டினால் நெசவு செய்பவர்களும் இருந்தனர். பட்டாடைகளின் ஒரங்களில் முடிச்சுகள் போட்டு அழகு செய்தனர்.

**''கொட்டைக் கரைய பட்டுஉடை நல்கி''[52]**

என்பதிலிருந்து இதனை அறிய முடிகிறது.

இரவுக் காலங்களில் பட்டாடையை நீக்கி நூலாடைகளை அணிந்தார்கள் மக்கள் என்பதை,

**''பட்டு நீக்கித் துகில் உடுத்தும்**
**மட்டு நீக்கித் மதுமகிழ்ந்தும்''[53]**

என்னும் செய்தி புலப்படுத்துகிறது.

**சிற்பக்கலையில் தேர்ந்தவர்கள்**

சிற்பக் கலையில் வல்லவர்கள் கூடி மன்னர்க்கேற்ற வகையில் மனை வகுத்தனர்.

**''நூல் அறி புலவர் நுண்ணதின் கயிறு இட்டு,**
**தேஎம் கொண்டு, தெய்வம் நோக்கி,**
**பெரும் பெயர் மன்னர்க்கு ஒப்ப மனைவகுத்து''[54]**

பல நிலைகளை உடைய பெரிய மாளிகைகளோடு சிறிய இல்லங்களும் தச்சர்களால் ஆக்கப்பட்டன. பெரிய மாளிகைகள் ஓவியச் சிறப்புடன் சிறந்து விளங்கின.

**''வேறுபட்டவினை ஓவத்து**
**வெண்கோயில் மாசு ஊட்டும்''[55]**

**''சிற்றில் நல் தூண்''[56]**

என்று புறநானூறும் குறிப்பிடுகின்றது.

**ஓவியர்கள்**

துகிலியைக் கொண்டு அரக்கு முதலிய வண்ணங்களைச் சேர்த்து சித்திரம் வரைந்தனர். இவர்களை 'கண்ணுார் வினைஞர்' என்று பெயரிட்டழைத்தனர்.

**''எவ்வகைச் செய்தியும் உவமம் காட்டி,**
**நுண்ணிதின் உணர்ந்த நுழைந்த நோக்கின்**
**கண்ணுள் வினைஞரும், பிறரும் கூடி''**[57]

என்றும், மேலும்,

**''ஓவத்தன்ன புனை நல்இல்''**[58]

**''எழுத்து நிலை மண்டபம்''**[59]

என்று குறிப்பிடுவதை உணரலாம்.

**அரசுப்பணிகளில் துணைபுரிவோர்**

அரசர்க்கு அறிவுரையளிக்கும் அமைச்சர் முதற்கொண்டு அரண்மனையில் குற்றேவல் பணிகள் வரை ஆடவர்கள் பல நிலைகளில் அரசர்க்கு உதவி செய்தனர். அமைச்சர்களுக்கு காவிதி, ஏனாதி போன்ற பட்டங்களை மன்னன் வழங்கினான். அறத்தில் வழுவாது அரச காரியங்களை அறிவுறுத்தி வந்தனர்.

**''செம்மை சான்ற காவிதி மாக்களும்''**[60]

என்கிறார் மாங்குடி மருதனார். அமைச்சரோடு அரசியலில் உதவிட புரோகிதர், சேனாதிபதி, தூதர், ஒற்றர் போன்ற பணிகளில் ஆடவர்கள் ஈடுபட்டனர்.

அரசனின் மெய்க்காப்பாளர் பணியில் ஆடவர்கள் ஈடுபட்டிருந்தனர். இவர்கள் மன்னர்கள் பாசறையில் தூக்கமின்றி அரசனைக் காத்தமையை முல்லைப்பாட்டு குறிப்பிடுகின்றது.

பொழுதினை அளந்துரைப்போர்க்கு நாழிகைக் கணக்கர் என்று பெயர். மன்னன் பாசறையில் இருந்தபோது அரசனுக்கு பொழுதை அளந்து கணக்கிட்டு உரைக்கும் நாழிகைக் கணக்கர்கள் இருந்தனர் என்று முல்லைப்பாட்டு எடுத்துரைக்கின்றது.

பெரிய நீர் நிலைகளைக் காவல் காக்கும் பணியிலும் ஆடவர்கள் ஈடுபட்டனர்.

**“தொழில்மழை பொழிந்த பானாட் கங்குல்,**
**எறிதிரைத் திவலை தூஉம் சிறு கோட்டுப்**
**பெருங்குளம் காவலன் போல**
**அருங்கடி அன்னையும் துயில்மறந் தனளே ?”**[61]

என்று குறிப்பிடுவதிலிருந்து அறிய முடிகிறது.

**காவல்**

நாடுகாவலுக்குத் துணையாக நால்வகைப் படைகள் இருந்தன.

**“நெடுநல் யானையும், தேரும் மாவும்**
**படை அமை மறவரும் உடையம் யாம்**[62]
**கடுஞ் சினத்த கொல் களிறும் கதழ் பரிய கலி மாவும்,**
**நெடுங் கொடிய நிமிர்தேரும், நெஞ்சு உடைய புகன் மறவரும் என**
**நான்குடன் மாண்டது ஆயினும்”**[63]

என்று வரும் அடிகள் நான்கு படைகளும் மாட்சிமைபெற்று விளங்கியமையைச் சுட்டும்.

காற்றைவிட வேகமாகச் செல்லும் வகையில் குதிரைகளைப் பழக்கினார். அக்குதிரைகளையே போர்க் களத்தில் பயன்படுத்தினர்.

**''மா வாராதே ; மா வாராதே ;**
**எல்லார் மாவும் வந்தன''**[64]

என்பதிலிருந்து அறிய முடிகிறது. யானைகளைப் பிடிக்கவும், அவைகளைப் பழக்கித் தொழிலில் ஈடுபடுத்தவும் அவைகளுக்கு வேண்டிய உணவு வகைகளை அளிக்கவும் தொழிலாளர்கள் இருந்தனர். குழிகளை வெட்டி பழகிய யானையை வைத்து யானைகளைப் பிடித்தனர். யானையைப் பழக்குமிடத்தில் வடமொழிச் சொற்களைப் பயன்படுத்தினர்.

**''கவைமுட் கருவியின், வடமொழி பயிற்றி**
**கல்லா இளைஞர் கவளம் கைப்ப''**[65]

**போர் வீரர்கள்**

வலிமைமிக்க ஆடவர்கள் போர்ப்படையில் பணிபுரிந்தனர். கச்சையில் வாள் முதலியவற்றை அணிந்து மார்பில் கவசம் பூண்டு வில், வேல் போன்றவற்றையுடையவர்களாய் விளங்கினர்.

**''விரைப் பரி வருந்திய வீங்கு செலல் இளையர்**
**அரைச் செறி கச்சை யாப்பு அழித்து அசைஇ**
**வேண்டு அமர் நடையர்** [66]
**பல் ஆதிதிருள் நிரை பெயர்தரப் பெயர்தந்து**
**கல்லா இளையர் நீங்க நீங்கான்,**
**வில் உமிழ் கடுங் கணை மூழ்க**
**கொல்புனல் சிறையின் விலங்கியோன் கல்லே''**[67]

எத்தகைய தடைகள் வந்தாலும் அவற்றை அழித்துச் செல்லும் மறம் பூண் வாழ்க்கையை உடையவர் இவர்களுக்குரிய ஆயுதங்களைக் கொல்லர்கள் வடித்துத் தந்தனர்.

**“வேல் வடித்துக் கொடுத்தல் கொல்ற்குக் கடனே”**[68]

போருக்குச் செல்லும் இவர்கள் கள் முதலியவற்றை அருந்தினர். வெற்றி பெற்ற வீரர்கள் பொற்பூ போன்றவற்றைப் பரிசாகப் பெற்றனர். நான்கு வகையான படைகளும் அரசனின் தலைநகரில் இருந்தன.

**‘‘பனைமீன் வழங்கும் வளைமேய் பரப்பின்,**
**வீங்கு பிணி நோன்கயிறு அரிஇ**
**................................................**
**................................................**
**கள் ஆர் களமர் இருஞ்செரு மயக்கமும்**
**அரியவும் பெரியவும் வருவன பெயர்தலின்’’**[69]

என்பதனையும் உணர முடிகிறது.

**வணிகர்கள்**

நகரங்களில் உள்ள நாளங்காடிகளிலும், அல்லங்காடிகளிலும் பல பொருள்களை விற்பனை செய்தனர்.

**‘‘பணிலம் கலி அவிந்து அடங்க, காழ் சாய்த்து,**
**நொடை நவில் நெடுங்கடை அடைத்து, மடமதர்’’**[70]

என்று கூறும் புறநானூறு. துறைமுகங்களில் பெரிய பண்டக சாலைகளை அமைத்துக் கொண்டு நீர், நிலவணிகம் புரிந்தனர்.

**‘‘வான் முகந்த நீர் மலைப் பொழியவும்’’**[71]

கடைத் தெருக்களில் பல்வேறு பண்டங்களின் விற்பனையைக் குறிக்கும் கொடிகள் காணப்பட்டன.

**வரி வசூல்**

வணிகப் பொருட்களுக்கு வரி வாங்குவோர் இருந்தனர். சுங்கத்தால் வாங்கப்படும் வரியை உல்கு என்று பெயரிட்டழைத்தனர்.

**ஆறலைக் கள்வர்**

வழிப்பறிசெய்வோர் ஆறலைக் கள்வர் என்றழைக்கப்பட்டனர். இவர்கள் வில்லாற்றலில் வழிப்போவாரை வருத்தி அவர்களிடமிருந்து பொருளைப் பெற்று வாழ்ந்தனர் என்பதை

> **"'நின்னது தா' என நிலை தளர,**
> **மரம் பிறங்கிய நளிச் சிலம்பில்**
> **குரங்கு அன்ன புன் குறுங் கூளியர்"**[72]

என்பதிலிருந்து அறிய முடிகிறது.

**இரவலர்**

உடல் உழைப்பினைக் கொள்ளாமல் இசை, கூத்து, புலமை போன்றவற்றில் ஏதேனும் ஒன்றினை வெளிப்படுத்தி தேர், களிறு, பொன், பொருள் போன்றவற்றைப் பெற்ற இரவலர்களும் இருந்தனர் என்பதற்கு கீழ்வரும் புறநானூற்றுப் பாடலே சான்றாகும்.

> **"நின் நசை வேட்கையின் இரவலர் வருவர் – அது**
> **முன்னம் முகத்தின் உணர்ந்து அவர்**
> **இன்மை தீர்த்தல் வன்மையானே"**[73]

**குற்றேவலர்கள்**

பிறர் ஏவும் தொழிலைச் செய்பவர்கள். இவர்கள் ஒருவர்க்குக் கட்டுப்பட்டு உரிமையின்றி வாழும் இயல்பினர்.

இவர்களைத் தொல்காப்பியர்

**"அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்**
**கடிவரையில புறத்தென்மனார் புலவர்"**[74]

என்றார். அடிமையானவர்கள் தங்கள் தலைமைக்குக் கட்டுப்பட்டு வாழ்ந்தனர். இதனை,

கலித்தொகையும்,

**"தொடிய எமக்கு நீ யாரை? பெரியார்க்கு**
**அடியரோ ஆற்றாதவர்"**[75] என்றுரைக்கின்றது.

**தொழிற்பிரிவுகள்**

தமிழர்களிடையே அக்காலத்தில் பல பிரிவுகள் இருந்தன. அப்பிரிவுகள் அவர்கள் செய்யும் தொழில்பற்றியும், வாழும் இடம் பற்றியும் தோன்றின. அந்தனர், அரசர், வணிகர், வேளாளர், வலைஞர், எயினர், கானவர், ஆயர், உழவர் போன்ற பிரிவுகள் அவை,

இசை நாடகம் போன்ற கலைகளையே தொழிலாகக் கொண்ட பொருநர், பாணர், கூத்தர் முதலியவர்கள் இருந்தனர். இவர்கள் செல்வர்களிடம் சென்று ஆடிப்பாடி அவர்கள் கொடுக்கும் பரிசுகளைப் பெற்று உயிர் வாழ்ந்தனர்.

உணவு, உடை, வாழ்விடம் இல்லாமல் திரித்தவர்களும் காணப்பட்டனர். மாடமாளிகை கொண்டு உல்லாச வாழ்க்கை வாழ்ந்தவர்களும் உண்டு. கற்றவர்களும், கல்லாதவர்களும் பரவலாகவும் இருந்தனர்.

**நடுகல் வணக்கம்**

இறந்த வீரர்களுக்கு நடுகல் வைத்து வழிபட்டனர். இவை தமிழக அளவில் பல கோயில்கள் இருந்தன. விக்கிரக வழிபாடு நடைபெற்று உள்ளது. தமிழர்கள் சிவன், திருமால், முருகன், காளி முதலிய தெய்வங்களையும் வழிப்பட்டனர்.

தெய்வ நம்பிக்கைமிக்கவர்களாக விளங்கினர். தெய்வங்களுக்கு உயிர்ப்பலியிடல் நடைமுறையில் இருந்துள்ளது.

**விருந்தோம்பல்**

மதுவிலக்கும், புலால் மறுத்தலும், பண்டைத் தமிழகத்தில் இல்லை. சங்க இலக்கியத்தில் இவை பல இடங்களில் மணம் வீசுகின்றன. பழந்தமிழர் மதுவையும், மாமிசத்தையும் சிறந்த உணவாகக் கொண்டார்கள். வசதி படைத்தவர்கள் தங்களிடம் வந்தவர்களுக்கு முதலில் மதுபானம் தந்து பின்னர் நல்ல மாமிச உணவுகளை வழங்கினர்.

**“இழைஅணி வனப்பின் இன்நகை மகளிர்**
**போக்கு இல் பொலங்கலம் நிறைய பல்கால்**
**வாக்குபு தரத்தர, வருத்தம் வீட**
**ஆர உண்டு பேரஞர் போக்கி**
**செருக்கொடு நின்ற காலை”**[76]

என்று குறிப்பிடுவதிலிருந்து உணரலாம். மகளிர் பொற் கிண்ணத்தில் மதுவை ஊற்றிக் கொடுப்பவர் என்பதனால் அக்காலச் செல்வர்களின் நிலை வெளிப்படுகிறது.

**இசைக் கலைஞர்கள்**

இசைக்கலையில் பாணர்கள் நன்கு தேர்ச்சி பெற்றவர்களாய் விளங்கினர். முடியுடை வேந்தர்களையும், செல்வர்களையும், குறுநில மன்னர்களையும் நாடிச் சென்று தம்முடைய இசைத் திறமை வாயிலாக பல்வேறு பரிசுகளைப் பெற்றனர்.

> **"உலைந்த ஒக்கல் பாடுநர் செலினே**
> **உரன்மலி உள்ளமொடு முனைபா ழாக**
> **அருங்குறும்பு எறிந்த பெருங்கல வெறுக்கை"**[77]

என்ற பாடலில் அறிய முடிகிறது.

**கூத்துக் கலைஞர்கள்**

தனித்தனியான வரலாறுகளை நடித்துக் காட்டுவதே கூத்தாகும்.

> **"குழல் வழி நின்றது யாழே; யாழ்வழித்**
> **தண்ணுமை நின்றது தகவே; தண்ணுமைப்**
> **பின்வழி நின்றது முழவே"**[78]

என்று கூத்துக்கலை பற்றி இளங்கோவடிகளிலும் சிலம்பில் சுட்டுவதனைக் காணமுடிகின்றது.

**மருத்துவம்**

சங்க கால மக்கள் மருத்துவத்திலும் பயிற்சி பெற்றிருந்தனர்.

**''திருத்திய யாக்கையுள் மருத்துவன் ஊட்டிய**
**மருந்து போல், மருந்து ஆகி மனன்உவப்ப''**[79]

என்பதனால் அறியோம்.

**கட்டிடக்கலை**

மக்கள் தங்கள் நாகரிக வாழ்க்கையை வெளிப்படுத்துவதாக கட்டிடங்கள் அமைந்தன. கட்டிடக் கலையின் சிறப்புகளைப் பெரிய கோயில்களும், கட்டிடங்களும், மாளிகைகளும் எடுத்துரைக்கும்.

ஒரினத்தின் நாகரிகச் செழுமையினை எடுத்துக்காட்டும் சின்னங்களில் குறிப்பிடத் தக்கது கட்டிடக்கலையாகும்.

கட்டிடங்கள் செங்கல்லால் கட்டப்பட்டமையை ''சுடுமண் ஓங்கிய நெடுநிலை'' என மணிமேகலை குறிப்பிடுகின்றது. சுவர்கள் அழகிய வண்ணம் பூசப்பெற்றிருந்தது.

**''இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென**
**மணிப்புறாத் துறந்த மரம்சோர் மாடத்து**
**எழுது அணி கடவுள் போகலின், புல்லென்று**
**ஒழுகுபலி மறந்த மெழுகாப் புன்திணை''**[80]

என்று அகநானூறும் குறிப்பிடுகின்றது.

கோட்டைகள் மண், செங்கல், கருங்கல் போன்ற திடப்பொருட்கள் கொண்டு கட்டப்பட்டன. ஈயத்தை உருக்கி ஊற்றிக் கட்டிங்களைக் கட்டினர். பாதுகாப்பிற்கு அமைக்கப்பட்ட கோட்டைகளில் எதிரியின் வீரத்தை அறியும் வகையில் ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருந்தன.

**''யாறு கிடந்தன்ன அகல் நெடுந் தெருவில்''**[81]

**“தின்தேர் குழித்த குண்டுநெடுந் தெருவில்’’[82]**

எனும் பாடல்களில் இருந்து இதனை அறியலாம்.

**பல சமயத்தவர்**

சங்ககாலத்தே பல்வேறு கொள்கைகளையுடைய மக்கள் வாழ்ந்துள்ளனர். அக்காலத்தே சமணப்பள்ளிகளும், பௌத்தப் பள்ளிகளும் இருந்தன என்பதை,

**“தண் கேணித் தகை முற்றத்து,**
**பகட்டு எருத்தின் பலசாலை,**
**தவப் பள்ளி தாழ் காவின்**
**அவிர் சடை முனிவர் அங்கி வேட்கும்**
**ஆவுதி நறும் புகை முனைஇ, குயில் தம்**
**மா இரும் பெடையொடு இரியல் போகி**
**பூதம் காக்கும் புகல் அருங் கடிநகர்**
**தூதுஉண் அம் புறவொடு துச்சிற் சேக்கும்’’[83]**

என்று பட்டினப்பாலை குறிப்பிடும்.

**தொகுப்புரை**

சங்ககால ஆடவர்கள் தனி நிலையிலும், குடும்ப நிலையிலும், அரசுக்கு உதவி புரியும் நிலையிலும் ஆடவர்க்குரிய வீரம் சிறக்கப் பாடுபட்டனர் என்பதே அடிப்படையாக அமைகிறது.

மக்கள் ஐவகை நிலங்களிலும் தத்தம் தொழில்கள் மேம்பாடு பட்டார்கள். கொல்லர், தச்சர், கருமார், உழுது தொழில் செய்வோர் தம் தொழில் மூலம் வருவாய் ஈட்டி இல்லற மாண்புகள் சிறக்க பாடுபட்டார்கள்.

அரசு பணிகளில் அரசனுக்குப் பல்வேறு நிலைகளிலும் பணியாற்றி செம்மையான நல்லாட்சி நடத்தி துணை புரிந்தார்கள் விருந்தோம்பும் பண்பில் பெண்களோடு இருந்து நல்விருந்தோம்பினர். இசைக் கலைஞர்கள், கூத்துக் கலைஞர்கள் போற்றப்பட்டனர்.

# சான்றெண் விளக்கம்

1. திருமுருகாற்றுப்படை, 194 வரி.
2. குறிஞ்சிப்பாட்டு, 225 வரி.
3. நற்றிணை, பா.எண்.75, 6வது வரி.
4. குறுந்தொகை, பா.எண்.339, 1-3 வரிகள்.
5. அகநானூறு, பா.எண்.78, 7வது வரி.
6. பெரும்பானாற்றுப்படை, 145 வரி.
7. நற்றிணை பா.எண். 285, 3வது வரி.
8. மேலது, பா.எண். 350.
9. திருமுருகாற்றுப்படை, 194 வரி.
10. புறநானூறு, பா. எண்.177, 12-15 வரிகள்.
11. பெரும் பாணாற்றுப்படை, 166 வரி.
12. புறநானூறு, பா.எண்.54, 11 வது வரி.
13. பெரும்பாணாற்றுப்படை, 175 வரி.
14. கலித்தொகை, பா.எண்.102, 37வது வரி.
15. மேலது, பா.எண்.108, 10வது வரி.
16. பெரும்பாணாற்றுப்படை, 175 வரி.
17. புறநானூறு, பா.எண்.54, 11வது வரி.
18. பெரும்பாணாற்றுப்படை, 171 வரி.
19. கலித்தொகை, பா.எண்.104, 23வது வரி.
20. புறநானூறு, பா.எண்.265.
21. புறநானூறு, பா.எண்.289, 1-3 வரிகள்.

22. அகநானூறு, பா.எண்.30, 8-9 வரிகள்.

23. மலைபடுகடாம், 454-464 வரிகள்.

24. பெரும்பாணாற்றுப் படை, 263-273 வரிகள்.

25. நற்றிணை, பா.எண்.45, 5-7 வரிகள்.

26. அகநானூறு பா.எண்.60, 4-6 வரிகள்.

27. சிறுபாணாற்றுப்படை, 55-62 வரிகள்.

28. பட்டிணப்பாலை, 88-93 வரிகள்.

29. சிலம்பு, காடுகாண் காதை, 64-67 வரிகள்.

30. மதுரைக் காஞ்சி, 521-589 வரிகள்.

31. சிறுபாணாற்றுப்படை, 222-223 வரிகள்.

32. நற்றிணை, பா.எண்.133, 9-11 வரிகள்.

33. மேலது, பா.எண்.125. 3-4 வரிகள்.

34. அகநானூறு, பா.எண்.224, 1-3 வரி.

35. பெரும்பாணாற்றுப்படை, வரி 436.

36. மதுரைக்காஞ்சி, 382-383 வரிகள்.

37. புறநானூறு, பா.எண்.312, 3வது வரி.

38. மேலது, பா.எண்.95.

39. புறநானூறு, பா.எண்.206, 11வது வரி.

40. மேலது, பா.எண்.290, 4-5 வரி.

41. நெடுநல்வாடை, 85-86 வரிகள்.

42. சிறுபாணாற்றுப்படை, 256-258 வரிகள்.

43. மதுரைக் காஞ்சி, 512 வரி.

44. பெரும்பாணாற்றுப்படை, 220 வரி.

45. நற்றிணை, பா.எண்.153, 2-3 வரிகள்.
46. புறநானூறு, பா.எண்.218, 1-5 வரிகள்.
47. பதிற்றுப்பத்து, பா.எண்.67, 1-2 வரிகள்.
48. அகநானூறு, பா.எண்.24, 1-2 வரிகள்.
49. புறநானூறு, பா.எண்.228, 1-2 வரிகள்.
50. மேலது, பா.எண்.238, 1-2 வரிகள்.
51. மேலது, பா.எண்.299, 1-2 வரிகள்.
52. பொருநராற்றுப்படை, 155 வரி.
53. பட்டினப்பாலை, 107 வரி.
54. நெடுநல்வாடை, 76-78 வரிகள்.
55. பட்டினப்பாலை, 49-50 வரிகள்.
56. புறநானூறு, பா.எண்.86, 1வது வரி.
57. மதுரைக்காஞ்சி, 515-518 வரிகள்.
58. அகநானூறு, பா.எண்.98, 11வது வரி.
59. பரிபாடல், பா.எண்.19, 53வது வரி.
60. மதுரைக்காஞ்சி, 499 வரி.
61. அகநானூறு, பா.எண்.252, 11-14 வரிகள்.
62. புறநானூறு, பா.எண்.72, 4-5 வரிகள்.
63. மேலது, பா.எண்.55, 7-9 வரிகள்.
64. மேலது, பா.எண்.273, 1-2 வரிகள்.
65. முல்லைப்பாட்டு, 35-36 வரிகள்.
66. நற்றிணை, பா.எண்.21, 1-3 வரிகள்.
67. புறநானூறு, பா.எண்.263, 6-9 வரிகள்.

68. மேலது, பா.எண்.312, 3வது வரி.
69. மதுரைக்காஞ்சி, 375-394 வரிகள்.
70. மேலது, 621-622 வரிகள்.
71. பட்டினப்பாலை, 126 வரி.
72. புறநானூறு, பா.எண்.136, 11-13 வரிகள்.
73. மேலது, பா.எண்.3, 24-26 வரிகள்.
74. தொல்பொருள், அகத்திணையியல், நூற்பா. 23.
75. கலித்தொகை, பா.எண்.88, 3-4 வரிகள்.
76. பொருநராற்றுப்படை, 85-89 வரிகள்.
77. அகநானூறு, பா.எண்.349, 5-7 வரிகள்.
78. சிலப்பதிகாரம் அரங்கேற்று காதை, 139-141 வரிகள்.
79. கலித்தொகை, பாலைக்கலி, பா.எண்.17, 20-21 வரிகள்.
80. அகநானூறு, பா.எண்.167, 13-16 வரிகள்.
81. மதுரைக் காஞ்சி, 359 வரி.
82. பெரும்பாணாற்றுப்படை, வரி 397.
83. பட்டினப்பாலை, 151-58 வரிகள்.

# இயல் நான்கு

# சங்க இலக்கியத்தில் வாழ்வியல் சிந்தனைகள்

**முன்னுரை**

பண்டைக்காலத் தமிழ் மக்கள் தங்கள் வாழ்வியல் சூழல்களையும் வாழும் நெறிமுறைகளையும் தாங்கள் வாழும் சூழலுக்கேற்ப நிலத்தின் அடிப்படையில் அமைத்துக் கொண்டனர். சீரிய நெறிமுறைகளை வகுத்துக்கொண்டு காடு கொன்று நாடாக்கி, குளம் தொட்டு வளம் பெருக்கிடும் சீர்மிகு சிந்தனையைக் கொண்டிருந்தனர்.

இயற்கையாகக் கிடைத்த உணவு வகைகளையும், காடுகளிலும் மலைகளிலும் கிடைக்கப்பெற்ற காய்கனிகளையும், கிழங்கு வகைகளையும் சுற்றம் சூழ உண்டு வாழ்க்கைச் சூழலை வளமாக்கிக் கொண்டனர்.

தாங்கள் உற்பத்தி செய்த நெல், வரகு, தினை தானிய வகைகளையும், நெய், பால், தயிர் போன்றவற்றையும் உண்டு ஆரோக்கியமான மனநிலையில் மனநிறைவு பெற்றவர்களாய் வாழ்க்கையைச் செம்மார்ந்த வாழ்க்கையாக்கி மகிழ்ந்தனர். அவர்களின் சிந்தனைகள் யாவும் எல்லா வளமும் நலமும் பெற்றவையாக வாழ்க்கை அமையவே விரும்பினர். அவர்கள் தம் சிந்தனைகளை இவ்வியல் பகுத்தும் தொகுத்தும் ஆராய்கின்றது.

## இயற்கைப் பற்று

இயற்கையின் அரவணைப்பில் இன்பங்கண்டு, இயற்கையாகக் கிடைத்த பொருட்களைக் கொண்டு ஆனந்த வாழ்வில் தங்கள் வாழ்க்கைப் பாதையில் வீறுநடை போட்டனர். பண்டமாற்று நிலையில் தங்களிடம் உற்பத்தியான பொருட்களை மற்றவர்களுக்குக் கொடுத்து அதற்குப்பதிலாக பிறரிடம் உற்பத்தியான பொருட்களைப் பெற்றனர். வளமான வாழ்க்கையோடு வறுமை குடிபுகினும் மற்றவர்க்குக் காட்டிக்கொள்ளாத இல்லறநெறியினை மாண்புறக் காத்தனர். குடி ஓம்பி, கல்வியில் திளைத்து, பயிர் விளைவித்து, பிறர்க்குக் கொடுத்துத் தானும் இல்லாமை என்னும் பொல்லாமை நீங்கிய இன்பத்தில் திளைத்து மகிழ்ந்த நிலைபாடுகளை இவ்வியல் ஆராய முற்படுகிறது.

## நிலமும் பொழுதும்

பண்டைத் தமிழ் மக்கள் நாகரிகம், பண்பாடு பழக்க வழக்கங்களால் சிறந்து விளங்கினர். இயற்கையோடு இயைந்த வாழ்க்கையை வாழ்ந்த மக்கள் நிலத்தை முதற்பொருளாகக் கொண்டார்கள்.

**‘‘முதலெனப்படுவது நிலம் பொழு திரண்டின்**
**இயல்பென மொழிப இயல் புணர்ந்தோரே’’**[1]

என்றார் தொல்காப்பியர்.

தாங்கள் வாழ்ந்து, அதற்கேற்ற வாழ்க்கைச் சூழலை அமைத்துக்கொண்ட மக்கள் நிலத்தை நானிலமாகப் பகுத்தனர். முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற பாகுபாட்டோடு பாலை எனும் நிலத்தையும்

பகுத்து அந்நிலங்களுக்குரிய தெய்வத்தையும் வரையறை செய்து கொண்டனர்.

**"மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்"**[2]

என்று சுட்டினார் தொல்காப்பியர்,

சிலப்பதிகாரம்,

**"முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து**
**நல்லியல்பு இழந்து நடுங்கு துயர் உறுத்துப்**
**பாலை என்பதோர் படிவம் கொள்ளும்"**[3]

என்று முல்லை நிலமும், குறிஞ்சி நிலமும் திரிவதால் பாலை என்ற நிலம் தோன்றியமையைச் சிலம்பின் வழியே காணமுடிகின்றது.

**மக்கள் பாகுபாடுகள்**

முல்லை நிலத்து வாழ்க்கையை வாழ்ந்த மக்கள் ஆயர், ஆய்ச்சியர் என்றும், குறிஞ்சி நில மக்கள் குறவர், குறத்தியர் என்றும், மருதநிலப் பகுதியில் வாழ்ந்த மக்கள் உழவர், உழத்தியர் என்றும், நெய்தல் நிலப்பகுதி மக்கள் பரதவர், பரத்தியர் எனவும் தாங்கள் வாழும் நிலப்பகுதியை ஒட்டித் தங்கள் பெயர்களை கொண்டனர். பாலை நிலப்பகுதியில் வழிப்பறி செய்வோரும், கள்வர்களும் வாழ்ந்தனர்.

### நோயற்ற வாழ்க்கை

இயற்கையோடு இன்பியல் வாழ்க்கையை வகுத்துக்கொண்ட மக்கள் நோய்க்கு இடம் கொடாத வாழ்க்கையை வாழ்ந்தனர்.

'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்பதனை உணர்ந்து நெறிமுறை பிறழாத அறத்தோடு கூடிய வாழ்க்கையை வாழ்ந்து காட்டினார்கள்.

நோய்க்கு இடம் கொடுக்காத நிலையில் வாழ்ந்தார்கள். மனநிம்மதியையும், நிறைவையும் தருவது நோயற்ற வாழ்க்கையே. நோயற்ற வாழ்க்கை வாழ வேண்டும் என்பதனை வள்ளலார் வேண்டுகோளாக இறைவனிடம் விண்ணப்பம் செய்தார். நோயில்லா வாழ்க்கை வாழ்ந்து நொறுங்கத் தின்று நூறாண்டு காலம் வாழ்ந்தனர்.

பதினாறு வகையான செல்வங்களில் ஒன்று நோயற்ற வாழ்க்கையாகும். உடம்பை நன்முறையில் வளர்க்கும் முறைமையைக் கற்றிருந்தார்கள்.

### உணவு முறைகள்

நம் முன்னோர்கள் உணவே மருந்து, மருந்தே உணவு என்ற முறையில் வாழ்ந்தார்கள். தாங்கள் வாழும் பகுதியில் இயற்கையாகக் கிடைத்த காய், கனிகள், கிழங்குகள் போன்றவற்றை உண்டு வாழ்ந்தார்கள்.

தங்கள் உடலுக்கு ஒவ்வாமை ஏற்படுத்தும் உணவுகளைத் தவிர்த்து உடலுக்கு நன்மை பயக்கும் உணவையே உண்டனர். தாவரங்கள், மரங்கள் போன்றவற்றின் இயற்கை குணங்களை அறிந்திருந்தனர். வேளைக்கீரையும்

சிறந்த உணவுப் பொருளாக விளங்கியமையை அகநானூறு போன்ற சங்க இலக்கியமும் இதனை உணர்த்துகின்றது.

கண்டங்கத்தரி, சிறு வழுதுணை, சிறுமல்லி, பெருமல்லி, நெருஞ்சி ஆகிய ஐந்து வேர்களுடன் கூடிய கலவை நோய் தீர்ப்பது போல சிறுபஞ்ச மூலமும் ஐந்து நீதிகளை விளக்குகின்றது என்று உரை, தெளிவு கண்டனர்.

அதனைப் போன்று உடல் நோயைத் தீர்க்கும் சுக்கு, மிளகு, திப்பிலி போன்றவற்றையும் அதன் பயன்பாடுகளையும் கண்டறிந்திருந்தனர். ஏலம், இலவங்கம், தக்கோலம், திப்பிலி, சுக்கு போன்றவற்றின் மருத்துவ குணங்களையும் அவை நோய் நீக்கும் தன்மைகளையும் பெற்றமையால் அவற்றின் சிறப்பை உணர்த்தவே சிறுபஞ்சமூலம், திரிகடுகம், ஏலாதி என்ற பெயர்களும் சங்கம் மருவிய காலத்து நூல்களுக்கு வழங்கிய பெயர்களாகவும் கொள்ள முடியும்.

**மணம் மிகு பொருட்கள்**

அகில், அகிற்புகை, சந்தனம், கற்பூரம், வசம்பு, வில்வம் போன்ற மணம் தரும் பொருட்களையும் பயன்படுத்தும் திறன் பெற்றிருந்தனர்.

நறுமணத் தைலங்களை நீராடிய பின்னர் தங்கள் கூந்தலுக்கு மகளிர் அகில் புகை இட்டனர்.

> **''நாறுஇருங் கூந்தல் நலம்பெற ஆட்டி ;**
> **புகையின் புலர்த்திய பூமென் கூந்தலை''**[4]

என்கிறார் இளங்கோ அடிகள். மாதவி தன் கூந்தலுக்கு அகிற்புகை யூட்டியமை இதன் மூலம் புலனாகிறது.

மகளிர் தம் கூந்தலுக்கு அகிற்புகையூட்டியமையை,

**“முகில்தோய் மாடத்து அகில்தரு விறகின்**
**மடவரல் மகளிர் தடவுநெருப்பு அமர்ந்து**
**நறுஞ்சாந்து அகலத்து நம்பியர் தம்மொடு**
**குறுங்கண் அடைக்கும் கூதிர்க் காலை”**[5]

என்பதன் மூலம் குளிர்காலத்து குளிரிலிருந்து விடுபடுவதற்கு நெருப்பை உண்டாக்கினர் என்ற செய்தியை உணர முடிகிறது.

மகளிர் தம் கூந்தலுக்கு மயிர்ச் சந்தனம் மணக்கப் பூசினர்.

**‘‘தண்நறுந் தகரம் கமழ மண்ணி**
**ஈரம் புலர விரல் உளர்ப்பு அவிழாக்**
**காழ் அகில் அம்புகை கொளீஇ’’**[6]

இதை குறிஞ்சிப்பாட்டினால் அறிய முடிகின்றது.

**மணப்பொருட்கள் :**

**1. சந்தனம்**

பழந்தமிழ் மக்கள் சந்தனத்தின் சிறப்பையும், பயன்பாட்டையும் அறிந்திருந்தார்கள். சந்தனத்தை மணம் வீசும் பொருளாகவும், மருந்துப் பொருளாகவும் கொண்டார்கள். சந்தனக் கட்டைகளை வடநாட்டிலிருந்து கொண்டு வந்து சந்தனக்கல்லில் தேய்த்து அரைத்து மணம் தரும் பொருளாகப் பயன்படுத்தினார்கள். இதனை,

**‘‘வடவர் தந்த வான் கேழ் வட்டம்**
**தென்புல மருங்கில் சாந்தொடு துறப்ப’’**[7]

என்றுரைக்கின்றது நெடுநல்வாடை.

**2. கற்பூரம்**

கோயில் வழிபாடுகளில் பயன்பாட்டில் இன்றளவும் வழக்கில் உள்ள பொருள் கற்பூரம். இது நன்னன் நாட்டில் மிகுதியாக வளர்ந்திருந்தது.

**''பரூஉப் பளிங்கு உதிர்ந்த பல உறுதிருமணி''**[8]

என்று இதனை மலைபடுகடாம் குறிப்பிடுகின்றது.

**3. வசம்பு**

நாட்டு மருந்துகளில் சிறப்பிடம் பெறுவது வசம்பு ஆகும். நீர்நிலையுள்ள இடங்களில் குறுகிய செடி வகைகளுள் ஒன்றாக வளரக் கூடியது வசம்பு. நாட்டு மக்களின் இயற்கையான மருந்துப் பொருள்களில் வசம்பும் ஒன்றாகும். வசம்புடன் மயிலிறகு கொளுத்திய சாம்பலோடு முலைப்பாலையும் சேர்ந்து அதனுடன் அளவாக கிராம்பு, சீரகம் சேர்த்து உருவாகும் கலவையான மருந்து வயிற்று நோய்க்குச் சிறந்த மருந்து எனக் கண்டு பயன்படுத்தியுள்ளமையை சித்தமருத்துவம் சார்ந்த நூல்களும் எடுத்துரைக்கின்றன என்கின்றனர் இயற்கை சார்ந்த மருத்துவ வல்லுனர்கள்.

**4. முருங்கை**

தமிழர்கள் தங்கள் நிலப் பகுதிகளில் முருங்கை மரங்களை வளர்த்தனர். முருங்கையின் இலைகள் உணவுப் பொருளாகவும், நோய் நீக்கும் மருத்துவகுணம் கொண்டிருந்தது என்பதனை சிறுபாணாற்றுப்படை ஆசிரியர்,

**''சிதர் நணை முருக்கின் சேண் ஓங்கு நெடுஞ்சினைத்**
**ததர்பிணி அவிழ்ந்த தோற்றம் போல''**[9]

என்று குறிப்பிடுகின்றார்.

## 5. வேம்பு

### வேம்பின் தனித்தன்மை

இதன் இலைகளும், பட்டைகளும் நோய் நீக்குவன. பாண்டிய மன்னனின் அடையாளப் பூவாகவும் சங்கத் தமிழர்கள் வேம்பினைச் சூடினர்.

**''இரும்பனம் போந்தைத் தோடும், கருஞ்சினை**
**அரவாய் வேம்பின் அம்குழைத் தெரியலும்''**[10]

என்றும்,

**''வேம்பு தலை யாத்த நோன்காழ் எஃக மொடு''**[11]

என்ற குறிப்பு வேம்பு பற்றிய செய்திகளைத் தெரிவிக்கின்றன.

## 6. வெற்றிலைக்கொடி

மருந்துப் பொருளாகவும், உணவு வகைகள் செரிப்பதற்கும் வெற்றிலைக் கொடியை நட்டு வளர்த்தனர்.

மருத்துவ குணம் நிறைந்த வெற்றிலைக் கொடியை மக்கள் பயிர் செய்தனர்.

**''பலர் தொகுபு இடித்த தாது உகு சுண்ணத்தர்**
**தகை செய் தீம் சேற்று இன்நீர்ப் பசுங்காய்**
**நீடுகொடி இலையினர், கோடுசுடு நூற்றினர்''**[12]

என்கிறது மதுரைக்காஞ்சி.

வெற்றிலைக் கொடியில் உள்ள வெற்றிலையை மங்கலப் பொருளாகவும் பயன்படுத்தினர் என்பதை

**''வைகாண் முது பகட்டின் பக்கத்தின் போகாது**
**தையால் ! தம்பலம் தின்றியோ ? என்று, தன்**
**'பக்கு அழித்து, கொண்ட' எனத் தரலும்''**[13]

என்பதிலிருந்து அறியமுடிகிறது.

இயற்கையின் மீது ஈடுபாடு கொண்ட தமிழர்கள் தங்கள் பகுதியில் கிடைத்த தேன், இஞ்சி, மிளகு, இலவங்கம் போன்றவற்றின் சிறப்பை அறிந்து பயன்படுத்தும் திறம் பெற்றிருந்தனர்.

## 7. தேன்

ஐவகையான நிலப்பகுதிகளில் கிடைக்கும் தேன் அவற்றின் சிறப்புகள் நோய் நீக்கும் தன்மைகளை அறிந்திருந்தார்கள்.

> **''குறிஞ்சி வருநிலத்திற் கொற்றமுண்டி ரத்தம்**
> **உறிஞ்சி வருசுரமு முண்டாம் – அறிஞருரைக்**
> **கையகமே தங்குதரத் தாமை வல்லையுங் கதிக்கும்**
> **ஐயமே தங்குமற''**[14]

என்பதனால் அறிய முடிகின்றது.

## 8. சுக்கு

சுக்கு, இஞ்சி இரண்டும் ஒன்றே. காய்ந்த நிலையில் வழங்கப்படும் பெயர் சுக்கு. இஞ்சியின் அனைத்துப் பகுதிகளும் மருந்துக் குணம் கொண்டது. வெற்றிலையுடன் இஞ்சிச்சாறு, தேன் கலந்து குடித்தால் பல நோய்கள் நீங்கும் என்பதை சங்ககால மக்கள் நன்கு அறிந்திருந்தனர். இதனையே

> **''இஞ்சி மஞ்சள், பைங்கறி, பிறவும்**
> **பல்வேறு தாரமொடு, கல்லகத்து ஈண்டி''**[15]

என்கிறது மதுரைக் காஞ்சி.

## 8. மிளகு

மணப்பொருளாகவும், மருந்துப் பொருளாகவும் பயன்படுவது மிளகு ஆகும். இதனை,

> **"நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்**
> **காலின் வந்த கருங் கறி மூடையும்,"[16]**

என்று பட்டினப்பாலை குறிப்பும் கறி என்ற சொல்லால் மிளகினைச் சுட்டுகிறது.

### வளமான வாழ்க்கை

ஒவ்வொரு மனிதனின் குறிக்கோளும் நல்ல ஆயுளுடன் நீண்ட காலம் வாழ்வதாகும். உலகில் நீண்ட காலம் வாழ்வதற்கு உணவு அடிப்படையாகிறது. மக்களின் தேவையான ஊன், உடை, உறையுள் மூன்றினுள் உணவே முதலிடம் பெறுகின்றது. மனிதனின் தேடலே உணவாக அமைந்தது.

அதனாலேயே,

> **"உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே**
> **உண்டி முதற்றே உணவின் பிண்டம்"[17]**

என்கிறது புறநானூறு.

### நறுமலர்கள்

கூந்தலையே நறுமணம் மிக்க பொருட்களால் அழகு செய்ததுபோல் பல்வேறு மலர்களையும் மாலையாக்கித் தம் குழலில் மகளிர் சூடினர். இன்ப

காலங்களில் சூடவும், துன்ப நேரங்களில் சூடாமலும் விளங்கியமைக்குச் சங்கப் பாடல்கள் சான்றாக அமைகின்றன.

> **“இளையோர் சூடார், வளையோர் கொய்யார் ;**
> **நல் யாழ் மருப்பின் மெல்ல வாங்கி,**
> **பாணன் சூடான், பாடினி அணியாள் ;**
> **ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த**
> **வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை**
> **முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே !”**[18]

என்பதனால் அறிய முடிகின்றது. மகிழ்வில் பூச்சூடுதலையும், துன்பத்தில் பூக்களைப் சூடுவதனையும் கூட மறக்கும் திறம் பெற்றிருந்தார்கள்.

## செம்மார்ந்த வாழ்க்கை

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட கால மக்கள் மனநிறைவு கொண்ட வாழ்க்கையை அமைத்துக் கொண்டார்கள். குடிமக்கள் மன்னனை இறையெனப் போற்றினர். மன்னரும் தன் குடிமக்களை உயிரெனப் போற்றிக் காக்க முற்பட்டார்கள். மக்கள் காடுகளிலும், மலைகளிலும் கிடைத்த காயையும், கனியையும் மிகுதியாக உண்டனர்.

தானியங்களையும் கிழங்கு வகைகளையும் ஆடு, பன்றி, மான், உடும்பு, கோழி, மீன் போன்ற இறைச்சி வகைகளையும், பால், தயிர் போன்றவற்றையும் உண்டு மகிழ்ந்தனர்.

## வகுப்புப் பிரிவுகள்

அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற பகுப்புடன் பொருநர், பாணர், கூத்தர் போன்றோரும் இருந்தனர். செல்வர்களை நாடிச் சென்று

வறியவர்களும், பொருநர், பாணர் போன்றோரும் பரிசுகளைப் பெற்று வந்தனர். மக்களிடையே உயர்வு, தாழ்வோ வகுப்புச் சண்டைகளோ தலைகாட்டவில்லை. பெரும் பகுதியும் மக்கள் தாங்கள் செய்யும் தொழில்களின் அடிப்படையிலேயே வாழ்க்கையை அமைத்துக் கொண்டனர்.

**வணிகம்**

மக்கள் பண்டமாற்று முறையில் தங்களிடம் மிகுதியாக விளைந்த பொருட்களை பிற இடங்களுக்குக் கொண்டு சென்று விற்று, தங்களுக்குத் தேவையான உணவு வகைகளைப் பெற்றனர்.

உள்நாட்டு வணிக நிலையோடு தமிழகம் சுற்றியுள்ள அண்டை நாடுகளுடனும் வியாபாரத் தொடர்பு கொண்டனர். அறநெறி சார்ந்த வணிக நெறியைக் கடைபிடித்தார்கள்.

> **''கொள்வதூஉம் மிகைகொளாது, கொடுப்பதூஉம்**
> **குறைகொடாது''**[19]

வணிகம் செய்தனர்.

**பண்டமாற்று முறை**

தொடக்க கால அளவில் வணிகம் பண்டமாற்று முறையிலேயே அமைந்திருந்தது. நெய்தல் நிலத்தின் உப்பு மருத நிலத்திற்கு விற்பனைக்கு வந்தது. மருத நிலங்களில் விளைந்த நெல்லானது நெய்தல் நில மக்களுக்குப் பயன்பட்டது.

திரைகடல் ஓடியும் திரவியம் தேடும் முயற்சியில் தொய்வுபடாமல் மக்கள் வாழ்க்கை நடத்தினர். உழைத்து உழைத்து வாழ்க்கையில் பொருள் சேர்ப்பதிலேயே மக்கள் இன்பம் மிகக் கொண்டனர். பல நாடுகளோடும் வணிகத் தொடர்பு கொண்டிருந்தனர். கிரிஸ், ரோம், எகிப்து, சீனம், பாலஸ்தீனம், மெசபடோமியா, பாபிலோனியா போன்ற நாடுகளுடன் பண்டைய தமிழர்கள் வணிகத் தொடர்புகள் கொண்டிருந்தனர்.

**வியாபாரத் தொடர்பு**

தமிழகத்தின் விளைபொருட்கள் ஏலம், இலவங்கம், இஞ்சி, மிளகு ஆகியவற்றின் மீது மக்கள் கவனம் கொண்டிருந்தனர்.[20] மிகுதியான பொருட்களை பிறநாடுகளுக்குக் கொண்டு சென்று விற்று வருவாயைப் பெருக்கிக் கொண்டனர்.

பண்டைத் தமிழகத்திலிருந்து ஏற்றுமதியான பண்டங்களுள் மஸ்லின் துணியும், ஏலம், இலவங்கம் போன்றவைகளும் முக்கியமானவைகளாகும்.[21]

தமிழகத்தைச் சார்ந்த வணிகர்கள் இச்சரக்குகளை ஏற்றிச் சென்று ஏடன் வளைகுடாவிற்கு இருபுறமும் உள்ள துறைமுகங்களில் இறங்கினர். பினீஷியர் அல்லது அராபியர்கள் அச்சரக்குகளை அவ்விடத்திலிருந்து எகிப்திற்குக் கொண்டு சென்றனர்.[22]

பண்டைக்காலம் தொட்டே மேலைநாடுகளுடன் தமிழக மக்கள் விரிவான கடல் வியாபாரத்தில் ஈடுபட்டிருந்தனர். அயல்நாடுகளுடன் கி.மு.ஏழாம் நூற்றாண்டு தொடக்கத்திலிருந்தே தொடர்ந்து வணிகம் நடைபெற்றுள்ளது.[23]

கிரேக்கர்கள் தமிழகத்துடன் வணிகத்தில் இறங்கிய காலம் கி.மு. ஐந்தாம் நூற்றாண்டாகும்.[24] இவ்வணிகத்தின் மூலம் தமிழ்ச் சொற்கள் பல கிரேக்க மொழியில் நுழைந்து இடம் பெற்றன என்பதை செபோகிரீஸ், அரிஸ்டோபேனிஸ் போன்ற அறிஞர்களின் நூல்களில் இவற்றைக் காணலாம்.[25]

அரிசி என்னும் சொல் கிரேக்க மொழியில் அரிசா என உருக்குலைந்தது. அம்மொழியில் காணப்படும் கருவம் (இலவங்கம்) என்ற சொல் கார்ப்பியன் என்றாகியது.[26]

முதன்முதலில் தமிழர்களின் வணிகத் தொடர்புகள் நெய்தல் நிலத்தில் தொடங்கியது[27] என்றும் குறிப்புகள் காணப்படுகின்றன. தமிழர்கள் மேலைநாடுகளுடன் கொண்டிருந்த வணிகத் தொடர்பைப் பற்றிச் சங்க இலக்கியங்கள் விரிவாகவே எடுத்தியம்புகின்றன. தமிழர்கள் அந்நாடுகளிலிருந்து தேயிலையையும், பொன்னையும் இறக்குமதி செய்தனர். யவனர்கள் தமிழக மன்னர்களின் அரண்மனைப் பகுதிகளில் காவற் பணியையும் மேற்கொண்டு உள்ளார்கள். இதனை,

> **''யவனர் நன் கலம் தந்த தண் கமழ் தேறல்**
> **பொன் செய் புனை கலத்து ஏந்தி நாளும்**
> **ஒண் தொடி மகளிர் மடுப்ப''**[28]

என்னும் குறிப்பினால் உணரலாம். யவனர்கள் குப்பிகளில் கொணர்ந்து தந்த மணம் கமழும் மதுவினைப் பொன் வளையல்கள் அணிந்த இளம்பெண்கள் பூ வேலை செய்யப் பெற்ற பொற்கிண்ணங்களில் ஊட்டுவித்தனர் என்று புறநானூறு குறிப்பிடுகின்றது.

தமிழகத்துப் பண்டங்கள் கி.மு. ஏழாம் நூற்றாண்டளவிலேயே சீனத்தில் இறக்குமதியாயின என்று அந்நாட்டு வரலாறு குறிக்கின்றது. சீனத்துப் பட்டாடைகளையும், சரக்குகளையும் தமிழகம் ஏற்றுக் கொண்டது. அதனால்தான் இன்றளவும் ஆடையானது சீனத்துப்பட்டாடை என்றும், சர்க்கரைக்குச் சீனிச் சர்க்கரை என்ற சொல்லும் வழக்கில் தோன்றின.

**கப்பல் பயணம்**

பழந்தமிழர்கள் தொலை தூர நாடுகளுக்குக் கப்பலில் பயணம் மேற்கொண்டனர். அக்கப்பல்கள் இரவென்றும், பகலென்றும் பொருட்படுத்தாமல் மாலுமிகளால் காற்று செல்லும் திசையில் இயக்கப்பட்டன. காற்றின் போக்கிற்கேற்பத் திட்டமிட்டுப் பயணம் மேற்கொண்டமையை சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றது.

புகழ்பெற்ற துறைமுகங்களாக புகார், கொற்கை, முசிறி, தொண்டி ஆகியவை விளங்கியமையால் கடல் வணிகத்தில் தமிழர்கள் தேர்ச்சி பெற்றமையையும் காண முடிகின்றது.

**புலிச்சின்னம்**

சங்ககாலத்தே சிறப்புற்று விளங்கிய துறைமுகங்களிலிருந்து கடல் வழியே வந்த பண்டங்களோடு, பிற நாடுகளுக்கும் அனுப்புவதற்கு வந்திருக்கும் பண்டங்களும் சேர்ந்து மலையெனக் குவிந்து கிடந்தன. கட்டுக்காவல் மிகுந்த சுங்கச் சாவடிகளில் அப்பண்டங்கள் மீது புலிச்சின்னங்களும் பொறிக்கப்பட்டிருந்தன.

**"நீரினின்றும் நிலத்து ஏற்றவும்**
**நிலத்தினின்று நீர்ப் பரப்பவும்**
**அளந்து அறியாப் பல பண்டம்**
**வரம்பு அறியாமை வந்து ஈண்டி**
**அருங் கடிப் பெருங்காப்பின்**
**வலியுடைய வல் அணங்கின் நோன்**
**புலிப் பொறித்து புறம் போக்கி**
**மதிநிறைந்த மலிபண்டம்**
**பொறி மூடைப் போர் ஏறி,**
**மழை ஆடு சிமைய மால்வரைக் கவாஅன்**
**வரை ஆடு வருடைத் தோற்றம் போல**
**கூர்உகிர் ஞமலிக் கொடுத்தாள் ஏற்றை**
**ஏழகதகரோடு உகளும் முன்றில்"**[29]

என்று பட்டினப்பாலையும் குறிப்பிடும் செய்தி தமிழக வரலாற்றில் முக்கியத்துவம் பெறுவனவாகும்.

பிற நாடுகளிலிருந்து கடல் மார்க்கமாக குதிரைகளும், நிலத்தின் வழியாக வண்டிகள் மூலம் கொண்டு வரப்பட்ட மிளகு மூட்டைகளும், இமயமலையிலிருந்து கொண்டு வரப்பட்ட மாணிக்கக் கற்களும், குடகு மலையிலிருந்து கொண்டு வரப்பட்ட சந்தனம், அகில் போன்றவைகளும், தென்திசையில் பிறந்த முத்துக்களும், கீழ்த்திசைக் கடலிற் பிறந்த பல வளங்களும் கங்கையாறு பாயும் பகுதிகளில் விளையும் பொருள்களும் ஈழத்திலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட பொருட்களும் குவிக்கப்பட்டிருந்தன.

**"நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்**
**காலின் வந்த கருங் கறி மூடையும்,**
**வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்**
**குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்,**
**தெண்கடல் முத்தும், குணகடல் துகிரும்**
**கங்கை வாரியும், காவிரிப் பயனும்,**
**ஈழத்து உணவும், காழகத்து ஆக்கமும்,**
**அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி**
**வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகின்"**[30]

என்ற இத்தகு வளமான கடற்கரைப் பகுதியைக் கொண்ட காவிரிப்பூம்பட்டிணத்தில் கடற்கரையில் ஏற்றுமதியும் இறக்குமதியும் மிகச் சிறப்பாக நடைபெற்றதை பட்டினப் பாலை வழியே வெளிப்படுத்தியுரைக்கின்றார்.[31]

சங்ககால மக்கள் வணிகத்தில் சிறந்த தேர்ச்சியினைப் பெற்றிருந்தார்கள். கடற்கரையோரங்கள் துறைமுகங்களாக விளங்கின. அத்துறைமுகங்களில் வணிகக் கப்பல்கள் மூலம் ஏற்றுமதி, இறக்குமதி செய்தமையால் துறைமுகப் பட்டினங்களில் வணிகமும் செல்வமும் பெருகின. அதனால் நாகரிகமும் பொருட்செல்வமும் பெற்றுச் சிறந்து விளங்கின.

**பண்டமாற்று முறை**

பழங்காலத்து மக்கள் சிறிய பொருளாக இருந்தாலும், பெரிய அளவுள்ள பொருளாக இருந்தாலும் அவற்றைப் பண்டமாற்று முறையிலேயே பெற்றார்கள்.

அன்றாடத் தேவையான அரிசி, பருப்பு, உப்பு, பால், த

இறைச்சி முதலான பொருள்களைக் காசு கொடுத்துப் பெற்றுக் கொள்ளாமல்

பண்டமாற்று முறையிலேயே ஒரு பொருளைக் கொடுத்து அதற்கு ஈடாக மற்ற பொருள்களை வாங்கிக் கொண்டார்கள்.

தேன், கிழங்கு, மான் தசை போன்றவற்றை பிற பகுதி மக்களுக்குக் கொடுத்து, தங்கள் வாழ்க்கைக்குத் தேவையான அரிசி, கரும்பு, நெல் போன்ற பிற நிலத்துப் பண்டங்களைப் பெற்றுக் கொண்டனர்.[32]

**மன்னனும் மக்களும்**

தமிழர்களின் வாழ்க்கை முறைகளை விளக்குவதில் சங்க இலக்கியங்கள் முதன்மையாக விளங்குகின்றன. சங்கப்பாக்களின் துணையின்றிப் பண்டைத் தமிழர்களின் பண்பாட்டையும் நாகரிக வளர்ச்சியையும் அறிந்து கொள்வது இயலாததாகும்.

**''நெல்லும் உயிர் அன்றே ; நீரும் உயிர் அன்றே ;**
**மன்னன் உயிர்த்தே மலர் தலை உலகம்''**[33]

என்பதால் மன்னனேயே நாட்டு மக்கள் உயிரெனப் போற்றினர் என்பதை அறியலாம். தமது நாட்டின் வளம் பெருக்கி குடிதழுவிக் கோலோச்சினர். தமிழையும் தமிழ்ப்புலவர்களையும் போற்றிச் சிறப்புச் செய்வதனையே தலையான கடமையாகக் கொண்டார்கள். புலவர்கள் தாங்கள் போற்றப்படுதலையே சிறப்பு எனக் கொண்டனர்.

மாங்குடி மருதனைத் தலைவனாகக் கொண்ட எம் புலவர்குழு தன்னைப் பாடுவதனையே பெருமகிழ்வாகக் கொண்டான். பாண்டிய

மன்னன் நெடுஞ்செழியன். புலமைக்குத் தன் தலையையே பரிசாகத் தர முன் வந்தான் குமண வள்ளல், ‘குன்றர்’ என்ற மலை மீது ஏறி கண்ணுக்கெட்டிய தூரம் வரை பரிசாக வழங்கியவன் மற்றொரு வள்ளல் பெருமகன்.

தமிழ் மன்னர்களில் கடையேழு வள்ளல்களில் ஒருவன் அதியமான் நெடுமானஞ்சி. இறவாமையைத் தரும் நெல்லிக்கனியை அரிதின் முயன்று பெற்று அதனைத் தான் உண்டு நீண்டநாள் வாழ்தல் வேண்டும் என்று கருதாது ஔவைக்குத் தந்து, ஔவையார் நீண்டநாள் வாழ்ந்தால், தமிழ்ப்பாக்களை இயற்றுவார் என்றெண்ணிப் புலமையைப் போற்றிய திறமும் குறிப்பிடத் தக்க ஒன்றாகும்.

**பல்திற அறிவு**

தமிழகத்தின் கட்டிடக் கலைக்குச் சான்றாவன பண்டைய தமிழகக் கோயில்களும், அரண்மனைகளும் துறைமுகங்கள் போன்றவை காலத்தின் வேகத்தாலும், இயற்கையின் சீற்றத்தின் மாறுபாடுகளாலும் அழிந்தாலும் கோயில்கள் என்றும் கலை நயத்துடன் விளங்கிப் பண்டைத் தமிழர்கள் நுண்கலைகள் மீது கொண்ட ஆர்வத்தை விளக்கும் சான்றாகும்.

**காலப்பாகுபாடுகள்**

பண்டைத் தமிழ் மன்னர்கள் நிலத்தை அளந்தபோது காலத்தையும் பாகுபாடு செய்யும் பழக்கத்தை வழக்கமாகக் கொண்டிருந்தார்கள்.

காலத்தைப் பெரும் பொழுது, சிறுபொழுது என்றும் பகுத்தனர். கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்று ஓர் ஆண்டினை ஆறுவகைப் பெரும்பொழுதாக்கினர்.

சிறுபொழுது என ஒருநாளை வைகறை, காலை, நண்பகல், எற்பாடு, மாலை, யாமம் என்றும் பகுத்துக் கொண்டனர். பெரும்பொழுதை ஆண்டு, திங்கள், கிழமை, நாள், நாழிகை, நொடி எனவும் பாகுபடுத்தினர்.[34]

நிலத்தினைச் சார்ந்து உருவாகும் பொருட்கள் கருப்பொருள்கள் எனப்பட்டன. இக்கருப்பொருட்களின் வகை தெய்வம், உணவு, மரம், புல், யாழ், பண் எனும் பதினான்காகும்.[35] ஐவகை நிலத்தில் வாழும் மக்களின் வாழ்க்கையின் செய்திகளைப் புலப்படுத்துவது உரிப்பொருளாகும்.

உலகமொழிகள் அனைத்தும் எழுத்துக்கும், சொல்லுக்கும் பொருள் தருகின்றன. தமிழ் மொழியின் இலக்கணமான பழந்தமிழ் இலக்கண நூல் தொல்காப்பியம் பொருள் என்னும் இலக்கணத்தின் வழியே வாழ்க்கைக்கும் இலக்கணம் கூறுகின்றது.

சங்ககால மக்கள் தங்கள் வாழ்க்கையை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்று பாகுபடுத்தி அகம், புறமென பிரித்துக் கொண்டனர்.

தமிழர்கள் இல்லற வாழ்க்கையையே பெரிதும் விரும்பினர். ஒருவனும் ஒருத்தியும் வாழும் வாழ்க்கை ஒன்றினால் மட்டுமே வீடுபேறு அடையமுடியும் என நம்பினர்.

## குடும்ப அமைப்பு

சமூகத்தில் ஓர் அங்கமாக இயங்கும் ஒரு அமைப்புதான் குடும்பமாகும். குடும்பத்திற்கு அன்பே அடிப்படையாக அமைகின்றது. அன்பின் தொடர்ச்சியால் குடும்பம் உருவாகின்றது. சமூகத்தின் வளர்ச்சி நிலைகளுடன் குடும்பமும் வளர்கின்றது.

மக்களின் இல்லற வாழ்வு களவு, கற்பு, திருமணம் போன்ற செயல்களின் மூலம அமைகின்றது.

1. காம நுகர்ச்சி காரணமாக போதுமென்ற எண்ணம் தோன்றல்
2. குழந்தைப் பேறு
3. சுற்றத்தாருடன் அறநெறிகளைப் போற்றல்
4. மற்றவர்க்குச் சான்றாதல் போன்ற சிறப்பான நெறிகளைப் பின்பற்றுதல்

இவற்றில் விருந்தோம்பல், ஈகை, ஒப்புரவறிதல் போன்ற செயல்கள் சமூக உறவு வலுப்படக் காரணமாக அமைகின்றன. இவ்வுறவுகளை வலுப்படுத்துவதில் குடும்ப அமைப்புப் பெரிதும் துணை செய்கின்றது.

தலைவி தான் பிறந்த மனையில் கிடைக்கும் தேன் கலந்த பாலினும் கிடைத்த சுவையைவிடத் தலைவனுடன் பாலை நிலத்தில் கிடைக்கும் மான் உண்டு எஞ்சிய சிறிய அளவு நீரையும் தனக்குச் சுவையுடையதாகக் கருதுவாள். இந்நிகழ்ச்சியை ஐங்குறு நூறும் குறிப்பிடுகின்றது. இவ்வாறாகக் கற்புடை மங்கை பிறர் புகழும் வகையிற் மனையறம் பேணி மகிழ்கின்றாள்.

பண்டைக்காலத் தமிழ் மக்கள் இல்லற வாழ்க்கையே இனிமையான வாழ்க்கை என்று வாழ்ந்து காட்டினார்கள். சங்க இலக்கியத்தில் தலைவன், தலைவி இணைந்து வாழும் இன்பங்கள் பற்றிப் பல பாடல்கள் சான்றாக அமைகின்றன.

**கைம்மை**

சங்ககாலத்தே கணவனை இழந்த பெண்கள் உடன்கட்டை ஏறினர்.[36] கைம்மை நோன்பு நோற்கும் பெண்கள் நெய்யையும் உண்பதில்லை. தண்ணீர்ச் சோற்றையே உண்டனர் என்றும் புறநானூறு குறிப்பிடுகின்றது.

**உணவு வகைகள்**

பண்டைத் தமிழ் மக்கள் ஐவகை நிலப்பகுதிகளில் விளைந்த உணவு வகைகளோடு காய்கறிகளையும் சேர்த்து உண்டனர். பலாப்பழம், இளநீர், வாழைப்பழம், நுங்கு, வள்ளிக்கிழங்கு, சுட்டபனங்கிழங்கு ஆகிய இயற்கை உணவுகளையும் உண்டனர். பழந்தமிழர்கள் ஊறுகாயைப் பற்றி அறிந்திருந்தார்கள். புளியங்காய், நெல்லிக்காய் ஆகியவற்றை ஊறவைத்து அதனைப் பதப்படுத்தி உண்ணக் கற்றிருந்தனர்.[37]

பண்டையத் தமிழ் மக்கள் இறைச்சி உணவையும் விரும்பி உண்டனர். ஊன் உணவை உண்ணும் வழக்கம் பலதரப்பட்ட மக்களிடமும் இருந்தது என்று புறநானூறு குறிப்பிடுகின்றது.[38]

**கள்ளுண்டு மகிழ்தல்**

மன்னர், பாணர், கூத்தர், பொருநர், விறலியர் இன்ப மகிழ்வாகக் கள்ளை உண்டு மகிழ்ந்தனர்.

இதனை, ‘சிறிய கட் பெறினே எமக்கீயு மன்னே’ என்ற புறப்பாடலால் அறியமுடிகின்றது.

**தொழில் அடிப்படை**

குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்கள் வேட்டையாடுதலை தம் தொழிலாகக் கொண்டார்கள். முல்லை நிலமக்கள் ஆநிரைகளை மேய்த்தலைத் தொழிலாகக் கொண்டனர். நெய்தல் நிலமக்கள் மீன்பிடித்தல், உப்புத் தயாரித்தல் போன்றவற்றில் ஈடுபாடு கொண்டார்கள். பாலை நிலத்து மக்கள் மற்றவர்களிடமிருந்து பொருட்களைக் கவர்தலை போன்றவற்றைத் தொழிலாகக் கொண்டனர்.

குறிஞ்சிநில மக்கள் தான் முதன்முதலில் பயிர்த்தொழிலில் ஈடுபட்டார்கள். காடுகளை அழித்துப் பயிரிடத் தொடங்கினர். மருத நில மக்கள் உழவுத் தொழிலினை மிக முக்கியமான தொழிலாகக் கொண்டிருந்தனர்.

உழவர்கள் உலகத்தார்க்கு அச்சாணி போன்றவர்கள். தாமும் உண்டு பிறரையும் உண்ணச் செய்தனர். உழவுத் தொழில் நாட்டில் நன்கு வளர்ச்சி அடைவதற்குத் தமிழக மன்னர்கள் ஆறுகளையும், குளங்களையும் தூர்வாரி அகலப்படுத்தி பாசனத்திற்கும், குடிநீருக்கும் வழிவகை செய்தார்கள்.

**கொடைநலன்**

பண்டைக் காலத்தமிழ் மன்னர்கள் புலவர்களைப் போற்றிக் காத்தனர்.

**‘‘ஒருநாள் செல்லலம் ; இருநாட் செல்லலம் ;**
**பல நாள் பயின்று, பலரொடு செல்லினும்**
**தலை நாள் போன்ற விருப்பினன் மாதோ**
**இழை அணி யானை இயல்தேர் அஞ்சி**
**அதியமான் ; பரிசில் பெறூஉம் காலம்’’**[39]

எத்தனை நாட்கள் எத்துணை பேரோடு சென்றாலும் முதல் நாள் முகம் மலர்ந்து பரிசில் வழங்கியது போன்ற சிறப்பை உடையவன் அதியமான் எனப் புறநானூறு சுட்டுகிறது.

**விருந்தோம்பல் சிறப்பு**

சங்ககாலத்து விருந்தோம்பல் பண்பு மிக்கிருந்தது. பறவைகள் நீரோட்டம் உள்ள இடங்களை எப்படித் தேடிச் சென்று தன் இரைகளைப் பெறுமோ அதனைப் போன்று இரவலர்கள் கரிகாலனையும், தொண்டைமான் இளந்திரையனையும், நல்லியக் கோடனையும் நாடிச் சென்றனர். புலவர்கள் அறுசுவை உணவுடன், பொருள்களையும் கொடையாக வழங்கினர்.

விருந்தினர்களைப் பேணிக் காத்து அவர்கள் செல்லும்போது ஏழடி தூரம் நடந்து சென்று கரிகாலன் வழியனுப்பியதை பொருநராற்றுப்படையும் சுட்டுகிறது. நன்னனின் அரண்மனையில் நெல்லரிசிச் சோறும் கொழுப்புடைய இறைச்சியும் கூத்தர்களுக்கு உணவாக வழங்கப்பட்டதை மலைபடுகடாமும் குறிப்பிடுகிறது.[40]

இளந்திரையன் தன்னை நாடிவந்த பாணரை நல்ல முறையில் வரவேற்றான். மடைத்தொழிலோன் செய்த இறைச்சியையும், சோற்றையும் சுவையான உணவுப்பொருள்களையும், வெள்ளியிலான உண்கலங்களில் இட்டு உண்ணச் செய்தமையைப் பெரும்பாணாற்றுப்படையும் குறிக்கின்றது.[41]

**ஆடை வகைகள்**

பழந்தமிழ் மக்கள் ஆடை வகைகளைத் தாங்கள் வாழும் நிலப்பதிக்குத் தக்கபடி அணிந்து மகிழ்ந்தார்கள். வணிகக் கலாச்சாரங்கள் பெருகிய நிலையில் அதற்கேற்ப உடைகளையும் அணிந்து கொண்டனர்.

மெல்லிய ஆடைகளையும் உற்பத்தி செய்து வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்தவர்கள் கொட்டைக்கரையுடைய ஆடையை உடுத்தி மகிழ்ந்தனர்.

**நாள்கோள் காணல்**

பறவை நிமித்தம் பார்த்தலும், விரிச்சி கேட்டலும், நல்ல நேரம் பார்த்து செயலைத் தொடங்குதலையும் வழக்கமாகக் கொண்டார்கள்.

**''நாள் அன்று போகி, புள் இடை தட்ப,**
**பதன் அன்று புக்கு, திறன் அன்று மொழியினும்''**[42]

என்கிறது புறநானூறு. நிமித்தம் பார்த்து செயல்பட்டமைக்குப் புறநானூற்றுப் பாடலே சான்றாகும்.

போர் மீது சென்ற தலைவன் எப்போது வீடு வருவான் என்று முதுபெண்டிர் கோயிலில் விரிச்சி (சகுனம்) கேட்டல் முல்லைப் பாட்டில்,

**''பெருமுது பெண்டிர், விரிச்சி நிற்ப''**[43]

என்பதனால் அறியக் கிடக்கின்றது.

மன்னர்கள் போருக்குச் செல்வதற்கு முன்னர் தன் வெண்கொற்றக் கொடையினையும், வாளினையும் நல்ல நாள் பார்த்து புறப்படச் செய்வர் என்பதை,

**"குடையும் வாளும் நாள் கோளன்றி**
**மடையமை ஏணிமிசை மயக்கமும் கடைசிச்**
**சுற்றமர் ஒழிய வென்று கைக் கொண்டு**
**முற்றிய முதிர்வும் அன்றி முற்றிய**
**அகத்தோன் வீழ்ந்த நொச்சியும்"**[44]

என்று தொல்காப்பியர் புறத்திணை நூற்பா மூலம் எடுத்துரைக்கிறார்.

**விழாக்களும் சடங்குகளும்**

தங்கள் நிலத்திற்கேற்ற தெய்வங்களை மக்கள் வழிபட்டார்கள். மழைவளம் பெருகவும், வாழ்க்கைச் சிறக்கவும் சடங்குகளையும் விழாக்களையும் செய்தனர். இம்மையில் தாம் செய்யும் பூசைகளால் மறுமையில் தெய்வ பலனைப் பெறுவதற்குச் சடங்குகளைச் செய்தனர்.[45]

பண்டைத்தமிழ் மக்கள் பெருந்தெய்வங்களையும், சிறு தெய்வங்களையும் வழிபட்டனர். மலைமுதல் கடல் வரையிலும் காணும் பல பொருள்களிலும் தெய்வக் காட்சியைக் கண்டனர். அதனால் பெருந்தெய்வங்களுக்கும் சிறு தெய்வங்களுக்கும் கோயில்கள் எடுத்து வழிபட்டனர்.

கோயிலில் அமைந்த தெய்வங்கள் அவரவர் மனப்போக்கிற்குத் தக்கவாறு அமைந்திருந்தன. கடவுளின் வடிவும் இத்தன்மையது என்று சொல்ல முடியாத அளவிற்குப் பல வடிவங்களில் இறைவன் உருவினை வைத்து வழிபாடுகள் செய்தனர்.

மக்கள் தாங்கள் செய்துவரும் வழிபாடு, விழா முதலியவற்றை முந்தையோர் முறைப்படி செய்து வந்தார்கள். இவ்வாறு பரம்பரையாகச்

செய்யப்படுவதே சடங்குகளாகும். இவை நூல் முறையாலும் மரபாலும் வருவனவாகும். முதியோர் வழிகாட்ட ஏனையோர்க்கு இவை பின்பற்றப்படும் பொருளாயின.

வழிபாடும், சடங்குகளும் மக்கள் பயன்பாடு கருதியே செய்தனர். குழந்தைகளும் தெய்வ நம்பிக்கைப் பெற வேண்டி அவர்களையும் இறைவழிபாட்டில் ஆழ்த்தினர்.

குழந்தைகள் பிறந்தநாளைக் கொண்டாடி மகிழ்ந்தனர். ஒருவன் பிறக்கின்ற வேளைக்குத் தக்கவாறு அவனது உருவம், குணம் அமையும் என்றும் நம்பிக்கை கொண்டனர். குழந்தையைச் சான்றோனாக்க கல்வியே உதவும் எனக் கண்டனர்.

மகளிர் நோன்பு நோற்று கற்புக் கடம்பூண்டு இல்லற நெறியில் கணவன் பெரியோர் கூறிய நெறியில் வாழ்ந்தனர்.

**கலை வளர்ச்சி**

மக்கள் தங்கள் வாழ்க்கைச் சூழலில் சிறந்த கலைகளையும் கற்றுத் தேர்ந்தவர்களாய் விளங்கினர். இசை, கூத்து, நாடகம், குரவைக் கூத்து போன்ற துறைகளில் வல்லவர்களாய் விளங்கினர். கல்வியிலும் கலைகளிலும் சிறந்த தேர்ச்சி பெற்றவர்களாய் விளங்கினர்.

சங்ககால மக்கள் பல்வேறு கலைகளிலும் சிறந்த தேர்ச்சி பெற்றிருந்தனர். 'எண்ணெண் கலையோர் இருபெருவீதியும்' என்று சிலம்பு ஊர்காண் காதையும் இதனைச் சுட்டி நிற்கிறது. ஆயகலைகள் அறுபத்து நான்கிலும் நன்கு தேர்ச்சி பெற்றவர்களாய் விளங்கினர். கலையே

வாழ்வாகவும், வாழ்வே கலையாகவும் வாழ்ந்தனர். தமிழ் மக்கள் என்பதற்குச் சங்க இலக்கியங்களே சான்றாக அமைகின்றன.

ஒருவர் தன்னுடைய நல்லறிவால் ஓர் அருஞ்செயலை நுட்பமாகவும் திறமையாகவும் செய்து பிறர் வியந்து பாராட்டி அதனை விரும்புமாறு காட்டுவதில் கலைத்தன்மை அமைகிறது. கலைத் தன்மைக்கு அடிப்படை மனிதனின் கலையுணர்வாகும். கலைஞனும் கலை உணர்வுக்கு ஆட்படுவதில் கலை சிறந்து விளங்குகிறது.

மனிதனின் மகிழ்ச்சியானது பல்வேறு கலைகளாக வடிவம் பெற்றன. மனமகிழ்ச்சிக்காகக் கூடி ஆடி மகிழ்ந்த ஆடல்கள் பின்னாளில் தனித்தனி ஆடல் கலைகளாக மாறின.

இசைக்கலையிலும் நாட்டியக் கலையிலும் பண்டைக் காலத் தமிழ் மக்கள் சிறந்து விளங்கியதனை பரிபாடலும், பதிற்றுப்பத்தும் சுட்டுகின்றது. பாணன், பொருநன், கூத்தன், விறலி என்ற கலைஞர்கள் சிறப்புப் பெற்றனர். தொல்காப்பியரும்,

> **“கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**
> **ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்**
> **பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்**
> **சென்று பயன் எதிர் சொன்ன பக்கமும்’’**[46]

என்ற நூற்பாவால் கூத்தர், பாணர், பொருநர், விறலியர் வள்ளல்களை நாடிச் சென்று பொருள் பெற்றதற்குச் சான்றாக அமைகிறது.

**இசைக்கலை**

இசைப்புலமை மிக்க புலவர்கள் வறுமையில் இருந்த கால அளவில் பழுத்த மரத்தை நாடிச் செல்லும் பறவைகள் போன்று மூவேந்தர்களையும் வள்ளல்களையும் நாடிச் சென்று தம்முடைய இசைத் திறமையைக் காட்டிய நிலையில் பரிசுகள் பலவற்றைப் பெற்று தன்னுடைய மனையாளிடம் கொடுத்து எல்லோர்க்கும் கொடுத்து நல்லறம் பேணினர்.

வள்ளல்களை நாடிப் பாணனும், பாடினியும் கூத்துகளை நிகழ்த்தியதையும் அதனை வள்ளல்கள் ஆதரித்ததையும் அகநானூற்றுப் பாடல் வழியே காணமுடிகிறது.

**''அரம்போழ் அவ்வளை செறிந்த முன்கை**
**வரைந்ததாம் பிணித்த தொல்கவின் தொலைய**
**எவன் ஆய்ந் தனர்கொல் – தோழி – ஞெமன்ன்**
**தெரிகோல் அன்ன செயிர்தீர் செம்மொழி,**
**உலைந்த ஒக்கல், பாடுநர் செலினே,**
**உரன்மலி உள்ளமொடு முனைபா ழாக,**
**அருங்குறும்பு எறிந்த பெருங்கல வெறுக்கை''**[47]

நன்னன் என்ற மன்னனிடம் வறுமையால் வாடிய சுற்றத்தாருடன் பாணர் முதலியோர் தன்னை நினைத்துவரின் வலிமைமிக்க உள்ளமோடு சென்று பகைவர்தம் போர்க்களம் பாழாகும்படி வென்று அவர்களுடைய அரண்களை அழித்து அவர்பால் கொண்ட விலைமிக்க அணிகலனாகிய பெருஞ்செல்வத்தை பாடுநர் தகுதியறியாது யாரோடும் கூடி ஆராயாது அவர்க்கு மிகுதியாகப் பொருளை வாரி வழங்குவான் என்ற கருத்தை மாமூலனார் குறிப்பிடுதல் நோக்கத்தக்கது.

சங்ககால மகளிர் இயல், இசை, நாடகம் என்னும் மூன்றிலும் தேர்ச்சிபெற்று விளங்கினர். சங்ககாலத்தே இசைப் பாடல்கள் இருந்தன. இசை வகுத்தோரும் இருந்தனர். இசை பற்றிய இலக்கண நூல்களும் இருந்துள்ளன.

> **''இசைமணி எறிந்து, காஞ்சிப்பாடி,**
> **நெடு நகர் வரைப்பிற் கடி நறை புகைஇ**
> **காக்கம் வம்மோ காதல் அம்தோழி**
> **வேந்துறு விழுமம் தாங்கிய**
> **பூம் பொறிக் கழற் கால் நெடுந்தகை புண்ணே''**[48]

என்ற பாடலால் அறிய முடிகின்றது.

**கூத்துக்கலை வளர்ச்சி**

ஒன்றோடொன்று தொடர்பில்லாத தனித்தனியான வரலாற்று நிகழ்ச்சிகளை நடித்துக் காட்டுவதாக கூத்துக்கலை இருந்துள்ளது. இதனை, சிலம்பில் இளங்கோவடிகளும்,

> **''குழல் வழி நின்றது யாழே ; யாழ் வழித்**
> **தண்ணுமை நின்று தகவே ; தண்ணுமைப்**
> **பின்வழி நின்றது முழவே''**[49] என்கிறார்.

கூத்தர்கள் மத்தளம், தாளம், மயிற்பீலி சூட்டப்பட்ட கொம்புகள், நெடுவங்கியம், குழல், கரடிகை, சல்லி, ஒருகண் மாக்கினை போன்ற இசைக்கருவிகளைக் கொண்டு சென்றுள்ளார்கள்.

மதுரையை அடுத்துள்ள திருப்பரங்குன்றத்தில் முருகனின் கோயில் மண்டபங்களில் கதிரவன், கோள்கள், இரதி, மன்மதன், இந்திரன், அகலிகை,

கௌதமன் ஆகியோரின் ஓவியங்கள் வரையப்பட்டிருந்தன என்று பரிபாடல் குறிப்பிடுகிறது.

**''என்றூழ் உறவரும் இரு சுடர் நேமி**
**ஒன்றிய சுடர்நிலை உள்படுவோரும் ;**
**இரதி காமன் இவள் இவன் எனாஅ,**
**விரகியர் வினவ வினா இறுப்போரும் ;**
**இந்திரன், பூசை, இவள் அகலிகை இவன்**
**சென்ற கவுதமன், சினன் உறக் கல் உரு**
**ஒன்றிய படிஇது என்று உரை செய்வோரும்**
**இன்ன பல பல எழுத்து நிலை மண்டபம்''**[50]

என்பதனால் சங்க கால மக்கள் ஓவியக் கலையில் தேர்ச்சி பெற்றிருந்தமையை அறிய முடிகிறது.

**மருத்துவக்கலை**

மருத்துவக்கலையிலும் தேர்ச்சி பெற்றவர்களாக மக்கள் விளங்கினர். மருத்துவர்களாய் விளங்கியவர்களுள் சிலர் புலவர்களாகவும் விளங்கினர்.

**''திருந்திய யாக்கையுள் மருத்துவன் ஊட்டிய**
**மருந்துபோல் மருந்து ஆகி மனன் உவப்ப''**[51]

என்பதனால் மருத்துவத்துறையிலும் வல்லுநர்களாய் விளங்கியமையை அறிய முடிகிறது.

**''திண்வார் விசித்த முழவொடு ஆகுளி**
**நுண்உருக்கு உற்ற விளங்கு அடார்ப் பாண்டில்**
**மின்இரும் பீலி அணிந்தழைக் கோட்டொடு**
**கண் இடை விடுத்த களிற்று உயிர்த் தூம்பின்,**
**இளிப்பயிர் இமிரும் குறும்பரம் தூம்பொடு,**

**விளிப்பது கவரும் தீம்குழல் துதைஇ,**
**நடுவுநின்று இசைக்கும் அரிக்குரல் தட்டை,**
**கடி கவர்பு ஒலிக்கும் வல்லவாய் எல்லரி**
**நொடி தரு பாணிய பதலையும் பிறவும்**
**கார்கோட் பலவின் காய்ந்தனர்கடுப்ப''[52]**

என்னும் பாடல் இசைக்கலைஞர்கள் கொண்டு சென்ற கருவிகளைப் பட்டியலாக்குகின்றது.

**ஓவியக்கலை**

ஓவியக்கலை பண்டைய தமிழகத்தில் சிறந்த இடத்தைப் பெற்றிருந்தது. ஓவியம் தீட்டும் கலைஞர்களை கண்ணுள் வினைஞர்[53] என்று மதுரைக் காஞ்சி சுட்டுகிறது. மாதவியின் நடன அரங்கேற்ற மண்டப மேல்விதானம் ஓவியங்களால் தீட்டப்பட்டிருந்தது[54] என்று இளங்கோவும் சிலப்பதிகாரத்தில் குறிப்பிடுகின்றார்.

நெடுநல்வாடையில் தலைவனைப் பிரிந்திருந்த தலைவி வேலைப்பாடுமிக்க கட்டிலின் விதானத்தில் பலவகையான ஓவியங்கள் வரையப்பட்டிருந்தன.

**''புலிப் பொறிக் கொணட பூங்கேழ்த் தட்டத்துத்**
**தகடு கண் புதையக் கொளீஇ''[55]**

**''ஓவச் செய்தியின் ஒன்று நினைந்து ஒற்றி''[56]**

என்ற வரிகளினால் ஓவியக்கலையின் சிறப்புகள் வெளிப்படுகிறது.

பெரிய வீடுகளோடு சிறிய வீடுகளையும், குடிசைகளையும் கொண்ட மக்கள் தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொண்டனர். மீனவர்களும், பாணர்களும், உழவர்களும் குடிசைகளை அமைத்துத் தங்கினர்.

**"ஈத்திலை வேய்ந்த எய்ப்புறக் குரம்பை"**[57]

என்பதனால் அறிய முடிகிறது.

பிறைச்சந்திரன் போன்ற வடிவத்தில் சங்ககாலத்து மாடங்கள் காணப்பட்டன.[58]

மாடங்களில் சாளரங்கள் அமைக்கப்பட்டிருந்தன.[59]

மாடங்களில் அமைந்த தூண்கள் பீடம், குடம், பொதியல் என்னும் உறுப்புகளைக் கொண்டதாக இருந்தன.

**"பரு விரும்பு பிணித்து, செல்வரக்கு ரீஇ**
**துணைமான் கதவம் பொருத்தி, இணை மாண்டு**
**நாளொடு பெயரிய கோள் அமை விழு மத்து**
**போது அவிழ்குவளைப் புதுப்பிடிப் கால் அமைத்து"**[60]

என்று நெடுநல்வாடை கூறும் குறிப்புகளால் கட்டிடக் கலையில் சிறந்த தேர்ச்சி பெற்றிருந்தனர் என்றறிய முடிகிறது.

**கட்டிடக்கலை**

மக்களின் வாழ்க்கை செம்மையாக அமைவதற்குக் கட்டிடக்கலை இன்றியமையாத ஒன்றாகும். கட்டிடக் கலையின் பரிணாம வளர்ச்சியே கோயில்கள் பல கட்டப்பட்டதற்குச் சான்று.

தமிழ் மக்களின் நாகரிக முதிர்ச்சிக்கும், தொழில் திறமைக்கும் சான்றாக அமைவது கட்டிடக் கலையாகும். தமிழர்களின் கட்டிடக் கலை தொன்மையான வரலாற்று சிறப்பு வாய்ந்தது.[61]

தமிழகக் கட்டிடக் கலைஞர்களாகிய தொழிலாளர்கள் பிறநாட்டுக் கட்டிடக் கலைஞர்களோடு ஒப்பிடும் வகையில் திறமை பெற்றிருந்தனர் என்பதனை மணிமேகலை காப்பியமும் குறிப்பிடுகிறது. இதனை, ''சுடுமண் ஓங்கிய நெடுநிலை மனை'' என்பதனால் சீத்தலைச் சாத்தனார் குறிப்பிடுகின்றார். இதனை,

> **''இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென,**
> **மணிப்புறாத் துறந்த மரஞ்சோர் மாடத்து**
> **எழுது அணி கடவுள் போகலின் புல்லென்று**
> **ஒழுகுபலி மறந்த மெழுகாப் புன்றிணை''**[62]

என்று அகநானூறு குறிப்பிடுகிறது.

**அணிகலன்கள்**

குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை பல்வேறு வகையான அணிகலன்களைப் பூண்டு தங்களை அழகுபடுத்திக் கொண்டார்கள். சங்க இலக்கியத்தில் சிறுவர்கள் முதல் பெரியோர்கள் வரையில் பல்வேறு அணிகலன்களைத் தங்கள் கால்கள், கழுத்து, கைகள் போன்றவற்றில் அணிந்து தன்னை ஒப்பணைக் கலையில் தேர்ச்சி மிக்கவர்களாய் அழகுபடுத்திக் கொண்டனர். ''குழந்தைகளின் கால்களின் பரல்கள் கொண்ட கிண்கிணி''[63] அணிந்திருந்தனர். இதனை நற்றிணைப் பாடலும் குறிப்பிடுகின்றது.[64]

ஆடவர்கள் காலில் கழல்கள் அணிந்திருந்தனர்[65] அத்துடன் வீரவளை பூண்டிருந்தனர்.

பெண்கள் காலிற் சிலம்பும், அரையில் (இடுப்பு) பொற்காசு கட்டிய ஆடையும் கைகளில் வளையலும் அணிந்து மகிழ்ந்தனர்.[66] மார்பில் பொன்னறிமாலை முதலிய ஆபரணங்களை அணிந்திருந்தனர்.[67] அத்துடன் தலையில் பொற்றாமரைச் சுட்டியும் அணிந்திருந்தனர்.[68]

பெண்கள் தங்கள் ஆடையின் மீது மேகலை என்னும் ஆபரணத்தை இடையில் கட்டியிருந்தார்கள்.[69]

பொன்னும் மணியும் முத்தும், பவளமும் கலந்து விலைமதிப்பு மிக்க ஆபரணங்களை உருவாக்கும் கலைநயம் பெற்றிருந்தனர்.[70]

**மகளிர் அலங்காரத் தோற்றம்**

மகளிர் தம்மை அழகுபடுத்திக் கொள்ளும் வகையினை அறிந்திருந்தார்கள். உடை, அணிகலன் போன்றவற்றின் மீது மக்கள் காலத்திற்கும், இடத்திற்கும், சூழலுக்கும் ஏற்பத் தன்னை அலங்காரம் செய்து கொண்டார்கள்.

எட்டுத் தொகை நூல்களுள் ஒன்றான பரிபாடல் புதுப்புனலின் வரவினைக் காண்பதற்கு மகளிர் கொண்ட கோலத்தை அழகுபட எடுத்துரைக்கின்றது.

**"மின் அவிர் ஒளி இழை வேயுமோரும்,**
**பொன் அடார்ப் பூம் புனை திருத்துவோரும்,**
**அகில்கெழு சாந்தம் மாற்றி ஆற்றுப்**
**புகைகெழு சாந்தம் பூசுவோரும்,**

**கார் கொள் கூந்தல் கதுப்பு அமைப்போரும்,**

**வேர் பிணி பல் மலர் வேயுமோரும்,**

**புட்டகம் பொருந்துவ புனைகுவோரும்,**

**கட்டிய கயில் அணி காழ் கொள்வோரும்,**

**வாச நறுநெய் ஆடி, வான் துகள்,**

**மாசுஅற கண்ணடி வயக்கி, வண்ணமும்**

**தேசும் ஒளியும் திகழ நோக்கி**

**வாச மணத்துவர் வாய்க் கொள்வோரும் ;**

**இடு புணர் வளையொடு தொடு தோள்வளையர்**

**கட்டு வடக் கழலினர், மட்டு மாலையர்**

**ஓசனை கமழும் வாச மேனியா''**[71]

இவ்வாறு விழாக்காலங்களில் தங்களை அலங்கரித்துக் கொள்ள வேண்டும் என்ற சிந்தனை கொண்டிருந்தனர்.

**பல்வகையான உணவுகள்**

காடு, மேடுகளில் கிடைத்த காய்கள், கனிகள் போன்றவற்றோடு நன்செய், புன்செய் தானிய வகைகளையும், இறைச்சி வகைகளையும் பக்குவப்படுத்தி உண்ணும் திறம் பெற்றவர்களாய் விளங்கினர்.

உணவு வகைகளுள் நெல் உற்பத்தி செய்யும் வழிவகை கண்டிருந்தனர். செந்நெல்[72], வெண்ணெல்[73], வகைகளை உற்பத்தி செய்தனர்.

தினை,[74] ஆகிய புன்செய் தானியங்களையும் உணவுப் பொருட்களாய் உண்டனர்.

உழவர்கள் உழாமலேயே நால்வகையான உணவுப் பொருட்களும் பாரியின் பரம்பு மலையில் கிடைத்தன என்கிறார் கபிலர்.[75]

மூங்கில் நெல், பலாப்பழம், வள்ளிக்கிழங்கு, தேனி என்னும் நான்கு பொருட்களும் உழவர்கள் உழாமலேயே கிடைத்தன.

உணவுப் பொருளான சோற்றை வல்சி[76] என்றும், சொன்றி[77] என்றும் மிதவை[78] என்றும், அடிசில்[79] என்றும் பல்வேறு பெயர்களால் மக்கள் அழைத்தனர்.

புளியைக் கலந்து சமைத்த சோறும் தயிர் கலந்து செய்யும் சோற்று வகையும் வழக்கிலிருந்தன.[80]

மருத நிலத்து மக்கள் சூடுசோற்றில் பிரம்பின் புளிப்பும், இனிப்பும் கலந்த திரட்சியான பழத்தினைக் கொண்டு ஆக்கிய புளியங்கறியை இட்டு உணவு உண்டனர் எனத் தெரிகிறது.[81]

திணை மாவையும் உணவுப் பொருட்களில் ஒன்றாகக் கொண்டனர்.[82] பழஞ்சோறு உண்ணும் வழக்கமும் நடைமுறையில் இருந்துள்ளது.[83]

**இறைச்சி உணவு**

துவையலுடன் இறைச்சியில் செய்யப்பட்ட கறி வகைகளையும் சேர்த்து உணவாகக் கொண்டனர்.[84] தயிரைப் பிசைந்து குழம்பாக உணவில் சேர்த்துக் கொண்டனர்.[85]

நண்டு, வெண்சோறு கலந்த உணவை கூட்டாகச் சேர்த்து உண்டு மகிழ்ந்தனர்.[86]

கீரை வகைகளில் குப்பைக் கீரை[87] முதலியவற்றை உணவுப் பொருளாகக் கொண்டனர்.

### கிழங்கு வகைகள்

கிழங்கு வகைகளும், பலாக்கொட்டை போன்றவையும் உணவாகச் சேர்த்துக் கொள்ளப்பட்டன.[88] வள்ளிக்கிழங்கு[89] சேப்பங்கிழங்கு[90] போன்ற கிழங்கு வகைகளையும் பயன்பாட்டில் கொண்டிருந்தனர்.

### மாமிச உணவுகள்

விலங்கு மற்றும் பறவைகளின் இறைச்சியையும், மீன், நத்தை போன்ற நீர்வாழ் உயிரினங்களையும் உணவாகக் கொண்டனர்.[91] மேலும் முயல்[92], எலி[93], கோழி முதலியனவும் இறைச்சியாக உட்கொண்டனர். இறைச்சி முதலியவற்றை பக்குவப்படுத்தி உண்ணும் வழிவகைகளை மேற்கொண்டனர். இறைச்சிக்காகவே கோழி,[94] பன்றி, ஆடுகள் வளர்க்கப்பட்டன.[95]

### ஊறுகாய் வகைகள்

அந்தணர்களுடைய இல்லங்களில் மாவடு ஊறுகாய் உணவோடு சேர்த்துக்கொள்ளப்பட்டன.[96]

### கள் வகைகள்

ஊனுணவுடன் கள்ளையும் விரும்பி உண்டனர்.[97] ஔவையார் அதியமானின் கொடைத் திறனைப் பாராட்டும்போது சிறிய அளவுகள் கிடைத்தால் எனக்கே கொடுத்துவிடும் தன்மையுடையவன் என்றும், பெரிய அளவில் கள் கிடைத்தால் எனக்கும் கொடுத்து தானும் உண்ணுவான் என்று புறநானூற்றில் குறிப்பிடுகின்ற ஔவையார் பாடல் வழியே மகளிரும் கள்ளுண்டு களித்தனர் என்பது புலப்படுகிறது. இதனை,

**"சிறிய கட் பெறினே, எமக்கு ஈயும் ; மன்னே !**
**பெரியகட் பெறினே,**
**யாம் பாட தான் மகிழ்ந்து உண்ணும் ; மன்னே !**
**சிறு சோற்றானும் நனிபல கலத்தன் ; மன்னே !**
**பெருஞ் சோற்றானும் நனி பல கலத்தன் ; மன்னே !**
**என்பொடு தடி படுவழி எல்லாம் எமக்கு ஈயும் ; மன்னே !**
**அம்பொடு வேல் நுழை வழி எல்லாம் தான் நிற்கும் மன்னே''[98]**

என்ற புறநானூற்றுப் பாடலால் அறிய முடிகின்றது. யவனர்கள் நாட்டிலிருந்து கப்பல் வழியே கொண்டு வரப்பட்ட மது வகைகள் விரும்பி உண்ணப்பட்டன. செல்வருடைய மனைகளில் இளம் பெண்கள் பொற்காலங்களில் ஊற்றி ஆடவர்களை உண்ணச் செய்தார்கள்.[99]

பழங்காலத்தே ஊன் உண்ணல், மது அருந்துதல் போன்றவற்றில் எத்தகைய இடையூறும் இருக்கவில்லை. சோற்றுடன் கறியும் சேர்ந்த உணவு வகைகள் இரவலர்களுக்கு வழங்கப்பட்டதும், கள் மிகுதியான அளவில் இருந்தமைக்கும் பதிற்றுப்பத்து சான்றாக அமைகிறது.

## இனிப்பு வகைகள்

பருப்பு வகைகளுடன் வெல்லக்கட்டியைச் சேர்த்து ஆக்கிய உணவு வழக்கத்தில் இருந்துள்ளது.[100] தேனையும் பாலையும் கலந்து உண்ணும் வழக்கம் இருந்துள்ளது.[101] இனிய பழங்களையும் உண்டு மகிழ்ந்தனர்.[102]

பெரும்பாணாற்றுப் படையும்,

**''தாழ்கோட் பலவின் சூழ்சுளைப் பெரும்பழம்**
**வீழ்இல் தாழைக் குழவித் தீம்நீர்**
**கவைமுலை இரும்பிடிக் கவுள்மருப்பு ஏய்க்கும்**

**குலைமுதிர் வாழைக் கூனி வெண்பழம்**
**திரள் அரைப் பெண்ணை நுங்கொடு பிறவும்**
**தீம்பல் தாரம் முனையின் சேம்பின்**
**முளைப்புற முதிர்கிழங்கு ஆர்குவீர்''**[103]

பலாப்பழம், இளநீர், வாழைப்பழம், பனை நுங்கையும் பிற இனிய பண்டங்களையும் மக்கள் விரும்பி உண்ட பாங்கை வெளிப்படுத்துகிறது.

### தாம்பூலம் தரித்தல்

தக்கோலம், ஏலம், இலவங்கம், கற்பூரம், ஜாதிக்காய் கலந்து தாம்பூலம் தரித்தனர்.[104] வெற்றிலைப் பாக்குடன் கூடிய பையைத் தாங்கள் செல்லுமிடங்களுக்குக் கொண்டு செல்வதும், அவ்வப்போது தாம்பூலம் தரித்தல் என்பதும் வழக்கத்திலிருந்துள்ளது.[105]

### பல்வேறு விளையாட்டுகள்

ஆடவர்கள் தங்களின் பணிகள் முடிந்து ஓய்வு கிடைக்கும் காலங்களில் புனலாடல், பொழியாடல், விழாக்களைக் கண்டு களித்தல் முதலிய கேளிக்கைகளில் பெரிதும் ஆர்வமாகக் கலந்து கொண்டு பொழுது போக்கினர்.[106]

### கோழிப் போர்

பொழுது போக்குவதற்காகச் சூதாடியது போன்று கோழிகளை சண்டையிடச் செய்து மகிழ்ந்தனர்.

**''குப்பைக் கோழி தனிப் போர் போல,**
**களைவோர் இலை - யான் உற்ற நோயே''**[107]

என்பதனால் அறிய முடிகிறது.

## விலங்குகளின் போர்

இரண்டு காளைகள் தம்மில் முட்டிக் கொள்வதனைப் புறநானூறு குறிப்பிடுகிறது.[108] காளைகள் முட்டிக் கொள்வதனைக் கண்டு கோவலரும், குறவரும் கண்டு ஆரவாரம் செய்தனர்.[109]

## வழிபாடுகள்

மகளிர் மாலைக் காலங்களில் தங்கள் இல்லங்களில் விளக்கேற்றி இல்லுறை தெய்வத்தை வழிபட்டனர். குழந்தைகளோடு கோயில்களுக்குச் சென்று இறைவழிபாடுகள் செய்தார்கள். அந்தணர்கள் அந்தியில் அருங்கடன் இறுத்தனர்.[110]

சங்ககால மக்கள் சடங்குகள், குறிகேட்டல், சகுனம் கேட்டல் (விரிச்சி கேட்டல்) இறைநம்பிக்கை போன்றவற்றில் பெரிதும் நம்பிக்கைக் கொண்டிருந்தனர் என்பதை இதன் மூலம் அறியலாம்.

மக்கள் தொடக்க காலத்தில் காட்டுமிராண்டிகளாய் வாழ்ந்து, பின்னர் நாகரிகம் பெற்ற நிலையில் தங்கள் வாழ்க்கைச் சூழல்களுக்கேற்ப வாழத் தொடங்கிய காலத்தில் இயற்கை வழிபாடுகளாக இடி, மின்னல், மழை, வெய்யில், தீ போன்றவற்றைக் கண்டு அஞ்சியதோடு, காட்டு விலங்குளைக் கண்டும் அஞ்சினர். அவற்றின் கொடுமையிலிருந்தும் இயற்கைச் சீற்றங்களிலிருந்தும் தன்னைக் காத்துக் கொள்வதற்கு வீடுகளை அமைத்துக் கொண்டனர்.

இயற்கைச் சீற்றங்களைக் கண்டு பயந்த மனிதன் அவற்றை வணங்குவதன் வாயிலாகத் தன்னைக் காத்துக் கொள்ளலாம் என

எண்ணினான். இச்சூழலில்தான் மனிதகுல வரலாற்றில் இயற்கையைத் தெய்வமாக வணங்குவது தொடங்கியது.

இயற்கையினை வழிபடத் தொடங்கியவன் மனிதர்கள் கூடி வாழ்ந்த சூழலில் சமூகம் முறைப்படுத்தப்பட்டமையால் சமயங்கள் தோன்றின. அக்கால அளவிலே சமயம் என்பது ஒரு பெரிய அமைப்பாகவோ, குழுவாகவோ இருக்கவில்லை.

தங்கள் அறிவுக்கு அப்பாற்பட்ட நிலையில் நின்று அவ்வியல்புடைய இயக்கும் ஆற்றல் ஒன்று உண்டு என நம்பி அதனைப் போற்றத் தொடங்கினர். அதன் அடிப்படையில் சமயம் தோற்றம் பெற்றது.

சமயம் என்ற நிலையில் அவை தெய்வம், சடங்கு என்னும் இருவழிகளில் மேற்கொள்ளப்பட்டது. சமயம் தெய்வம் சடங்கு என்ற இருவகையில் தன்னை நிலை நிறுத்திக் கொண்டதை அடிப்படையாகக் கொண்டே இலக்கிய ஆய்வுகள் நிகழ்த்தப் பெறுகின்றன. சமய வாழ்வு பற்றிய கருத்துகள் சங்கப் பாடல்களில் பரவலாகக் காணப்படுகின்றன.

நடுகல் வழிபாடு அக்காலத்தில் நிலைபெற்றிருந்தது என்பதனை,

> **''ஊர் நனிஇறந்த பார்முதிர் பறந்தலை**
> **ஓங்கு நிலை வேங்கை ஒள் இணர் நறு வீப்**
> **போந்தை அம் தோட்டின் புணந்தனர் தொடுத்து**
> **பல் ஆன் கோவலர் படலை சூட்ட கல்லாயினை**
> **கல் ஆயினையே கடுமான் தோன்றல்''**[111]

எனும் புறநானூற்றுப்பாடல் வழி அறியமுடிகின்றது.

சங்க காலத்தே பல்வேறு கொள்கைகளைக் கொண்ட மக்கள் வாழ்ந்திருந்தனர். சமணப்பள்ளிகளும், பௌத்தப் பள்ளிகளும் இருந்துள்ளன. இதனை,

**"தண்கேணித் தகை முற்றத்து**
**பகட்டு எருத்தின் பல சாலை**
**தவப் பள்ளி தாழ் காவின்**
**அவிர் சடை முனிவர் அங்கி வேட்கும்**
**ஆவுதி நறும் புகை முனை இ குயில் தம்**
**மாஇரும் பெடையொடு இரியல் போகி**
**பூதம் காக்கும் புகல் அருங் கடிநகர்**
**தூது உ அம் புறவொடு துச்சிற் சேக்கும்"**[112]

என்று பட்டினப்பலையும் குறிப்பிடுகிறது.

வானத்தின் இயல்பினை அறிந்தவர்களும், கல்வி அறிவு நிரம்பியவர்களும் சான்றோர்களும் நோன்பிருந்தனர். அருகக் கடவுளின் கோவிலின் அருகே சமணர் பள்ளியும் இருந்துள்ளது.

**"வண்டு படப் பழுநிய தேன் ஆர் தோற்றத்துப்**
**பூவும் புகையும் சாவகர் பழிச்ச**
**சென்ற காலம் வரூஉம் அமயமும்**
**இன்று இவண் தோன்றிய ஒழுக்கமொடு நன்கு உணர்ந்து**
**வானமும் நிலமும் தாம் முழுது உணரும்**
**சான்ற கொள்கை சாயா யாக்கை"**[113]

என்ற மதுரைக் காஞ்சி பாடல் வழியே காணமுடிகிறது.

அந்தணர்களின் இயல்புகளும், அவர்களுக்கு அருளை அளிப்பவன் திருமால் என்ற கருத்தை,

**"விறல்மிகு விழுச்சீர் அந்தணர் காக்கும்**
**அறனும், ஆர்வலர்க்கு அருளும் நீ**
**திறன் இல்லோர்த் திருந்திய தீது சீர் கொள்கை**
**மறனும், மாற்றலாக்கு அணங்கும் நீ ;**
**அம்கண் வானத்து அணி நிலாத் திகழ்தரும்**
**திங்களும், தெறு கதிர்க் கனலியும் நீ ;**
**நிலனும் நீடிய இமயமும் நீ !"**[114]

ஒவ்வொரு நிலத்தைச் சார்ந்த மக்களும் தாங்கள் வாழும் நிலத்தின் தன்மைக்கேற்ப தெய்வங்களை வழிபட்டமைக்குத் தொல்காப்பியமும் சான்றாக அமைகிறது.

**"மாயோன்மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சிமருதம் நெய்தல் எனச்**
**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"**[115]

என்கிறது.

ஐம்பூதங்களையும் தெய்வ வடிவாக வழிபட்டதைப் பரிபாடலும் சுட்டுகிறது.

**"பூவினுள் நாற்றம் நீ ;**
**கல்லினுள் மணியும் நீ ! சொல்லினுள் வாய்மை நீ**
**அறத்தினுள் அன்பு நீ மறத்தினுள் அமைந்து நீ**
**வேதத்து மறைநீ ! பூதத்து முதலும் நீ !**
**வெஞ்சுடர் ஒளியும் நீ ! திங்களும் அளியும் நீ**
**அனைத்தும் நீ ! அனைத்தின் உட்பொருளும் நீ ! ஆதலின்**
**உறையும் உறைவதும் இலையே உண்மையும்"**[116]

சங்கப்பாடல்களில் சமயப் பாடல்கள் மிகுந்த காணப்படுவதால் சமயம் மக்கள் வாழ்க்கையோடு தொடர்புடைய ஒன்றாகவே அமைந்திருத்தலை அறிய முடிகின்றது.

**தெய்வங்கள்**

இயற்கைச் சக்திகளை வழிபட்ட மக்களின் மனமானது பண்பட்டது. பண்பட்ட சமுதாயமாக மக்களின் வாழ்க்கை அமைந்திருந்தமைக்குச் சங்கச் செய்யுட்களே சான்றாக அமைவன. தொல்காப்பியமும் நிலத்தை அடிப்படையாக வைத்தே தெய்வங்களைக் குறிப்பிடுகின்றது.

**''உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு**
**பலர்புகழ் ஞாயிறு கடல்கண்டா அங்கு**
**அற இமைக்கும் சேண் விளங்கு அவிர் ஒளி''**[117]

என்ற அதிகாலை சூரியன் எழுவது முருகப்பெருமானின் தோற்றம் போன்றிருப்பதாக திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் குறிப்பிடுகின்றார்.

தொல்காப்பியரும் உலகிற்கு முதல்வனாகிய இறைவனை தெய்வம் என்ற பெயராலேயே குறிப்பிடுகின்றது. கருப்பொருளில் முதலாக அமைவது

**''தெய்வம் உணாவே மாமரம் புட்பறை''**[118]

என்பதிலிருந்து அறியலாம். இதன் மூலம் பண்டைக்காலத்திய மக்கள் கடவுள் நம்பிக்கைக் கொண்டவர்களாக விளங்கிய பல்சமயத்தாரும் சமயக் காழ்ப்பின்றி அமைதியாக வாழ்ந்தமையும் புலனாகிறது.

**சடங்குகளில் பற்று**

சங்க காலத்திய மக்கள் சமூகம் சடங்குகளுக்குட்பட்டது. வாழ்க்கையின் அனைத்து நிலைகளிலும் சடங்குகள் இன்றியமையாத வகையில் இடம் பெற்றன. இன்பம், துன்பம் இரண்டு நிலைகளிலும் சடங்குகள் கையாளப்பட்டது.

மனிதன் கருவுற்றிருப்பது முதல் இறப்பது வரை பல சடங்குகளைக் கடக்கிறான். ஒவ்வொரு கட்டத்தில் புகும்போதும் அந்த நிகழ்ச்சிகளைக் குறிப்பதற்காகவும் அதன் சிறப்பையும் பலனையும் நினைவூட்டுவதற்கும் சில சிறப்புச் செயல்கள் செய்யுமாறு ஒவ்வொரு மக்கள் இனத்தவரும் விதிகள் உண்டாக்கியிருக்கிறார்கள். இச்சிறப்புச் செயல்களை பிரவேசச் சடங்குகள் என்று கலைக்களஞ்சியம் குறிக்கிறது.[119]

சடங்குகளில் மனிதன் அமுக்கப்படுவதை பெரும்பாலான சடங்குகளில் தானே உட்பட்டு பங்கெடுத்துக் கொள்கிறான். குழந்தையாகப் பிறந்து திருமண உறவு மற்றும் இறப்பு வரை அநேகச் சமயச் சடங்குகள் நிகழ்கின்றன. இவைகள் சமூகக் கட்டுப்பாட்டிற்குப் பெரிதும் வழியமைக்கின்றன.

இத்தகைய சடங்குகள் தெய்வத்தின் பேரால் சமுதாயத்தில் காலூன்றி மக்களிடையே மிகுதியான செல்வாக்கினைப் பெற்றுள்ளது. ''ஊழ்வினை, மறு உலகம் போன்றவற்றிலும் மக்கள் நம்பிக்கைக் கொண்டிருந்தன.[120]

## தொகுப்புரை

சங்ககால மக்கள் கல்வி, கேள்வி, கலைகள் பலவற்றிலும் தேர்ச்சி பெற்றிருந்தனர். இயற்கையோடு இயைந்த வாழ்க்கையை விரும்பி மேற்கொண்டனர். தாங்கள் உற்பத்தி செய்த பொருள்களைப் பிற இடங்களில் கொண்டு போய் விற்றுத் தங்களுக்குத் தேவையானவற்றைப் பெற்றுக் கொண்டனர். உள்நாட்டு வணிகத்திலும் வெளிநாட்டு வணிகத்திலும் சிறந்த தேர்ச்சி பெற்று விளங்கினர்.

உணவு வகைகளில் காய்கறி உணவுகளையும், மாமிச உணவு வகைகளையும் உண்டு மகிழ்ந்தனர். கள்ளுண்டு களித்து மகிழ்ந்தனர்.

மன்னனும் மக்களும் குடியோம்பி செங்கோல் நெறி தவறாத ஆட்சியை அமைத்தனர். மகளிர் அணிகலன்கள், ஒப்பனைக் கலை போன்றவற்றில் தேர்ச்சி பெற்றிருந்தன. கட்டடக்கலை, மருத்துவக்கலை, இசைக்கலை, கூத்துக்கலை போன்றவற்றில் சிறப்புற்று விளங்கினர்.

தெய்வவழிபாடு, விருந்தோம்பல், தெய்வ வணக்கம், சடங்குகள், ஊழ்வினை, மறுபிறப்பு போன்றவற்றில் நம்பிக்கைக் கொண்டிருந்தனர். வீரமும் நெஞ்சில் ஈரமும் கொண்டு அறத்தோடு பொருளையீட்டு தானும் உண்டு மற்றவர்க்கும் ஈந்து சமயப் பொறை கொண்டவர்களாய் விளங்கினர்.

# சான்றெண் விளக்கம்

1. தொல்காப்பியம், அகத்திணையியல், நூற்பா. 4.
2. மேலது, நூற்பா எண்.3.
3. சிலப்பதிகாரம், காடுகாண் காதை 11, 64-67 வரிகள்.
4. சிலப்பதிகாரம், காதை, 14, 97-101 வரிகள்.
5. சிலப்பதிகாரம், காதை, 14, 97-101 வரிகள்.
6. குறிஞ்சிப் பாட்டு, 108-110 வரிகள்.
7. நெடுநல்வாடை, 51-52 வரிகள்.
8. மலைபடுகடாம், 516 வரி.
9. சிறுபாணாற்றுப் படை, 254-255 வரிகள்.
10. பொருநராற்றுப்படை, 143-144 வரிகள்.
11. நெடுநல்வாடை, 176 வரி.
12. மதுரைக்காஞ்சி, 399-401 வரிகள்.
13. கலித்தொகை, பாடல் 65, 12-14 வரிகள்.
14. பதார்த்தகுண சிந்தாமணி, பாடல் 12.
15. மதுரைக்காஞ்சி, 289-290 வரிகள்.
16. பட்டினப்பாலை, 185-186 வரிகள்.
17. புறநானூறு, பாடல் எண். 18,19-20 வரிகள்.
18. புறநானூறு, பா.எண்.242.
19. பட்டினப்பாலை, 75-76 வரிகள்.
20. டாக்டர் கே.கே. பிள்ளை, தமிழக வரலாறும், மக்கள் பண்பாடும், ப.50.

21. டாக்டர் அ. தட்சணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.60.

22. மேலது, ப.68.

23. திருமதி ஜெயம், தமிழ் இலக்கிய வரலாறு, ப.37.

24. டாக்டர் மு. வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.17.

25. ஜெ.ஸ்ரீ. சந்திரன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.28.

26. டாக்டர் சி.பாலசுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.26.

27. டாக்டர் கு.மைதிலி வளவன், வாணிபம், ப.53.

28. புறநானூறு, பா. எண்.56, 18-20 வரிகள்.

29. பட்டினப்பாலை, 129-141 வரிகள்.

30. மேலது, 185-193 வரிகள்.

31. மயிலை, சீனி வேங்கடசாமி, பழந்தமிழர் வாணிகம், ப.11.

32. டாக்டர் மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.112.

33. புறநானூறு, பா. எண்.186, 1-2 வரிகள்.

34. தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், நூற்பா 4.

35. மேலது, நூற்பா 18.

36. புறநானூறு பா.எண். 246.

37. பெரும்பாணாற்றுப்படை, 56-57 வரிகள்.

38. புறநானூறு, பா.எண். 12.

39. மேலது, பா.எண். 101, 1-5 வரிகள்.

40. மலைபடுகடாம், 563-566 வரிகள்.

41. பெரும்பாணாற்றுப் படை, 471-479 வரிகள்.

42. புறநானூறு, ப.124, 1-2 வரிகள்.

43. முல்லைப்பாட்டு, 11-வரி.

44. தொல். பொருள். புறத்திணையியல், நூற்பா 70, 1-5.

45. மு.சண்முகம் பிள்ளை, சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும், ப.80.

46. தொல்காப்பியம், புறத்திணையியல், நூற்பா, 36.

47. அகநானூறு பா.எண்.349, 1-7 வரிகள்.

48. புறநானூறு பா.எண்.281, 5-9 வரிகள்.

49. சிலப்பதிகாரம், அரங்கேற்றுக் காதை, 138-141 வரிகள்.

50. பரிபாடல், பா.எண்.19, 46-53 அடிகள்.

51. கலித்தொகை, பா.எண்.17, 19-20 வரிகள்.

52. மலைபடுகடாம், 3-13 வரிகள்.

53. மதுரைக்காஞ்சி, 518 வரி.

54. சிலப்பதிகாரம், அரங்கேற்றுக் காதை, 106-111வரிகள்.

55. நெடுநல்வாடை, 126-127 வரிகள்.

56. அகநானூறு, பாலைக்கலி, பா. எண்.5, 98வது வரி.

57. பெரும்பாணாற்றுப்படை, அடி 87.

58. புறநானூறு, பா.எண்.378.

59. மதுரைக்காஞ்சி, 358 வரி.

60. நெடுநல்வாடை, 80-84 வரிகள்.

61. டாக்டர் அ. தட்சணாமூர்த்தி தமிழக வரலாறும் பண்பாடும், ப.313.

62. அகநானூறு, பா. எண்.167, 13-16 வரிகள்.

63. கலித்தொகை, பா.எண்.81, 6வது வரி.

64. நற்றிணை, பா.எண்.58, 1வது வரி.

65. பெரும்பாணாற்றுப்படை, 102-103 வரிகள்.

66. அகநானூறு, பாடல் எண்.219, 15-16 வரிகள்.

67. ஐங்குறுநூறு பா.எண்.310.

68. பெரும்பாணாற்றுப்படை, 481-482 வரிகள்.

69. கலித்தொகை, பா.எண்.56, 19வது வரி.

70. புறநானூறு, பா.எண்.218, 1-2 வரி.

71. பரிபாடல், பா.எண்.12, 11-25 வரி.

72. பெரும்பாணாற்றுப்படை, 474.

73. பதிற்றுப்பத்து, பா.எண். 12, 17வது வரி.

74. புறநானூறு, பா.எண்.119, 14வது வரி.

75. புறநானூறு, பா.எண்.109, 2-3 வரிகள்.

76. பெரும்பாணாற்றுப்படை, 255 வரி.

77. மேலது, 130 வரி.

78. அகநானூறு, பா.எண்.86, 1வது வரி.

79. சிறுபாணாற்றுப்படை, 242 வரி.

80. மேலது, 175 வரி.

81. அகநானூறு, பா. எண். 196, 5-7 வரிகள்.

82. பதிற்றுப்பத்து, பா.எண்.24, 22வது வரி.

83. புறநானூறு, பா.எண். 399, 10-11 வரிகள்.

84. புறநானூறு, பா.எண்.14, 13-14 வரிகள்.

85. குறுந்தொகை, பா.எண்.167, 1-3 வரிகள்.

86. சிறுபாணாற்றுப்படை, 195 வரி.

87. மேலது, பா.எண். 159, 9வது வரி.

88. பெரும்பாணாற்றுப்படை, 362 வரி.

89. புறநானூறு, பா.எண்.109, 1-3 வரி.

90. பெரும்பாணாற்றுப்படை.

91. பதிற்றுப்பத்து, பா.எண். 12, 17-18 வரிகள்.

92. புறநானூறு, பா.எண்.34, 9வது வரி.

93. நற்றிணை, பா.எண்.83, 5வது வரி.

94. பெரும்பாணாற்றுப்படை, 308-310 வரிகள்.

95. புறநானூறு, பா.எண். 262, 1வது வரி.

96. பெரும்பாணாற்றுப்படை, 308-310 வரிகள்.

97. புறநானூறு, பா. எண்.113, 1-2 வரிகள்.

98. மேலது, பா.எண். 235.

99. மேலது, பா. எண்.24, 31வது வரி.

100. பதிற்றுப்பத்து, பா.எண்.90.

101. நற்றிணை, பா.எண்.110.

102. மலைப்படுகடாம், 282 வரி.

103. பெரும்பாணாற்றுப்படை, 356-361 வரிகள்.

104. பரிபாடல், பா.எண்.12.

105. கலித்தொகை, பா.எண்.65.

106. பரிபாடல், பா.எண்.12.

107. குறுந்தொகை, பா.எண்.305, 7-8 வரிகள்.

108. புறநானூறு, பா.எண்.288, 1-2 வரிகள்.

109. மலைபடுகடாம், 332-335 வரிகள்.

110. மதுரைக் காஞ்சி, 555-558 வரிகள்.

111. புறநானூறு, பா.எண்.265.

112. பட்டினப்பாலை, 51-58 வரிகள்.

113. மதுரைக் காஞ்சி, 4-5 வரிகள்.

114. பரிபாடல், பா. எண்.1, 40-45 வரிகள்.

115. தொல்காப்பியம் நூற்பா 964.

116. பரிபாடல், பா.எண்.3.

117. திருமுருகாற்றுப்படை, 1-3 வரிகள்.

118. தொல்காப்பியம் அகத்திணை இயல், நூற்பா 20.

119. கலைக்களஞ்சியம் தொகுதி 4, ப.1.

120. சாமி சிதம்பரனார், பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும் ப.60.

# இயல் ஐந்து

# மக்களின் மேம்பாடு

## முன்னுரை

தமிழக மக்களின் வாழ்க்கை குறிக்கோளை அடிப்படையாகக் கொண்டமைவது. ஒவ்வொரு நிலப் பகுதியில் வாழும் மக்களும் தங்கள் தங்கள் பகுதி, நிலம் போன்றவற்றின் தன்மைகளுக்கேற்பச் சில குறிக்கோள்களைக் கொண்டிருத்தல் இயல்பு. ஒவ்வொருவரும் தன் தேவைகளுக்கு ஏற்ப, தான் வாழும் சூழல்களுக்கேற்ப, தேவையென எண்ணுகின்ற வசதிகளைப் பெருக்கிக் கொள்ளவும், சமுதாயமாகக் கூடி வாழவும் சில நியதிகள் அவசியமாகின்றது என்று அறிந்து மேம்பட்டிருந்தமையை இவ்வியல் ஆராய்கின்றது.

## மன்னனும் மக்களும்

தனிமனிதனாயினும், அரசனாயினும் ஒவ்வொருவருக்கும் சில நியதிகள் உண்டு. என்னைச் சிறியவன் இளையவன் என்று கருதி பகைவர்கள் என்மேல் போர் தொடுத்தால் அவர்களைப் போரில் புறமுதுகிட்டு ஓடச் செய்வேன். அவ்வாறு செய்யவில்லையேல் புலவர்கள் என்னைப் பாடாதொழிக என்ற தகுதிப் பாட்டினை வளர்த்துக் கொண்ட மன்னர்கள் வாழ்ந்த நிலம் தமிழ் மண்.

நான் பகைவர்களைப் புறமுதுகிட்டு ஓடச் செய்வேன். அவ்வாறு செய்யாமற் போயின் என் மார்பில் உள்ள மாலையானது பொது மகளிர்

மார்பில் பட்ட மாலையாகட்டும் என்று வஞ்சினம் கூறிய பண்டைக்காலத் தமிழ் மன்னரும் உண்டு.

ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி மாங்குடி மருதன் தலைவனாக உள்ள புலவர்க் கூட்டம் என்னைப் பாடாது ஒழிக என்று குறிப்பிட்ட பாண்டிய மன்னனும் நம் இலக்கியத்தில் சிறப்பிடம் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

பாண்டிய மன்னன் முதுகுடுமிப் பெருவழுதி போர் புரிகையில் அரசன் கடன் அது அறிந்து போர் அறத்தை மேற்கொண்டமையைப்

**''ஆவும், ஆன் இயற் பார்ப்பன மாக்களும்,**
**பெண்டிரும் பிணியுடையீரும், பேணித்**
**தென் புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்**
**பொன்போல் புதல்வர்ப் பெறாஅ தீரும்**
**எம் அம்பு கடி விடுதும், நும் அரண் சேர்மின் என**
**அறத்து ஆறு நுவலும் பூட்கை, மறத்தின்,**
**கொல்களிற்று மீமிசைக் கொடி விசும்பு நிழற்றும்**
**எம் கோ, வாழிய, குடுமி – தம் கோச்**
**செந் நீர்ப் பசும் பொன் வயிரியர்க்கு ஈத்த,**
**முந்நீர் விழவின், நெடியோன்**
**நல்நீர்ப் பஃறுளி மணலினும் பலவே''**[1]

பழந்தமிழ் மக்கள் பசுக்கூட்டங்களையும், பார்ப்பனரையும் பெண்டிரையும் பேணினர். முன் அறிவிப்புச் செய்து அதன்பின்னர் போர்மேல் செல்லுதல் மற்றவர்க்கு இடையூறு ஏற்படாது என்று கருதிய மேம்பாடுடையவர்கள் தமிழ் மண் காத்த மன்னர்கள் இருந்தார்கள் என்பதை புறநானூற்றில் காண முடிகிறது.

**நல்வினை**

''நல்லது செய்தல் ஆற்றீராயினும் அல்லது செய்தல் ஓம்புமின்'', ''வாழ்தல் வேண்டிப் பொய் கூறேன் மெய் கூறுவல்'' என்பதனை வாழ்வியல் நெறியாகக் கொண்டவர்களாய்ப் புலவர் பெருமக்கள் விளங்கினர். அவர்களால் போற்றப்பட்ட மன்னர்களும் அவ்வாறே இருக்க வேண்டும் என்று விழைந்தனர்.

நல்லது செய்தால் நற்கதியடையலாம் என்பது சமயக் கொள்கை. இத்தகைய நற்கதியை அடைய உயர்ந்த கோட்பாடுகளை உள்ளத்தில் கொள்ள வேண்டும். உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல் என்றார் வள்ளுவர் உயர்வான கொள்கையும் விருப்பமும் கொள்பவர்க்கு நல்வினைப்பயன் கைகூடும்.

**''அதனால், உயர்ந்த வேட்டத்து உயர்ந்திேனார்க்கு,**
**செய்வினை மருங்கின் எய்தல் உண்டு''**[2]

என்று நல்வினை, தீவினை என்னும் இரண்டும் அணுகாதவருக்குத் தேவர் உலக இன்பம் கிடைக்கும் என்று புறநானூறு கூறுகிறது என்ற கருத்தையும் புலவர் முன் வைக்கிறார். வெற்றியையும் தோல்வியையும் சமமாகப் பாவிக்கும் மனநிலையை மக்கள் பெற்றிருந்தனர்.

வெற்றிக் களிப்பால் எக்காளமிடுவதில்லை. தோல்வியின் பயத்தால் துவண்டு போவதுமில்லை. உயர்ந்த லட்சியங்களுக்காகச் சென்று தோல்வியைத் தழுவும்போது அதற்காகப் பின்னடைந்து இழிந்த நிலைக்குச் செல்வதில்லை. எழுச்சியுடையோர் தம் லட்சியத்திலேயே செல்ல விரும்புவர்.

வெளிமானிடம் பரிசில் பெறுவதற்காகச் சென்ற புலவர் அவன் இறக்கும் தருவாயில் இருப்பது கண்டு அவன் தம்பி சிறிதளவே பொருள் கொடுத்த நிலையில் அதனைக் கொள்ளாது, புலியானது யானையாகிய இரை தப்பினால் எலியை வீழ்த்தாது அது போன்று சிறிது பொருள் கொள்ளாத நிலையைப்

**''புலி பார்த்து ஒற்றிய களிற்று இரை பிழைப்பின்,**
**எலி பார்த்து ஒற்றாதாரும் ; மலி திரைக்கடல்''**[3]

என்று பெருஞ்சித்திரனார் புறநானூற்றில் குறிப்பிடுகிறார்.

**பொருளின் சிறப்பு**

அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றும் வாழ்வின் அடிப்படையாகும். பிறர்க்கு உதவி செய்து வாழ்வதற்கும், தனக்கு நேரும் பகை முதலியவற்றை நீக்கி வெற்றி பெறுவதற்கும் தன் மனம் விரும்பும் காதல் இன்பத்தை நுகர்வதற்கும் பொருளே அடிப்படையாகும்.

**''அரிதாய அறன் எய்தி அருளியோர்க்கு அளித்தலும்,**
**பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்**
**புரிவு அமர் காதலின் புணர்ச்சியும் தரும் என**
**பிரிவு எண்ணிப் பொருள்வயிற் சென்ற நம் காதலர்**
**வருவர் கொல் வயங்கிழாஆய் ! வலிப்பல், யான் : கேஎள் ; இனி''**[4]

என்னும் கலித்தொகை பாடல் மேற்குறிப்பிட்ட கருத்தை உணர்த்துகின்றது. அறமும் இன்பமும் பொருளை அடிப்படையாக வைத்தே உண்டாகும்.

**மனை வாழ்க்கை**

மனை வாழ்க்கையில் ஒத்த அன்பு, கணவன் மனைவி இருவர்க்கும் இருக்க வேண்டிய சிறந்த பண்பாகும். அன்புடைய இருவர் உள்ளத்தளவே கொண்ட காதலே அன்பின் நிலைத்த பண்பாகும். உத்தமமான காதல் வாழ்க்கையின் உயர்வான லட்சியத்தைப் புலப்படுத்தும்.

**''உயிர் இயைந் தன்ன நட்பின், அவ்உயிர்**
**வாழ்தல் அன்ன காதல்,**
**சாதல் அன்ன பிரிவு அரியோளே''[5] !**

என்று அகநானூறும்

**''செல்லாமை உண்டேல் எனக்கு உரை மற்றுநின்**
**வல்வரவு வாழ்வார்க் குரை''[6]**
**''இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக்**
**கண்நிறை நீர் கொண்டனள்''[7]**

எனும் குறட்பாக்கள் தலைமகன் பிரிவு பற்றிய கருத்துரைக்கும் போதே தோன்றிவிடுகிறது. காதல் வாழ்வில் ஈடுபட்ட இருவரும் பிரியாது கூடி வாழ்வதையே பெரும்பேறாகக் கருதினர். வறிய வாழ்க்கை வாழ்ந்தாலும் பிரியா வாழ்க்கையே பெருமை தரும் என்றெண்ணினர்.

இளமையுள்ள போதே அதனை அனுபவிக்க வேண்டும். முதுமையில் மீண்டும் இளமை திரும்பாது. ஆகையால் செல்வத்திற்கு முதலிடம் இல்லை.

**''இளமையும் காமமும் ஓராங்குப் பெற்றார்**
**வளமை விழைதக்கது உண்டோ? உள நாள்,**
**ஒரோஒ கை தம்முள் தழீஇ, ஒரோஒகை**
**ஒன்றன் கூறுஆடை உடுப்பவரே ஆயினும்**

**ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை ; அரிது அரோ,**
**சென்ற இளமை தரற்கு''[8]**

என்று கலித்தொகையை கூறுகிறது. காதல் வயப்பட்ட இருவர் கூடும் கூட்டம் ஒருவர் மெய்யும் மற்றவர் உடம்பும் உட்புகுவது போன்று அவ்வளவு நெருக்கமாக அமையும். தென்றலை இடையே செல்லவிடாதபடி நெருங்கினர். பெருங்காதலுடன் இன்பம் கொள்ளும் நிலையை விட சிறந்த இன்பம் இவ்வுலகில் இல்லை.

**''அணிவளை முன்கை, ஆய் இதழ் மடந்தை**
**வார்முலை முற்றத்து நூல் இடை விலங்கினும்**
**கவவுப்புலத்து உறையும் கழிபெருங் காமத்து**
**இன்புறு நுகர்ச்சியின் சிறந்தது ஒன்றுஇல்''[9]**

இன்பத்திற்குரிய காலம் இளமைக்காலம். வயது முதிர்ந்தோர் மீண்டும் தம் இளமையைப் பெறமுடியாது. வாழ்நாளின் எல்லையையும் ஒருவர்க்கு உறுதியாகக் கூறமுடியாது. ஆகவே இன்ப நுகர்ச்சியில் வாய்ப்பு நேரும்போது அதனைக் காலம் தாழ்த்தாது பெறுதல் வேண்டும் என்ற சிந்தனை மேலோங்கியிருந்தது என்பதனை அகநானூறு கூறுகிறது. அதனால்,

**''சாதல் அஞ்சேன், அஞ்சுவல், சாவின்**
**பிறப்புப் பிறிது ஆகுவது ஆயின்**
**மறக்குவேன் கொல், என் காதலன் எனவே''[10]**

**''இம்மை மாறி மறுமை ஆயினும்,**
**நீ ஆகியர் எம் கணவனை;**
**யான் ஆகியர் நின் நெஞ்சு நேர்பவளே''[11]**

என்னை காதலன் பிரிவதால் நான் இறந்து போக அஞ்சவில்லை. அப்படி மறுபிறப்பு உண்டு எனில் என் காதலனை மறக்க நேருமே என்று இத்தகைய காதல் மொழிகள் தலைவியின் அன்பு மேம்பாட்டை எடுத்துரைப்பனவாகும்.

காதலின் எல்லை இத்தன்மையது இவ்வாறு இருந்தது என்று விரித்துக் கூறமுடியாது. காதல் உடற்பசி, உள்ளப்பசி என்பர் டாக்டர் வ.சுப.மாணிக்கனார் கூறுகிறார். இக்காதல் பருகுவதை யொத்த தன்மையுடையது. ஈருடல் ஓருயிர் என்னும் உயர் வாழ்வை உடையது என்று அகநானூறு கூறுகிறது.

**''பல்படை நிவந்த வறுமைஇல் சேக்கை,**
**பருகு வன்ன காதலொடு திருகி,**
**மெய்புகு வன்ன கைகவர் முயக்கத்து,**
**ஓர்உயிர் மாக்களும், புலம்புவர் மாதோ;''**[12]

காதல் கடலைவிடப் பெரியது.

தலைவி தலைவன் மேல்கொண்ட காதல் நிலத்தை விடப் பெரியது. நீரைவிட ஆழமானது. வானைவிட உயர்ந்தது என்கிறார்.

**''நிலத்தினும் பெரிதே ; வானினும் உயர்ந்தன்று ;**
**நீரினும் ஆர் அளவின்றே – சாரல்**
**கருங்கோற் குறிஞ்சிப் பூக் கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே''**[13]

என்று குறுந்தொகை குறிப்பிடுகிறது.

இத்தகைய அன்புடைய காதல் தொடக்கம் முதல் வாழ்வின் இறுதிவரை ஒரு வெற்றியாக அமைய வேண்டும் என்பதே ஆண் - பெண்

இருபாலாரின் விருப்பமாக அமைந்தது. காதல் அன்பின் முதிர்ந்த நிலை. காதல் உடலுக்கு நல்லது, உள்ளத்துக்கு நல்லது, ஊருக்கு நல்லது. இன்னும் சொல்லப் போனால் உலகத்துக்கே நல்லது என்றார் வ.சுப.மா கூறுகிறார்.[14] அத்தகைய நல்ல காதல் மிகுந்த அன்புடையதாக விளங்க வேண்டும்.

**''வாய்த்தன – வாழி தோழி ! – வேட்டோர்க்கு**
**அமிழ்தத்து அன்ன கமழ்தார் மார்பின்**
**வண்டுஇடைப் படாஅ முயக்கமும்**
**தண்டாக் காதலும், தலைநாள் போன்மே''**[15]

இதன் பொருள் என் தலைவரது அமிழ்தம் போன்ற மார்பகத்து இடைப்பட்ட வண்டுகள் நீங்குமாறு இன்று யான் பெற்ற செறிந்த முயக்கமும், நீங்காத காதலும் முதல் நாள் பெற்றது போன்றது என்கிறாள் அகநானூறு தலைவி.

**தலைவன் தலைவி ஒப்புமை**

ஒத்த குணங்களையுடைய தலைவனும் தலைவியும் ஊழ்வயத்தால் ஒன்றுபட்டு வாழ்க்கைத் துணையாக அமைவர் என்று நம்பினர் தொல்காப்பியமும் தலைவன் தலைவிக்கு பத்து வகையான ஒப்புமைகளைக் குறிப்பிடுகிறது. தொல்காப்பியர்,

**''பிறப்பே, குடிமை, ஆண்மை யாண்டோ**
**டுருவு நிறுத்த காமவாயில்**
**நிறையே, யருளே, உணர்வொடு திருவென**
**முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே''**[16]

தலைவன் தலைவி இருவர்க்குமுரிய குணங்களாக,

**''நிம்பிரி கொடுமை, வியப்பொடு புறமொழி**
**வன்சொற் பொச்சாப்பு மடிமையொடு, குடிமை**
**இன்புறல் ஏழைமை மறப்போடு டொப்புமை**
**என்றிவை யின்மை என்மனார் புலவர்''**[17]

இத்தகைய குணங்களையெல்லாம் கண்ணால் காணமுடியாது. அனுபவத்தைக் கொண்டு குறிப்பால் உணரலாம்.

**மணவாழ்க்கை**

பெற்றோர்கள் விருப்பத்துடன் தலைவியைக் கொடுக்கத் தலைவன் மணம் செய்து கொள்ளுதல் திருமணம் இதனை குறுந்தொகையில் அறியலாம்.

**''கூன் முள் முண்டகக் கூர்ம்பனி மாமலர்**
**நூல்அறு முத்தின் காலொடு பாறித்**
**துறைதொறும் பரக்கும் தூமணற் சேர்ப்பனை**
**யானும் காதலென் ; யாயும் நனி வெய்யள் ;**
**எந்தையும் கொடீஇயர் வேண்டும்**
**அம்பல் ஊரும் அவனொடு மொழிமே''**[18]

கற்பு மணமானது நாடறி நல்மணமாக நிகழ்ந்தது என்கிறார் கபிலர்.

**''நேர் இறை முன்கை பற்றி, நுமர்தர,**
**நாடுஅறி நல்மணம் அயர்கம் ; சில்நாள்**
**கலங்கல் ஓம்புமின், இலங்கு இழையீர்''**[19]

இதனைத் தலைவன் மூலமாக வெளிப்படுத்துகின்றார். மகளிர் தான் அன்பு, கொண்டு ஒழுகிய வரையே மணந்து கொண்டனர்.

**மக்கட்பேறு**

இல்லறத்தின் இனிய கனவே மக்கட் பேறாகும். குழந்தைகளின் தளிர் நடையும், மழலைப் பேச்சும், அவர்கள் சோற்றை அளைந்து உண்ணுவதும் மிகவும் இன்பம் தருவன.

பாண்டிய மன்னன் அறிவுடை நம்பியே மக்கட் பேற்றின் சிறப்பினைக் குறித்துக் கூறுதல் சிறப்புடைய ஒன்றாகும். தங்கள் குடிப்பிறந்த முன்னோர்களுக்கு நீர்க்கடன் அளித்த அவர்களுக்கு நற்கதியளிப்பவர்கள் புதல்வர்களே ஆவார்.

இதனை,

**''படைப்புப் பல படைத்துப் பலரொடு உண்ணும்**
**உடைப் பெருஞ் செல்வர் ஆயினும், இடைப் படக்**
**குறுகுறு நடந்து, சிறு கை நீட்டி,**
**இட்டும், தொட்டும், கவ்வியும், துழந்தும்,**
**நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்,**
**மயக்குறு மக்களை இல்லோர்க்குப்**
**பயக் குறை இல்லை - தாம் வாழு நாளே''**[20]

நீர்க்கடன் செய்தற்குப் புதல்வர் பேறு இன்றியமையாதது. புதல்வரைத் தன்குடிக்கு விளக்கு என்று புறநானூறு குறிப்பிடுகிறது.

**''கடவுட் கற்பொடு குடிக்கு விளக்கு ஆகிய**
**புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பின்**
**நன்ன ராட்டிக்கு அன்றியும், எனக்கும்**
**இனிதுஆ கின்றால், சிறக்க நின்ஆயுள்''**[21]

**''இம்மை உலகத்து இசையொடும் விளங்கி,**
**மறுமை உலகமும் மறு இன்று எய்துப**
**செறுநரும் விழையும் செயிர் தீர் காட்சிச்**
**சிறுவர்ப் பயந்த செம்மலோர்' எனப்**
**பல்லோர் கூறிய பழமொழி எல்லாம்**
**வாயே ஆகுதல் வாய்த்தனம் - தோழி!''**[22]

குழந்தையைப் பெற்றோர் காப்பது போன்று குடிகளை அரசனும் போற்றிக் காக்க வேண்டுமென்று அறிவுறுத்தப்படுகிறார்.

குழந்தையின் தளர் நடையும், மழலையும் பெற்றோர்க்கு இன்பம் தருவன. குழந்தை தன் பெற்றோர் நெற்றி, கன்னம் போன்றவற்றைத் தடவி அவர்களுக்கு இன்பத்தைச் கொடுக்கின்றனர்.

**''கிளர்மணி ஆர்ப்ப ஆர்ப்பச் சாஅய்ச் சாஅய்ச் செல்லும்,**
**தளர் நடை காண்டல் இனிது; மற்று இன்னாதே,**
**'உளம்' என்னா நுந்தைமாட்டு எவ்வம் உழப்பர்**
**வளை நெகிழ்வு யாம் காணுங்கால்**
**ஐய, காமரு நோக்கினை, 'அத்தத்தா' என்னும் நின்**
**தேமொழி கேட்டல் இனிது, மற்று இன்னாதே''**[23]

குழந்தையின் மழலை இனிது இனிது ! என்றும் கலித்தொகையும்

**"யாழொடும் கொள்ளா, பொழுதொடும் புணரா ;**
**பொருள் அறிவாரா ! ஆயினும் தந்தையர்க்கு**
**அருள் வந்தனவால், புதல்வர் தம் மழலை''**[24]

இவற்றை நோக்குகையில் பண்டையத் தமிழ் மக்கள் மக்கட் பேற்றிலும் மக்களை வளர்ப்பதிலும் மிகுதியான கவனம் செலுத்தியமை புறநானூறு மூலம் புலனாகிறது.

### குடிப்பெருமை

ஒழுக்கம், வாய்மை, புகழ் முதலியன யாவும் அவரவர் பிறந்த குடிக்கு ஏற்ப அமையும். இதனை,

**''தந்தையர் ஒப்பர் மக்கள்''**[25]

என்றார் தொல்காப்பியர்.

ஒருவனுடைய குணம் மற்றும் செயல்களை அவன் பிறந்த நாடு, குடியிருப்பு, பிறந்த குடி, அவனுடைய ஏற்றம் முதலியவற்றோடு ஒப்பீடு செய்தலே முறையாகும். குடிப்பிறப்பே ஒருவனுடைய சிறப்பிற்கு அடிப்படை.

**''இன்துணைப் பயிரும் குன்ற நாடன்**
**குடிநன்கு உடையன், கூடுநர்ப் பிரியலன்**
**கெடு நா மொழியலன், அன்பினன்''**[26]

தோழியே, என் தலைவன் உயர்குடிப்பிறப்பினன், தன்னோடு பழகியோரைப் பிரியாதவன், நாவில் நெடுமொழி கூறான், எல்லோரிடத்திலும் அன்பினன் என்றெல்லாம் கூறி அத்தலைவன் என்னை மணக்க உதவினாய் எனத் தலைவி தோழியைப் பாராட்டுவதன் மூலம் குடிப்பெருமை வெளிப்படுகிறது. ஏற்றத்தாழ்வற்ற சிறந்த குடிப்பிறப்பே பெருமை தருவது.

**''சேற்று வளர் தாமரை பயந்த, ஒண் கேழ்,**
**நூற்று இதழ் அலரின் நிரை கண்டன்ன,**
**வேற்றுமை இல்லா விழுத் திணைப் பிறந்து,**
**வீற்றிருந்தோரை எண்ணும் காலை,**
**உரையும் பாட்டும் உடையோர் சிலரே ;**
**மரை இலை போல மாய்ந்திசினோர் பலரே;''**[27]

குடிப்பிறப்பிற்கேற்ற குணம், செயல்கள் ஒருவரிடம் இயற்கையாகவே அமைய வேண்டும். குடியில் சிறந்து விளங்கியோரின் பெருமையை எடுத்துக் காட்டுதலும் மரபு நிலையாகும்.

தன்னை அடைக்கலமாக வந்தடைந்த புறாவிற்காகத் தன் தசையை அரிந்தும், பின்னர் தானே துலாக்கோலில் ஏறி நின்றதும் சிபி மன்னனையும், அவன் பிறந்த குடியையும் எடுத்துக்காட்டும்.

**"நிலமிசை வாழ்நர் அலமரல் தீர,**
**தெறு கதிர்க் கனலி வெம்மை தாங்கி,**
**கால் உணவு ஆக, சுடரொடு கொட்கும்**
**அவிர்சடை முனிவரும் மருள, கொடுஞ்சிறைக்**
**கூர் உகிர்ப் பருந்தின் ஏறு குறித்து, ஒரீஇ**
**தன் அகம் புக்க குறு நடைப் புறவின்**
**தபுதி அஞ்சிச் சீரை புக்க**
**வரையா ஈகை உரவோன் மருக !"**[28]

சிலப்பதிகாரத்திலும் கண்ணகி பாண்டிய மன்னனிடம் தன் கணவன் கள்வனல்லன் என வழக்குரைக்காதையில் வாதிடுகையில் புகழ்ச்சோழன், சிபி மன்னர்களின் பெருமைகளை எடுத்துரைத்து சோழநாட்டுக் குடியின் பெருமையை எடுத்துரைப்பதும் ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

தன்னை நாடி வந்தவர்களுக்கெல்லாம் பொன்னையும், பொருளையும் ஊர்களையும் வழங்கியவன் பாரி. எதிரிகள் சூழ்ச்சியால் பாரியைக் கொன்ற நிலையில் கபிலர் இருங்கோ வேளிடம் பாரி மகளிர் பெருமையை எடுத்துரைப்பதும் குறிப்பிடத்தக்க குடிப்பெருமைக்கும், வள்ளல் தன்மைக்கும் சிறந்த சான்றாகும். இதனை

**"'இவர் யார்' ? என்குவை ஆயின், இவரே**
**ஊருடன் இரவலர்க்கு அருளி, தேருடன்**
**முல்லைக்கு ஈத்த செல்லா நல் இசை,**
**படுமணி யானை, பறம்பின் கோமான்**

**நெடுமாப் பாரி மகளிர் ! யானே !**
**தந்தை தோழன், இவர் என் மகளிர்''**[29]

என்ற புறநானூறு பாடலின் மூலம் உணரலாம். குடிப்பிறப்பே ஒருவனின் வீரம், புகழ், கொடை போன்றவற்றிற்கெல்லாம் அடிப்படையாக அமையும்.

**பிறப்பின் சிறப்பு**

அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது என்றார் ஔவையார். மக்கட் பிறப்பில் குருடு, தசைத்தியார், கூன், குறள், ஊமை, செவிடு, மா, மருள் என்னும் எட்டும் சிறப்பற்ற இழிந்த பிறப்பாகும்.

**''சிறப்பு இல் சிதடும் உறுப்பு இல் பிண்டமும்**
**கூனும், குறளும், ஊமும், செவிடும்,**
**மாவும் மருளும், உளப்பட வாழ்நர்க்கு**
**எண் பேர் எச்சம் என்று இவை எல்லாம்**
**பேதைமை அல்லது ஊதியம் இல் என,**
**முன்னும் அறிந்தோர் கூறினர்''**[30]

இந்த இழிந்த பிறப்புகள் அறம், பொருள், இன்பங்களை அடைவதற்குப் பயன்படா.

**வளமை**

கொடிது கொடிது இளமையில் வறுமை கொடியது. இன்பம் நுகர்வதற்கு உரிய பருவம் இளமைப்பருவம். சென்ற இளமை திரும்பி வராது. எனவே இளமையில் வளமையைத் தேடி இன்பத்தை அனுபவித்தலே சிறந்த குறிக்கோளாகும்.

**''இளமையின் சிறந்த வளமையும் இல்லை ;**
**இளமை கழிந்த பின்றை, வளமை**
**காமம் தருதலும் இன்றே;''**[31]

என்று நற்றிணை குறிப்பிடுகின்றது.

**அன்பு கொளல்**

வாழ்க்கையில் இன்பத்திற்கு அடிப்படையாக அமைவது அன்பு. அன்பே ஒருவர் நெஞ்சம் மற்றவர் நெஞ்சோடு ஒன்றிக் கலந்திட வழியமைக்கும் உத்தமமான அன்பிற்குச் சேர்ந்து வாழ்தலும் கூடிப்பழகுதலும் அவசியமாகும்.

இதனை,

**''யாயும் ஞாயும் யார் ஆகியரோ ?**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர் ?**
**யானும் நீயும் எவ்வழி அறிதும் ?**
**செம்புலப் பெயல் நீர் போல**
**அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே''**[32]

என்றும் அன்புடைய தலைவர்,

**''உயிர்க்கு உயிர் அன்னர்,''**[33]
**''யாரினும் இனியன் ; பேர் அன்பினனே''**[34]

என்னும் தொடர்கள் அன்பின் பெருக்கத்தை மையப்படுத்துவன.

அன்பின் சிறப்பிற்குக் கோப்பெருஞ் சோழனையும் பிசிராந்தையாரையும் குறிப்பிடலாம். ஒருவர் தன்மையை ஒருவர் மூலம் கேட்டறிந்த அன்பின் முதிர்ச்சியே இருவரும் ஒருங்கிணைந்து வடக்கிருக்கக் காரணமாயிற்று.

**''கேட்டல் மாத்திரை அல்லது, யாவதும்**
**காண்டல் இல்லாது யாண்டு பல கழிய,**
**வழு இன்று பழகிய கிழமையர் ஆயினும்**
**அரிதே, தோன்றல் ! அதற்பட ஒழுகல்' என்று**
**ஐயங் கொள்ளன்மின், ஆர் அறிவாளீர் !**
**இகழ்விலன் ; இனியன் ; யாத்த நண்பினன்;**
**புகழ் கெட வரூஉம் பொய் வேண்டலனே;**
**தன் பெயர் கிளக்கும் காலை, 'என் பெயர்**
**பேதைச் சோழன்' என்றும், சிறந்த**
**காதற் கிழமையும் உடையன் ; அதன் தலை,**
**இன்னது ஓர் காலை நில்லலன் :**
**இன்னே வருகுவன் ! ஒழிக்க, அவற்கு இடமே !''**[35]

என்பது புறநானூற்றில் அன்பின் திறத்திற்கு மற்றொரு சாட்சி. ஆதனுங்கன் என்னும் வள்ளலிடம் நட்புக் கொள்கிறார் கள்ளில் ஆத்திரையனார். எப்போதுமே ஆதுங்கனையே எண்ணுவதால் அவ்வள்ளல் நெஞ்சில் புகுந்துள்ளானாம். இதனையே

**''எந்தை ! வாழி, ஆதனுங்க ! என்**
**நெஞ்சம் திறப்போர் நிற் காண்குவரே ;**
**நின் யான் மறப்பின், மறக்கும் காலை,**
**என் உயிர் யாக்கையின் பிரியும் பொழுதும்,**
**என் யான் மறப்பின் மறக்குவென்''**[36]

என்று உரைக்கும் உரையில் புலவனின் பேரன்பை என் உயிர் என் உடம்பை விட்டு நீங்கும் காலத்தும் என்னை யான் மறக்கும் காலம் உண்டாயின் அப்பொழுது மறப்பேன் அல்லது மறவேன் எனக் கூறுவதன் மூலம் உணரலாம்.

**நட்பு**

உயிருடன் கலந்து உறவுப்பாலம் அமைப்பதே நட்பு. இத்தகைய நட்பிற்குப் பிறிவொன்றும் ஒன்றில்லை. யாராலும் பிரிக்க முடியாததே நட்பு. இந்நட்பு பிறவிதோறும் தொடர்ந்து வருவது என்பதை

**''யாத்தேம் யாத்தன்று நட்பே ;**
**அவிழ்த்தற்கு அரிது ; அது முடிந்தமைந்தன்றே''**[37]

**''கடலினும் பெரிது, எமக்கு அவருடை நட்பே''**[38]

**'''ஒன்றுதும்' என்ற தொன்று படு நட்பின் காதலர்''**[39]

**''பயிலியது கெழீஇய நட்பின்''**[40]

**''உயிர்கலந்து ஒன்றிய தொன்றுபடு நட்பின்**
**செயிர்தீர் நெஞ்மொடு செறிந்தோர் போல,''**[41]

**''இருதலைப் புள்ளின் ஓர் உயிரம்மே''**[42]

என்றெல்லாம் இலக்கியங்கள் குறிப்பிடுவதன் மூலம் நட்பிற்கு அடிப்படை ஒருவரையொருவர் புரிந்து கொள்வதே. சிறிதுகூட ஐயம் நேராவண்ணம் ஒருவருக்கொருவர் நடந்து கொள்வது இன்றியமையாதது. சிறுதவறு நேரினும் அது நட்புக் கொண்டோரிடம் பெரும் பிளவினை உண்டாக்கும். நெருங்கிப் பழகிய பின்னர் பிரிவு என்பது மிகவும் துன்பமாகும். ஆராய்ந்து நட்பு கொள்வதே சிறப்பு. திருவள்ளுவரும் நட்பு, நட்பாராய்தல், கூடாநட்பு, பழமை என்று நட்பின் சிறப்பினை ஐம்பது குறட்பாக்களில் தெளிவுபடுத்துகின்றார்.

**‘‘கடல் சூழ் மண்டிலம் பெறினும்,**
**விடல் சூழலன் யான், நின்னுடை நட்பே’’**[43]

**‘‘செல்வத்துள் சேர்ந்தவர் வளன் உண்டு, மற்று அவர்**
**ஒல்கத்து நல்கிலா உணர்விலார் தொடர்பு’’**[44]

**‘‘விழுமிதின் கொண்ட கேண்மை நொவ்விதின் தவறும்’’**[45]

**‘‘பழகிய பகையும் பிரிவு இன்னாதே’’**[46]

பெரியோர் தம்மோடு நட்பு கொள்ள விரும்புவர் குணத்தை முதலிலேயே ஆராய்ந்து அதன்பின் நட்பு கொள்வர் என்பதை

**‘‘நாடி நட்பின் அல்லது**
**நட்டு நாடார், தம் ஒட்டியோர் திறத்தே’’**[47]

என்பதிலிருந்து அறிய முடியும். நண்பர்கள் ஒருவருக்கொருவர் உதவியாக வாழ்வது எல்லாத் துறைகளிலும் நிகழும் ஒரு செயலாகும். ஒரு மன்னன் தன்னை நாடி வந்த நண்பர்களுக்கு மனம் உவக்கும் படியாக வேண்டுவன கொடுத்து அவர்கள் வாழ்க்கையைச் செழிக்கச் செய்வதாகும் சிறந்த நட்பு.

**‘‘நட்டோர் உவப்ப, நடைப்பரி காரம்**
**முட்டாது கொடுத்த’’**[48]

என்று தலையானங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியனும் தன் நண்பர்களை மேம்படுத்தினான் என்று புலவரும் சிறப்பிக்கின்றார்.

**‘‘நட்டவர் குடி உயர்க்குவை’’**[49]

அன்புடையவர்கள் நஞ்சினைக் கொண்டு தரினும் மறுக்காது வாங்கியுண்ணும் பேரருள் உடையவராய் விளங்கினர். சங்க காலத்தினர் இதனையே நற்றிணை

**''முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்**
**நஞ்சும் உண்பர் நனி நாகரிகர்''**[50] என்றுரைக்கிறது.

திருக்குறளும்

**''பெயக்கண்டும் நஞ்சு உண்டு அமைவர் நயத்தக்க**
**நாகரிகம் வேண்டு பவர்''**[51]

என்கின்றது. சோழன் நல்லுருத்திரனைப் பற்றிய பாடல் புறநானூற்றில் ஒன்று இடம் பெற்றுள்ளது.

**''விளை பதச் சீறிடம் நோக்கி, வளை கதிர்**
**வல்சி கொண்டு, அளை மல்க வைக்கும்**
**எலி முயன்றனையர் ஆகி, உள்ள தம்**
**வளன் வலியுறுக்கும் உளம் இலாளரொடு**
**இயைந்த கேண்மை இல்லாகியரோ !**
**கடுங் கண் கேழல் இடம் பட வீழ்ந்தென,**
**அன்று அவண் உண்ணாதாகி, வழி நாள்**
**பெரு மலை விடரகம், புலம்ப, வேட்டு எழுந்து,**
**இருங் களிற்று ஒருத்தல் நல் வலம் படுக்கும்**
**புலி பசித்தன்ன மெலிவு இல் உள்ளத்து**
**உரனுடையாளர் கேண்மை யொடு**
**இயைந்த வைகல் உள ஆகியரோ !''**[52]

விளைந்த நெற்கதிர்களைக் கொய்து தன் வளையில் நிறைத்து வைக்கும் எலியின் முயற்சி சிறு முயற்சியாகும். தம்மிடம் உள்ள செல்வத்தைப் பிறர்க்கு

வழங்காது இறுகப்பிடிக்கும் உலோபகுணம் உடையோரின் நட்பு நீங்கட்டும் என்கின்றார்.

பொன், முத்து, பவளம் முதலியன பல இடங்களில் தோன்றினும் ஆபரணம் அமைக்கும் காலத்து ஒரே இடத்தில் கூடுவது போல எப்பொழுதும் சான்றோர் சான்றோரையே நாடுவர் என்கிறார் புலவர்.

**“பொன்னும், துகிரும், முத்தும், மன்னிய**
**மா, மலை பயந்த காமரு மணியும்,**
**இடைபடச் சேய ஆயினும், தொடை புணர்ந்து**
**அரு விலை நன் கலம் அமைக்கும் காலை,**
**ஒரு வழித் தோன்றியாங்கு – என்றும் சான்றோர்**
**சான்றோர் பாலர் ஆப ;**
**சாலார் சாலார் பாலர் ஆகுபவே”**[53]

கோப்பெருஞ் சோழனும், பிசிராந்தையாரும் ஒன்றாக வடக்கிருத்தலைக் கண்டு பொத்தியார் வியந்து பாராட்டியது. கெட்டாலும் மேன் மக்கள் மேன் மக்களே என்பதனை விளக்குவதாக கோப்பெருஞ்சோழன், பிசிராந்தையார் நட்பு உள்ளது.

**சான்றோர் திறன்**

சான்றோர் நிறைபுலமை மிக்கவர்களாய் என்றும் அமைதியான கொள்கையுடையோராய் விளங்குவர். அவர்கள் அன்புடைய உள்ளத்தினராகவும், அருள் நிறைந்த நெஞ்சினராயும் விளங்குவர். உலகிற்கு நல்ல நெறியை விளக்கிக் காட்டுபவர்களும் இவர்களே.

தமக்குத் தீங்கு செய்தார் மாட்டும் நன்மையே புரிகுவர். புகழ்பல பெற்றவராயிருப்பினும் நாணங் கொள்வர். பழியென வரும் செயல்களைச்

செய்யமாட்டார்கள். கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதியின் புறநானூற்றுப் பாடலில் இதனை

**''புகழ் எனின் உயிரும் கொடுக்குவர், பழி எனின்**
**உலகுடன் பெறினும் கொள்ளலர்''**[54]

என்று குறிப்பிடுவதைக் காணலாம். இத்தகைய பண்புடையார் ஒரு சிலராவது இருப்பதனால்தான் இவ்வுலகம் நிலை பெற்றுள்ளது என்பர் கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி.

**''ஆன்றோர் செல் நெறி வழாஅச் சான்றோன்''**[55]

சான்றோர்

**''கடன் நிலை குன்றலும் இலர்''**[56]

**''தீமை கண்டோர் திறத்தும் பெரியோர்**
**தாம் அறிந்து உணர்க''**[57]

**''பேணுப பேணார் பெரியோர் என்பது**
**நாணத் தக்கன்று, அது காணுங்காலை''**[58]

**''.................. சான்றோர்**
**புகழும் முன்னர் நாணுப,**
**பழி யாங்கு ஒல்பவோ காணுங்காலே?''**[59]

**''முன் திணை முதல்வர்க்கு ஓம்பினர் உறைந்து,**
**மன்பதை காப்ப அறிவு வலியுறுத்தும்**
**நன்று அறி உள்ளத்துச் சான்றோர் அன்ன''**[60]

என்றெல்லாம் பெரியோரை வணங்குதலும், அவரைப் பேணிப்பாதுகாத்தலும் சிறந்த அறமாகும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

பெரியோர்களாக விளங்கும் முதியோர்கள் போற்றப்பட்டார்கள்.

**''வணங்கிய சாயல், வணங்கா ஆண்மை,**

**இளந் துணைப் புதல்வரின் முதியர்ப் பேணி,**

**தொல் கடன் இறுத்த வெல்போர் அண்ணல் !''[61]**

**''பெரியோர்ப் பேணி, சிறியோரை அளத்தி''[62]**

என்பதிலிருந்து பெரியோர்கள் சென்ற வழியில் செல்லுதலே அறத்தோடு கூடிய வாழ்வாகும். அதுவே ஒருவனுக்கு ஆக்கத்தைத் தரும்.

**''பெரியோர் சென்ற அடிவழிப் பிழையாது,**

**குடமுதல் தோன்றிய தொன்று தொழு பிறையின்**

**வழிவழிச் சிறக்க, நின்வலம்படு கொற்றம்''[63]**

என்றும், செம்மையான ஒழுக்கம் எல்லோரும் விரும்புவது. பெரியோரிடத்தும் அந்தணர்களிடத்தும் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதைத் தெரிவிப்பதே ஒழுக்கமாகும். இதனை

**''அந்தணர் திறத்தும், சான்றோர் தேஎத்தும்**

**அந்தம் இல்சிறப்பின் பிறர்பிறர் திறத்தினும்**

**ஒழுக்கம் காட்டிய குறிப்பினும்''[64]**

என்பதனால் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்ற ஒழுக்கம் பற்றிய குறிப்பு வெளிப்படுகிறது.

ஒழுக்கத்தில் தவறுதல் சிறுமையான செயலாகும். பொன் முதலிய ஆபரணம் சிதைந்தால் அதனை மீண்டும் செய்து கொள்ள முடியும். ஆயின் ஒழுக்கத்தில் தவறினால் சீர் செய்வது இயலாது.

**''முத்தினும், மணியினும் பொன்னினும், அத்துணை,**

**நேர்வரும் குரைய கலம்கெடின், புணரும் ;**

**சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின்**

**மாசு அறக் கழீஇ வயங்கு புகழ் நிறுத்தல்,**

**ஆசு அறு காட்சி ஐயர்க்கும், அந்நிலை,**
**எளிய என்னார், தொல் மருங்கு அறிஞர்''[65]**

என்பதனால் ஒழுக்கத்தின் உயர்வினை அறியலாம்.

கலித்தொகையில் இடம் பெற்றுள்ள 133 ஆம் பாடல் மேம்பாடு அடைவோரின் நெறிமுறைகளை வகுத்துரைக்கின்றது.

**'''ஆற்றுதல்' என்பது ஒன்று அலந்தவர்க்கு உதவுதல் ;**
**'போற்றுதல்' என்பது புணர்ந்தாரைப் பிரியாமை ;**
**'பண்பு' எனப்படுவது பாடு அறிந்து ஒழுகுதல் ;**
**'அன்பு' எனப்படுவது தன்கிளை செறா அமை ;**
**'அறிவு' எனப்படுவது பேதையார் சொல் நோன்றல் ;**
**'செறிவு' எனப்படுவது கூறியது மறாஅமை ;**
**'நிறை' எனப்படுவது மறை பிறர் அறியாமை ;**
**'முறை' எனப்படுவது கண்ணோடாது உயிர் வௌவல் ;**
**'பொறை' எனப்படுவது போற்றாரைப் பொறுத்தல்''[66]**

இவற்றை முழுமையாகக் கொள்ளும்போது மனம், மொழி, மெய்களினால் உண்டாகும் செயல்கள் செப்பம் பெறும்.

**அடக்கம்**

'காக்க பொருளாய் அடக்கத்தை' என்றும், அடக்கம் அமரருள் உய்க்கும் என்றும் வள்ளுவம் மொழிகின்றது. நற்குணங்கள் அமையப்பெற்று பணிந்து நடக்கும் கோட்பாடுகளைக் கொண்டவர்ளே சான்றோர் ஆவார். பெரியோர்கள் தம் காரியத்தை முடித்தற்கு அக்காலம் வருமளவும் அடங்கி ஒடுங்கி இருப்பர்.

**‘‘ஆன்றவர் அடக்கம் போல் அலர் செல்லாச்**
**சினையொடும்’’**[67]

**‘‘ஒன்று மொழிந்து அடங்கிய கொள்கை’’**[68]

என்பதனால் அடக்கமுடையவர்கள் ஆன்றவிந்து அடங்கியிருப்பர் என்பது தெளிவாகிறது.

**சொல்வன்மை**

பொய் அணுகாது மெய்ம்மையில் நிலைத்து சொல் வன்மையுடையவர்களாய் விளங்குவோர் நடுநிலைமையிலிருந்து சிறிதும் குன்றார். இதனை,

**‘‘பொய் அறியா, வாய் மொழியால்**
**புகழ் நிறைந்த, நல்மாந்தரொடு’’**[69]

**‘‘முந்நீர் மீமிசைப் பலர் தொழத் தோன்றி,**
**ஏமுற விளங்கிய சுடரினும்,**
**வாய்மை சான்ற நின் சொல் நயந்தோர்க்கே ?’’**[70]

**‘‘நின்ற சொல்லர் ; நீடு தோறு இனியர்’’**[71]

**‘‘நிலம் புடை பெயர்வதாயினும், கூறிய**
**சொல் புடை பெயர்தலோ இலரே’’**[72]

**‘‘மாரி பொய்க்குவது ஆயினும்**
**சேரலாதன் பொய்யலன் நசையே !’’**[73]

**‘‘நிலம் திறம் பெயரும் காலை ஆயினும்,**
**கிளந்த சொல் நீ பொய்ப்பு அறியலையே’’**[74]

**‘‘நகையினும் பொய்யா வாய்மை’’**[75]

**''எவன் ஆய்ந் தனர்கொல் -தோழி ஞெமன்ன்**
**தெரிகோல் அன்ன செயிர்தீர் செம்மொழி''**[76]

என்றெல்லாம் இலக்கியங்கள் எடுத்துக் கூறுகின்றன. மேன்மக்கள் பொய் கூறாது மெய்யையே போற்றுவர். செந்நெறியில் சிறந்து நிற்பர்; வாய்மையைக் கடைபிடிப்பர். பொய் கூறாது, புறம் பேசாது இனியவை கூறி இன்னா செய்யாமல் செய்ந்நன்றி மறவாத வாழ்க்கையைக் கடைபிடித்தனர். வறுமையில் செம்மாந்த வாழ்க்கை நடத்தினர்.

பொருள்தேடி, தான் பெற்ற பொருளைத் தனக்கு மட்டும் பயன்படுத்தாமல் எல்லோருக்கும் கொடுத்து வாழ்ந்தனர். செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருந்தனர். உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர் என்றறிந்து வறுமையுற்றவர்களின் பசிப்பிணியைப் போக்கினர்.

மன்னர்கள் குடிமக்களின் சிறப்புகளைக் கண்காணித்துச் சீரான வாழ்க்கைக்கு வழியமைத்தனர்.

**இன்சொல்**

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் இன்னா நாற்பது, இனியவை நாற்பது என்னும் இரு நூல்களும் எவையென வாழ்வுக்கு நலம் பயக்கும், எவை தீமைக்கு வழிவகுக்கும் என்பதனை எடுத்துரைப்பன. திருக்குறளில் இனியவை கூறல் என்ற அதிகாரம் ஒன்றையும் வள்ளுவர் படைத்துள்ளார். இனிய சொல் எல்லோராலும் விரும்பப்படும்.

**''அன்னை போல இனிய கூறியும்**
**கள்வர் போலக் கொடியன்மாதோ''**[77]

அன்னையின் மொழி இன்சொல் பயப்பது என்கிறது நற்றிணை.

**நன்றி மறவாமை**

திணைத்துணை நன்றி செய்யினும் பனைத்துணையாய்க் கொள்வர் பயன் தெரிவார். நன்றி மறப்பது நன்றன்று என்பவை வள்ளுவரின் குறள் மொழி. எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டு; உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு. நன்றி பாராட்டுவது என்பது பயன் பெற்றாரின் கடமையாகும். செய்ந்நன்றி மறத்தல் கழுவாயற்ற பெரும்பாவமாகும். இதனை

> **''ஆன் முலை அறுத்த அறனிலோர்க்கும்,**
> **மாண் இழை மகளிர் கருச் சிதைத்தோர்க்கும்**
> **பார்ப்பார் தப்பிய கொடுமையோர்க்கும்,**
> **வழுவாய் மருங்கில் கழுவாயும் உளம் என**
> **நிலம் புடைபெயர்வது ஆயினும், ஒருவன்**
> **செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்' என**
> **அறம் பாடின்றே. ஆயிழை கணவ''[78] !**

என்பதிலிருந்து அறியலாம். துன்பக் காலத்தில் ஒருவன் செய்த உதவிக்குக் கைம்மாறாக மீண்டும் எதிர்நன்றி செய்யாமற் போனால் அது அவர்தம் சந்ததிகளையும் பாதிக்கும் என்பதனை

> **''பெருநன்று ஆற்றின், பேணாரும் உளரே''[79]**

> **''முன்ஒன்று தமக்கு ஆற்றி முயன்றவர் இறுதிக்கண்**
> **பின் ஒன்று பெயர்த்து ஆற்றும், பீடுடையாளர்''[80]**

> **''ஒற்கத்துள் உதவியார்க்கு உதவாதான், மற்று அவன்**
> **எச்சத்துள் ஆயினும் அஃது எறியாது விடாதே காண்''[81]**

என்று குறிப்பதிலிருந்து உணர முடிகிறது.

**வறுமையில் செம்மை**

வறுமை மிகக் கொடியது என்பது

**''வறியவன் இளமைபோல் வாடிய சினையவாய்''**[82]

**''ஓர் ஆன் வல்சீச் சீரில் வாழ்க்கை''**[83]

**''உள்ளது சிதைப்போர் உளர் எனப் படாஅர் ;**
**இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவு''**[84]

**''ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கு இல்''**[85]

என்றெல்லாம் சுட்டப்படுகிறது. இளமையில் வறுமை கொடியது. வறிஞர்களுடைய இல்வாழ்க்கை யாசிப்பதைவிட இழிவானது.

வறுமைக்கு அடிப்படை சோம்பல். சோம்பலுக்கு இடமிருந்தால் வாழ்வு சிறக்காது.

**பொருள் தேடல்**

சங்ககாலத்தே தாம் விரும்பிய தலைவியை அடைய பொருளே அடிப்படையாக அமைவதால் பொருள் வயிற்பிரிவு நிலையாக அமைந்திருந்தது. வளமுடைய காவிரிப்பூம்பட்டினத்தை தருவதாக இருந்தாலும் தலைவியைப் பிரிந்து செல்லேன் என்ற தலைவன் பட்டினப்பாலையில் இடம் பெற்றுள்ளான். இருப்பினும் பொருள் தேடும் முயற்சியில் ஆடவர்கள் ஈடுபடுதல் இயல்பான ஒன்று.

**''இன்னாது ஆகிய காலை, பொருள் வயிற்**
**பிரியல் ஆடவர்க்கு இயல்பு''**[86]

**''செயல்படு மனத்தர் செய் பொருட்கு**
**அகல்வர் ஆடவர்''[87]**

**''வினையே ஆடவர்க்கு உயிரே''[88]**

**''அருள் அன்று ஆக, ஆள்வினை, ஆடவர் பொருள்''[89]**

**''உயிரினும் சிறந்த ஒண்பொருள் தருமார்**
**நன்றுபுரி காட்சியர் சென்றனர்''[90]**

என்றெல்லாம் சங்கப்பாடல்கள் பொருள் தேடல் குறித்துக் கூறுவனவற்றைக் காணலாம்.

**ஈதல் அறம்**

ஈதல் அறத்தைப் பொருள் பெற்றோர் யாவரும் கேட்பதற்கு முன்பே வழங்கினர். சான்றாக

**''இல்லது நோக்கி இளிவரவு கூறாமுன்**
**நல்லது வெஃகி, வினை செய்வார்''[91]**

**''துன் அருஞ் சிறப்பின் உயர்ந்த செல்வர்**
**இன்மையின் இரப்போர்க்கு ஈஇயாமையின்**
**தொன்மை மாக்களின் தொடர்பு அறியலரே''[92]**

இரப்பார்க்கு ஒன்று ஈயாது மறைத்தல் மிகவும் இழிவு தரும் செயலாகும்.

**''தொலைவு ஆகி, இரந்தோர்க்கு ஒன்று**
**ஈயாமை இழிவு''[93]**

**''இல், என இரந்தோர்க்கு ஒன்று ஈயாமை இழிவு''[94]**

**''இடன் இன்றி இரந்தோர்க்கு ஒன்று ஈயாமை இழிவு''[95]**

**''ஈ என இரத்தல் இழிந்தன்று ; அதன் எதிர்,**
**'ஈயேன்' என்றல் அதனினும் இழிந்தன்று''[96]**

**'''ஈ' என இரத்தலோ அரிதே''[97]**

என்று தனக்கு மிகவும் வேண்டியவர் என்றாலும் பொருள் வேண்டிப் பெறுவதற்குக் கூட நாணுவர். பொருள் வேண்டிப் பிறரை வாய்விட்டுக் கேட்கவும் தயக்கமுறுவர்.

**''செல்வம் கடைகொள, சாஅய் சான்றவர்**
**அல்லல் களைதக்க கேளிருழைச் சென்று,**
**சொல்லுதல் உற்று, உரைக்கல்லாதவர் போல**
**பல் ஊழ் பெயர்ந்து என்னை நோக்கும் ; மற்று யான் நோக்கின்**
**மெல்ல இறைஞ்சும் தலை''[98]**

யாசிப்பவன் சொல்லானது மிக எளிமைப்பட்டு பிறரால் இகழும் நிலையில் காணப்படும் என்பதனை

**''ஒன்று, இரப்பான் போல் எளிவந்தும் சொல்லும், உலகம்**
**புரப்பான் போல்வது ஓர் மதுகையும் உடையன''[99]**

**''ஈதலில் குறை காட்டாது, அறன் அறிந்து ஒழுகிய**
**தீதிலான் செல்வம்போல், தீம் கரை மரம் நந்த''[100]**

**''இரந்தோர்க்கு ஈயாது ஈட்டியோன் பொருள்போல்**
**பரந்து வெளிப்படாது ஆகி**
**வருந்தக தில்ல, யாய்ஓம்பிய நலனே''[101]**

போன்ற பாடங்களின் மூலம் அறிய முடிகிறது. தன்னிடம் வந்தார்க்கு இல்லையென்று மறுக்காது கொடுப்பது சிறந்த பண்புடைமையாகும்.

இத்தகைய உள்ளத்தை வானம்போல் பரந்த உள்ளம் என்று குறிப்பர். மறைக்காமல் பிறர்க்குக் கொடுப்பது சிறந்த பண்பாகும் என்பதனை,

**''சிறு மனை வாழ்க்கையின் ஒரீஇ, வருநர்க்கு**
**உதவி ஆற்றும் நண்பின்' பண்புடை**
**ஊழிற்றாக, நின் செய்கை ! விழவில்**
**கோடியர் நீர்மை போல முறைமுறை**
**ஆடுநர் கழியும் இவ் உலகத்து, கூடிய**
**நகைப்புறன் ஆக, நின் சுற்றம் !**
**இசைப்புறன் ஆக நீ ஓம்பிய பொருளே !''**[102]

என்ற குறிப்பால் உணர முடிகிறது. ஈதலில் ஈடுபடுவோர் பயன் கருதாமல் வழங்கு தலையன்றி வேறு எந்த வகைப் பயனையும் கருதிக் கொடுத்திடார். இதற்கு எடுத்துக்காட்டு

**''எத் துணை ஆயினும் ஈத்தல் நன்று' என,**
**மறுமை நோக்கின்றோ அன்றே,**
**பிறர் வறுமை நோக்கின்று, அவன் கை வண்மையே''**[103]

**''இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம் எனும்**
**அற விலை வணிகன் ஆஅய் அல்லன்''**[104]

என்று ஆய் மன்னனின் கொடைச் சிறப்பினை மோசிகீரனார் குறிப்பிடும் குறிப்பு.

அதியமான் நெடுமானஞ்சியைப் பாராட்டும் புலவர்,

**''ஒரு நாள் செல்லலம், இருநாள் செல்லலம் ;**
**பல நாள் பயின்று, பலரொடு செல்லினும்,**
**தலை நாள் போன்ற விருப்பினன் மாதோ''**[105]

என்றும் புகழப்படுதல் ஈகையின் சிறப்பை வெளிப்படுத்துகிறது. காரிக்கண்ணனார் பால் எப்போது சென்றாலும் எடுத்து வரையாது வழங்கியவன் பிட்டங்கொற்றன் என்பதை,

> **''இன்று செலினும் தருமே ; சிறு வரை**
> **நின்று செலினும் தருமே ; பின்னும்,**
> **'முன்னே தந்தனென்' என்னாது, துன்னி**
> **வைகலும் செலினும், பொய்யலன் ஆகி,**
> **யாம் வேண்டியாங்கு எம் வறுங் கலம் நிறைப்போன்''**[106]

என்றும் பாராட்டப்படுகிறார்.

### கொடைச்சிறப்பு

பரணர், கபிலர் போன்றோர் பாடல்களில் வரலாற்றுச் செய்திகள் நிரம்பவும் இடம் பெறும். பேகன் கொடை கொடுப்பதில் இணையற்றவன். அதனால் கொடை மடம் படுவோன் என்று புலவர்களால் பாராட்டப்பட்டான்.

> **''கொடைமடம் படுதல் அல்லது,**
> **படைமடம் படான், பிறர் படை மயக்குறினே''**[107]

என்பதிலிருந்து அறியலாம்.

### குமணன்

தம்பியால் நாடு கடத்தப்பட்டு காட்டில் வாழும் போதும் தன்னை நாடி வரும் புலவர் மற்றும் இரவலர்க்கு வரையாது வழங்க எண்ணுபவன். பெருந்தலைச் சாத்தனார் தன்னை நாடி வந்தபோது தன் தலையை வெட்டிச் சென்று தம்பியிடம் வேண்டும் பொருளைப் பெறுவாய் என்றார். இதனை

**“கேடு இல், நல் இசை வய மான் தோன்றலைப்**
**பாடி நின்றனெனாக, கொன்னே**
**பாடு பெறு பரிசிலன் வாடினன் பெயர்தல் என்**
**வாள் தந்தனனே, தலை எனக்கு ஈய,**
**தன்னின் சிறந்தது பிறிது ஒன்று இன்மையின் ;**
**ஆடு மலி உவகையொடு வருவல்,**
**ஓடாப் பூட்கை நின் கிழமையோற் கண்டே”**[108]

என்னும் பெருந்தலைச் சாத்தனார் கூற்றால் அறியலாம். ஈதலே ஒருவனுக்குப் புகழைத் தரும்.

**“விளங்கித் தோன்றுக அவன் கலங்கா நல்இசை !**
**யாமும் பிறரும் வாழ்த்த நாளும்**
**நிரைசால் நன்கலன் நல்கி,**
**உரைசெல்ச் சிறக்க, அவன் பாடல்சால் வளனே”**[109]

என்று விளக்குகிறது. மேம்பாடுடைய மக்கள் பெருமித மிக்க வாழ்வையே விரும்புவர். ஈதல் ஒருவனுக்குப் பெருமையும், புகழையும் கொடுக்கும். ஈதலோடு அறநிலை பிறழா நடுநிலையும், போர் வெற்றியும் ஒருவனது வாழ்க்கையில் பெருமிதத்தை உண்டாக்கும். கல்வி, வீரம், கொடை, புகழ் என்பனவே பெருமித வாழ்க்கைக்கு அடிப்படையாகும்.

**“கல்வி, தறுகண் புகழ்மை, கொடை எனச்**
**சொல்லப்பட்ட பெருமிதம் நான்கே”**[110]

என்பர் தொல்காப்பியர்.

ஒருவன் தன் வாழ்நாளில் புகழுக்கு ஏதுவான செயல்களையே செய்ய வேண்டும். அத்தகையோருடைய புகழ் நில்லா உலகில் என்றும் நிலைத்து நிற்கும் என்பதை,

**''மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்**
**தம்புகழ் நிறீஇத் தாம் மாய்ந்தனரே''**[111]

**''மாரி வானத்து மீன்நாப்பண்,**
**விரிகதிர வெண்திங்களின்**
**விளங்கித் தோன்றுக, அவன் கலங்கா நல் இசை''**[112]

கூறுவதிலிருந்து அறியலாம்.

**பகுத்து உண்ணல்**

கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி அரசனாகவும் புலவனாகவும் விளங்கியவர். அவனுடைய புறநானூற்றுப்பாடல் ஒன்றே இவ்வுலகம் யாரால் நிலைபெற்றிருக்கிறது என்பதற்கான விடையைத் தருகின்றது. சங்ககால மக்கள் புகழ் கிடைப்பதாயின் தம் உயிரையும் கொடுப்பர். பழியெனின் அதனால் உலகமே கிடைத்தாலும்

**''உண்டால் அம்ம, இவ் வுலகம் – இந்திரர்**
**அமிழ்தம் இயைவது ஆயினும் 'இனிது' எனத்**
**தமியர் உண்டலும் இலரே, முனிவு இலர் ;**
**துஞ்சலும் இலர் ; பிறர் அஞ்சுவது அஞ்சி,**
**புகழ் எனின் உயிரும் கொடுக்குவர், பழி எனின்,**
**உலகுடன் பெறினும், கொள்ளலர், அயர்விலர் ;**
**அன்ன மாட்சி அனையர் ஆகி''**[113]

ஒருவன் தன் வாழ்நாளில் நற்செயல்களைச் செய்து தீய செயல்களை விலக்குதல் வேண்டும். நன்மை செய்தால் நன்மையும், தீமை செய்தால் தீமையும் தொடரும்.

**''நல்லதன் நலனும் தீயதன் தீமையும்**
**இல்லை என்போர்க்கு இனன் ஆகிலியர் !''**[114]

தீமை செய்வார்க்குப் பல்வகையான துன்பங்கள் வரும். இதனை

**''வள்ளி கீழ் விழா ; வரைமிசைத் தேன் தொடா ;**
**கொல்லை குரல் வாங்கி ஈனா, மலை வாழ்நர்**
**அல்ல புரிந்து ஒழுகுலான்''**[115]

என்பதனால் அறியலாம்.

ஒருவனுக்கு நல்வினைதான் அவன் துன்பத்தில் உழலும் காலத்தில் கைகொடுத்து உதவும் என்பதனை

**''ஏற்ற பார்ப்பார்க்கு ஈர்ங்கை நிறையப்**
**பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து**
**பாசிழை மகளிர் பொலங்கலத்து ஏந்திய**
**நார் அரி தேறல் மாந்தி, மகிழ்சிறந்து**
**இரவலர்க்கு அருங்கலம் அருகாது வீசி,**
**வாழ்தல் வேண்டும், இவண் வரைந்த வைகல் ;**
**வாழச் செய்த நல்வினை அல்லது**
**ஆழுங் காலைப் புணை பிறிது இல்லை''**[116]

என்றும் நல்வினை செய்வார்க்கு வீட்டின்பம் கிடைப்பதற்கும் ஏதுவாக அமையும் என்பதனை

**''எழுமதி ; வாழ்க, நின் உள்ளம் ! அழிந்தோர்க்கு**
**ஏமம் ஆகும் நின்தாள் நிழல் மயங்காது**
**செய்தல் வேண்டுமால், நன்றே வானோர்**
**அரும்பெறல் உலகத்து ஆன்றவர்**
**விதுப்புறு விருப்பொடு விருந்து எதிர் கொளற்கே''**[117]

என்றும் கூறக் காணலாம்.

**நிலையாமை உணர்வு**

உலகிலுள்ள அனைத்துப் பொருள்களும் மாறும் இயல்பு கொண்டவை. செல்வம் நிலையாமை, யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை என்பதனை உணர்ந்திருந்தனர். சங்ககால மக்கள் பாண்டிய மன்னனுக்கு நிலையாமையை உணர்த்த மதுரைக் காஞ்சியே நூலாக அமைந்தது.

**''மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்**
**தம் புகழ் நிறீஇத் தாம் மாய்ந்தனரே ;''**[118]

என்றும்,

**''நில்லா உலகத்து நிலைமை தூக்கி''**[119]

என்றும்,

**''கோடியர் நீர்மை போல முறைமுறை**
**ஆடுநர் கழியும் இவ் உலகத்து''**[120]

என்றும் நம் இலக்கியங்கள் வழியே மக்கள் உணர்ந்தவர்களாய் விளங்கினர்.

செல்வமும், இளமையும் நிலையற்றவை. மூப்பும் மரணமும் உயிர்கள் அனைத்திற்கும் பொதுவானவை.

இதனை, நற்றிணை

**''வாழ் நாள் வகை அளவு அறிஞரும் இல்லை''**[121]

என்றும் கலித்தொகை

**''கடைநாள் இது என்று அறிந்தாரும் இல்லை''**[122]

**''வளியினும் வரைநில்லா வாழுநாள்''**[123]

**''நாற்றம் சால் நளி பொய்கை அடைமுதிர் முகையிற்குக்**
**கூற்று ஊழ் போல் குறைபடூஉம் வாழ்நாளும் நிலையுமோ''**[124]

என்றெல்லாம் குறிப்பிடுவதைக் காணலாம். கனவைப் போன்றது வாழ்நாள். இளமை நீங்கி மூப்பு வருதல் எல்லோர்க்கும் நிகழக் கூடியதே.

இளமையானது ஆற்றுநீர் போல் மிக மிக வேகமாக ஓடிப்போகும். இதனை

**''யாறு நீர் கழிந்தன்ன இளமை''**[125]

**''முகைவாய்த்த தடம் போலும் இளமையும் நிலையுமோ?''**[126]

என்றும்,

**''இளமையும் காமமும் நின்பாணி நில்லா**
**இடைமுலைக் கோதை குழைய முயங்கும்**
**முறைநாள் கழிதல் உறாஅமைக் காண்டை**
**கடைநாள் இது என்று அறிந்தாரும் இல்லை,**
**போற்றாய் ! பெரும நீ, காமம் புகர்பட**
**வேற்றுமைக் கொண்டு, பொருள் வயிற் போகுவாய் !**
**கூற்றமும் மூப்பும் மறந்தாரோடு ஓரா அங்கு**
**மாற்றுமைக் கொண்ட வழி''**[127]

என்றும் கூறுகிறது.

இளமை, இன்பம், வாழ்நாள் இவற்றின் அருமையை உணர்ந்து செய்யத்தக்க செயல்களை விரைந்து செய்ய வேண்டும்.

**மரணம்**

அனைவர்க்கும் பொதுவானது மரணம். உலகம் அனைத்தும் கட்டிக் காக்கும் மன்னர்க்கும் மரணம் நிச்சயம். உயிரை நிலையாகப் பெறுதல் என்பது இயலாத செயலாகும்.

**செல்வம்**

ஓரிடத்தில் நிலைத்து நிற்காது ; மாறிக்கொண்டே வரும். இதனை

**"............................ பொருளே,**
**வாடாப் பூவின் பொய்கை நாப்பண்**
**ஓடுமீன் வழியின் கெடுவ, யாளே"**[128]

**"'கிழவர் இன்னோர்' என்னாது, பொருள்தான்,**
**பழவினை மருங்கின் பெயர்பு உறையும்"**[129]

என்று குறிப்பதிலிருந்து உணரமுடியும்.

செல்வம் பெற்றதனால் ஆய பெரும்பயனை அடைந்து அறநிலை மாறாது வாழ்ந்தார்கள் சங்ககால மக்கள் செல்வமும் கூட நிலைத்து நிற்காது போய்விடும் என்கின்றனர் புலவர் பெருமக்கள்.

**தொகுப்புரை**

சங்க காலத்தில் மக்கள் மன்னனை இறையெனப் போற்றினர். மன்னனும் குடிமக்களைத் தீங்கின்றிக் காத்தான். மன்னர்கள் புலவர்களால் பாடப்படுவதனைப் பெருஞ்சிறப்பாகக் கொண்டனர்.

மக்கள் நல்லன செய்து அல்லனவற்றை ஒதுக்கினர். அறம், பொருள், இன்பம் மூன்றும் அடிப்படை வாழ்க்கைக்குத் தேவையென்று கருதப்பட்டது. மனையறம் போற்றினர். காதலின் தூய்மையை ஆடவர் மகளிர் உணர்ந்திருந்தனர்.

மணவாழ்க்கையில் ஈடுபட்டு, மக்கட் செல்வங்களைப் பெற்று குடிப்பெருமையை மேம்படச் செய்தனர். வளமை, அன்பு, நட்பு, இவற்றைப்

போற்றினர். சான்றோர் பெருமக்கள் மதிக்கப்பட்டனர். அடக்கம், இன்சொல், நன்றி மறவாமை இவற்றை நெறியாகக் கொண்டு வறுமையில் செம்மையான வாழ்க்கை நடத்தினர்.

ஈதல், கொடைச் சிறப்பு, இப்பண்புகள் மன்னர்களிடம் சிறப்புற்றிந்தமையைப் புலவர்கள் போற்றிப் புகழ்மாலை சூட்டினர்.

பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பி, நிலையாமையை உணர்ந்து செல்வத்துப் பயனே ஈதல் என்பதனை அடிப்படை அறமாகக் கொண்டனர்.

மக்கள் அனைத்து நிலைகளிலும் மேம்பாடுடையவர்களாக, மனிதநேயம் மிக்கவர்களாக விளங்கி உலகிற்கே தமிழரின் தன்மான உணர்வையும், கொடைச் சிறப்பையும், இல்லறப் பண்பையும் எடுத்துரைக்கும் தூதுவர்களாயினர்.

# சான்றெண் விளக்கம்

1. புறநானூறு, பா. எண்.9.
2. மேலது, பா. எண்.214, 5-7 வரிகள்.
3. புறநானூறு, பா. எண்.237, 16-17 வரிகள்.
4. கலித்தொகை, பா. எண்.11, 1-5 வரிகள்.
5. அகநானூறு, பா. எண்.339, 12-14 வரிகள்.
6. திருக்குறள். பா. எண்.1151.
7. மேலது, பா. எண்.1315.
8. கலித்தொகை, பா. எண்.18, 7-12 வரிகள்.
9. அகநானூறு, பா. எண்.361, 4-7 வரிகள்.
10. நற்றிணை, பா. எண்.397, 7-9 வரிகள்.
11. குறுந்தொகை, பா. எண்.49, 3-5 வரிகள்.
12. அகநானூறு, பா. எண்.305, 5-8 வரிகள்.
13. குறுந்தொகை, பா. எண்.3.
14. டாக்டர் வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், முன்னுரைப்பகுதி.
15. அகநானூறு, பா. எண்.332, 12-15 வரிகள்.
16. தொல்காப்பியம், பொருளதிகாரம் களவு இயல் உரை ப.161, நூற்பா 25.
17. மேலது, நூற்பா 26.
18. குறுந்தொகை பா. எண்.51.
19. குறிஞ்சிப்பாட்டு, 231-233 வரிகள்.
20. புறநானூறு, பா. எண்.188.

21. அகநானூறு, பா. எண்.184, 1-4 வரிகள்.
22. அகநானூறு, பா. எண்.66, 1-6 வரிகள்.
23. கலித்தொகை, பா. எண்.80, 10-16 வரிகள்.
24. புறநானூறு, பா. எண்.92, 1-3 வரிகள்.
25. தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல் நூற்பா 6.
26. அகநானூறு, பா. எண்.352, 7-9 வரிகள்.
27. புறநானூறு, பா. எண்.27, 1-6 வரிகள்.
28. புறநானூறு, பா. எண்.43, 1-8 வரிகள்.
29. மேலது, பா. எண்.201, 1-6 வரிகள்.
30. மேலது, பா. எண்.28, 1-6 வரிகள்.
31. நற்றிணை, பா. எண்.126, 8-10 வரிகள்.
32. குறுந்தொகை, பா. எண்.40.
33. மேலது, பா. எண்.218, 5-6 வரிகள்.
34. மேலது, பா. எண்.85, 1வது வரி.
35. புறநானூறு, பா. எண்.216.
36. மேலது, பா. எண்.175, 1-5 வரிகள்.
37. குறுந்தொகை, பா. எண்.313, 4-5 வரிகள்.
38. ஐங்குறுநூறு, பா. எண்.184, 4வது வரி.
39. நற்றிணை, பாடல் எண்.109, 1வது வரி.
40. குறுந்தொகை, பா. எண்.2, 3வது வரி.
41. அகநானூறு, பா. எண்.205, 1-2 வரிகள்.
42. மேலது, பா. எண்.12, 5வது வரி.

43. குறுந்தொகை, பா. எண்.300, 7-8 வரிகள்.

44. கலித்தொகை, பா. எண்.25, 19-20 வரிகள்.

45. நற்றிணை, பா.எண்.315, 9வது வரி.

46. மேலது, பா. எண்.108, 6வது வரி.

47. மேலது, பா. எண்.32, 8-9 வரிகள்.

48. சிறுபாணாற்றுப்படை, 104-105 வரிகள்.

49. மதுரைக் காஞ்சி, 131 வரி.

50. நற்றிணை, பா. எண்.355, 6-7 வரிகள்.

51. திருக்குறள், எண்.80.

52. புறநானூறு, பா. எண்.190.

53. மேலது, பா. எண்.218.

54. புறநானூறு, பா. எண்.182, 5-6 வரிகள்.

55. நற்றிணை, பா. எண்.233, 8வது வரி.

56. மேலது, பா. எண்.327, 5வது வரி.

57. மேலது, பா. எண்.116, 1-2 வரிகள்.

58. மேலது, பா.எண்.72, 1-2 வரிகள்.

59. குறுந்தொகை, பா. எண்.252, 6-8 வரிகள்.

60. பதிற்றுப்பத்து, பா. எண்.72, 4-6 வரிகள்.

61. மேலது, பா. எண்.70, 19-21 வரிகள்.

62. மேலது, பா. எண்.79, 3வது வரி.

63. மதுரைக்காஞ்சி, 192-194 வரிகள்.

64. தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், நூற்பா 5.

65. குறிஞ்சிப்பாட்டு, 13-18 வரிகள்.

66. கலித்தொகை, பா.எண். 133, 6-14 வரிகள்.

67. மேலது, பா. எண்.32, 8வது வரி.

68. பதிற்றுப்பத்து, பா. எண்.15, 29வது வரி.

69. மதுரைக்காஞ்சி, 19-20 வரிகள்.

70. நற்றிணை, பா. எண்.283, 6-8 வரிகள்.

71. மேலது, பா. எண்.1, 1வது வரி.

72. மேலது, பா. எண்.289, 2-3 வரிகள்.

73. பதிற்றுப்பத்து, பா. எண்.18, 11-12 வரிகள்.

74. மேலது, பா. எண்.63, 6-7 வரிகள்.

75. மேலது, பா. எண்.70, 12வது வரி.

76. அகநானூறு, பா. எண்.349, 3-4 வரிகள்.

77. நற்றிணை, பா. எண்.28, 3-4 வரிகள்.

78. புறநானூறு, பா. எண்.34, 5-7 வரிகள்.

79. குறுந்தொகை, பா. எண்.115, 1வது வரி.

80. கலித்தொகை, பா. எண்.34, 4-5 வரிகள்.

81. மேலது, பா. எண்.149, 7-8 வரிகள்.

82. மேலது, பா. எண்.10, 1வது வரி.

83. குறுந்தொகை, பா. எண்.295, 4வது வரி.

84. மேலது, பா. எண்.283, 1-2 வரிகள்.

85. மேலது, பா. எண்.63, 1வது வரி.

86. நற்றிணை, பா. எண்.243, 9-10 வரிகள்.

87. மேலது, பா. எண்.24, 8-9 வரிகள்.

88. குறுந்தொகை, பா. எண்.135, 1வது வரி.

89. அகநானூறு, பா. எண்.75, 1வது வரி.

90. மேலது, பா. எண்.245, 1-2 வரிகள்.

91. பரிபாடல், பா. எண்.10, 87-88 வரிகள்.

92. புறநானூறு, பா. எண்.165, 3-5 வரிகள்.

93. கலித்தொகை, பா. எண்.2, 11 வரி.

94. மேலது, பா. எண்.2, 15 வரி.

95. மேலது, பா. எண்.2, 19 வரி.

96. புறநானூறு, பா. எண்.204, 1-2 வரிகள்.

97. மேலது, பா. எண்.154, 8வது வரி.

98. கலித்தொகை, பா. எண்.61, 2-10 வரிகள்.

99. மேலது, பா. எண்.47, 1-2 வரிகள்.

100. மேலது, பா. எண்.27, 1-2 வரிகள்.

101. அகநானூறு, பா. எண்.276, 13-15 வரிகள்.

102. புறநானூறு, பா. எண்.29, 20-26 வரிகள்.

103. மேலது, பா. எண்.141, 13-15 வரிகள்.

104. மேலது, பா. எண்.134, 1-2 வரிகள்.

105. மேலது, பா. எண்.101, 1-3 வரிகள்.

106. மேலது, பா. எண்.171, 1-5 வரிகள்.

107. மேலது, பா. எண்.142, 5-6 வரிகள்.

108. மேலது, பா. எண்.165, 8-15 வரிகள்.

109. மேலது, பா. எண்.396, 28-31 வரிகள்.

110. தொல்காப்பியம், பொருளதிகாரம், மெய்ப்பாட்டியல் நூற்பா 9.

111. புறநானூறு, பா. எண்.165, 1-2 வரிகள்.

112. மேலது, பா. எண்.396, 26-28 வரிகள்.

113. மேலது, பா. எண்.182, 1-7 வரிகள்.

114. மேலது, பா. எண்.29, 11-12 வரிகள்.

115. கலித்தொகை, பா. எண்.39, 12-14 வரிகள்.

116. புறநானூறு, பா. எண்.367.

117. மேலது, பா. எண்.213, 4-11 வரிகள்.

118. மேலது, பா. எண்.165, 1-2 வரிகள்.

119. பொருநராற்றுப்படை, 176 வரி.

120. புறநானூறு, பா. எண்.29, 23-24 வரிகள்.

121. நற்றிணை, பா. எண்.314, 2வது வரி.

122. கலித்தொகை, பா. எண்.12, 15வது வரி.

123. மேலது, பா. எண்.20, 9வது வரி.

124. மேலது, பா. எண்.17, 11-12 வரிகள்.

125. மேலது, பா. எண்.20, 13வது வரி.

126. மேலது, பா. எண்.17, 16வது வரி.

127. மேலது, பாடல் எண்.12, 12-19 வரிகள்.

128. நற்றிணை, பா. எண்.16, 4-6 வரிகள்.

129. கலித்தொகை, பா. எண்.21, 10-11 வரிகள்.

# துணை நூற்பட்டியல்

## முதன்மை நூல்கள்

### சென்னை நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் வெளியிட்ட சங்கத் தொகுதிகள்

1. நற்றிணை (மூலமும் உரையும்)
உரையாசிரியர் : முனைவர் கு.வெ. பாலசுப்பிரமணியன்
தலைமைப் பதிப்பாசிரியர்கள் : முனைவர் அ.மா. பரிமளம்
முனைவர் கு.வெ. பாலசுப்பிரமணியன்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.
பதிப்பு : ஏப்ரல் 2004, 3ம் பதிப்பு பிப்ரவரி 2007
அச்சிட்டோர் : எம்.கே. எண்டர்பிரைசஸ்

2. குறுந்தொகை : தொகுதி - 1, தொகுதி - 2.
உரையாசிரியர் : முனைவர் வி. நாகராசன்
தலைமைப் பதிப்பாசிரியர்கள் : முனைவர் அ.மா. பரிமளம்
முனைவர் கு.வெ. பாலசுப்பிரமணியன்
குறுந்தொகை : தொகுதி - 2

3. ஐங்குறுநூறு : தொகுதி - 1
உரையாசிரியர் : முனைவர் அ. தட்சிணாமூர்த்தி
தலைமைப் பதிப்பாசிரியர்கள் : முனைவர் அ.மா. பரிமளம்
முனைவர் கு.வெ. பாலசுப்பிரமணியன்
ஐங்குறுநூறு : தொகுதி - 1, தொகுதி - 2

4. பதிற்றுப்பத்து :
உரையாசிரியர் : முனைவர் அ. ஆலிஸ்
தலைமைப் பதிப்பாசிரியர்கள் : முனைவர் அ.மா. பரிமளம்
முனைவர் கு.வெ. பாலசுப்பிரமணியன்

5. பரிபாடல் :

உரையாசிரியர்கள் : முனைவர் பெ. சுப்பிரமணியன்,
முனைவர் கு.வெ.பாலசுப்பிரமணியன்,
முனைவர் அ. தட்சிணாமூர்த்தி

தலைமைப் பதிப்பாசிரியர்கள் : முனைவர் அ.மா. பரிமளம்
முனைவர் கு.வெ. பாலசுப்பிரமணியன்

6. கலித்தொகை :

உரையாசிரியர் : முனைவர் அ. விசுவநாதன்

தலைமைப் பதிப்பாசிரியர்கள் : முனைவர் அ.மா. பரிமளம்
முனைவர் கு.வெ. பாலசுப்பிரமணியன்

7. அகநானூறு : தொகுதி - 1, தொகுதி - 2

உரையாசிரியர் : முனைவர் இரா. செயபால்

தலைமைப் பதிப்பாசிரியர்கள் : முனைவர் அ.மா. பரிமளம்
முனைவர் கு.வெ. பாலசுப்பிரமணியன்

8. புறநானூறு : தொகுதி - 1, தொகுதி - 2

உரையாசிரியர்கள் : முனைவர் கு.வெ. பாலசுப்பிரமணியன்
முனைவர் அ. விசுவநாதன், முனைவர் வி. நாகராசன்
முனைவர் இரா. ஆரோக்கியசாமி
முனைவர் சு. திலகவதி
முனைவர் வெ. சத்திய நாராயணன்

தலைமைப் பதிப்பாசிரியர்கள் : முனைவர் அ.மா. பரிமளம்
முனைவர் கு.வெ. பாலசுப்பிரமணியன்

9. பத்துப்பாட்டு :

உரையாசிரியர் : முனைவர் இரா. மோகன்

தலைமைப் பதிப்பாசிரியர்கள் : முனைவர் அ.மா. பரிமளம்
முனைவர் கு.வெ. பாலசுப்பிரமணியன்

பத்துப்பாட்டு : தொகுதி - 1, தொகுதி - 2

உரையாசிரியர் : வி. நாகராசன்

தலைமைப் பதிப்பாசிரியர்கள் : முனைவர் அ.மா. பரிமளம்
முனைவர் கு.வெ. பாலசுப்பிரமணியன்

**பார்வை நூல்கள்**


| | |
|---|---|
| அன்னி தாமசு | தமிழர் சமூகவியல், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை. |
| இராகவையங்கார் | குறுந்தொகை விளக்கம், தமிழ்ப்பண்ணை, சென்னை, 1987. |
| இராசமாணிக்கனார், மா. | பத்துப்பாட்டு ஆராய்ச்சி, சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு. |
| இராமநாதன் செட்டியார், லெ.ப.கரு. | பத்துப்பாட்டு வளம், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1975. |
| கலைக்களஞ்சியம் | தொகுதி 4,6 தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை. |
| கம்பராமாயணம் | அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு, 1975. |
| காந்தி. கா., | தமிழர் பழக்க வழக்கங்களும், நம்பிக்கைகளும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1981. |
| குருசாமி. ம.ரா.போ. | கபிலர், முதற்பதிப்பு, கோவை. |
| கொங்கு வேளிர் | பெருங்கதை, கழக வெளியீடு, சென்னை, 1992. |
| சங்ககால மன்னர் வரலாறு | தமிழ்ப்பண்ணை, சென்னை, 1980. |
| சண்முகம் பிள்ளை மு., | சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2004. |
| சந்திரன், ஜெ. ஸ்ரீ | தமிழிலக்கிய வரலாறு, வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 2005. |
| சாமி சிதம்பரனார் | பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும், மணிவாசகர் பதிப்பகம், முதல் பதிப்பு, சென்னை, 2000. |

| | |
|---|---|
| சாமி சிதம்பரனார் | பத்துப் பாட்டும் பண்டைத் தமிழரும், அறிவுப் பதிப்பகம், இரண்டாம் பதிப்பு, சென்னை, 2006. |
| புலியூர் கேசி | சிலப்பதிகாரம், கழக வெளியீடு, சென்னை, 1982. |
| சாமிநாத அய்யர். உ.வே. | ஐங்குறு நூறு மூலமும் பழைய உரையும் அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு, 1975. |
| சீனிவேங்கடசாமி மயிலை | பழந்தமிழர் வாணிபம், தேவராஜ் பதிப்பகம், சென்னை, 2008. |
| சுப்பிரமணியன், சு. | சங்க இலக்கியம் சில பார்வைகள், பாரி நிலையம், சென்னை, 2008. |
| செல்வம், வே.தி. | தமிழக வரலாறும் பண்பாடும், அறிவொளிப் பதிப்பகம், 1999. |
| பரிமேலழகர் | திருக்குறள், வானதி பதிப்பகம், சென்னை, 2006. |
| திருமதி ஜெயம் | தமிழிலக்கிய வரலாறு, ஜனகா பதிப்பகம், சென்னை, 2005. |
| தொண்டை மண்டல சதகம் | சீதா பதிப்பகம், சென்னை, 2008. |
| தொல்காப்பியம் | கழக வெளியீடு, சென்னை, 1982. |
| தாயம்மாள் அறவாணன் | மகடூஉ முன்னிலை, சென்னை. |
| தட்சணாமூர்ததி. அ. | தமிழர் நாகரிகமும் பண்பாடும், ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 1979. |
| நடேச சர்மா, E.K. | நற்றிணைச் சொற்பொழிவுகள், கழக வெளியீடு, சென்னை, 1992. |
| நாராயண வேலுப்பிள்ளை, எம். | பொருநராற்றுப்படை உரை கழக வெளியீடு, சென்னை, 1993. |

| | |
|---|---|
| நாராயண வேலுப்பிள்ளை, எம்., | பெரும்பாணாற்றுப்படை உரை, கழக வெளியீடு, சென்னை, 1993. |
| பஞ்சாங்கம், க., | சங்க இலக்கியம்......., சென்னை, 1992. |
| பதார்த்தகுண சிந்தாமணி | கழக வெளியீடு, சென்னை, 1981. |
| பத்துப்பாட்டு | (நச்சினார்க்கினியர் முகவுரை) கழக வெளியீடு, சென்னை, 1992. |
| பாலசுப்பிரமணியன், சி. | பாட்டும் தொகையும் ஓர் அறிமுகம், பாரி நிலையம், சென்னை, 1982. |
| பாலசுப்பிரமணியன், சி. | தமிழ் இலக்கிய வரலாறு, பாரி நிலையம், சென்னை, 1987. |
| பாலசுப்பிரமணியன். சி. | கட்டுரைவளம், பாரிநிலையம், சென்னை, 1975. |
| பாரதியார் கவிதைகள் | திருமகள் பதிப்பகம், சென்னை, 1982. |
| பிள்ளை கே.கே. | தமிழக வரலாறு, மக்களும் பண்பாடும் (மறுபதிப்பு) கழக வெளியீடு, சென்னை, 1995. |
| மணிமேகலை | கழக வெளியீடு, சென்னை, 1992. |
| மாணிக்கம், வ.சுப. | தமிழ்க்காதல், சாரதா பதிப்பகம், இராயப்பேட்டை, சென்னை, 2007. |
| மறைமலையடிகள் | முல்லைப்பாட்டு ஆராய்ச்சி, கழக வெளியீடு, சென்னை, 1992. |
| மைதிலிவளவன் | வாணிபம், 7/33 அடுக்ககம், சாந்தி காலனி, சென்னை, 1998. |
| வரதராசனார் மு. | எட்டுத்தொகைச் செல்வம், பாரி நிலையம், சென்னை, 1976. |
| வரதராசனார் மு. | தமிழ் இலக்கிய வரலாறு, சாகித்ய அகாடெமி வெளியீடு. |
| வையாபுரிப் பிள்ளை | இலக்கிய மணிமாலை, தமிழ்ப்பண்ணை, சென்னை, 1973. |

**அகராதி, கலைக்களஞ்சியம், நிகண்டு**

1. கலைக்களஞ்சியம், தொகுதி 4,6 தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை.

2. கலைக்களஞ்சியம், தொகுதி 5,6 தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு, 1958.

3. திவாகரநிகண்டு, கழக வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு, 1958.

4. மதுரைத் தமிழ் பேரகராதி, மதுரைக் காமராசர் பல்கலைக்கழக வெளியீடு, இரண்டாம் பதிப்பு, 1956.

MCL
PT - 290

# ‘சங்க இலக்கியத்தில் வாழ்வியல் சிந்தனைகள்’

**சென்னைப் பல்கலைக் கழக**
**முனைவர் (பிஎச்.டி.) பட்டப்பேற்றிற்காக**
**அளிக்கப்பெறும் ஆய்வேடு**


**அ. ஐயப்பன்,** எம்.ஏ.,எம்.ஃபில்.,பி.எட்.
முழுநேர ஆய்வாளர்
தமிழ்த்துறை
மாநிலக் கல்லூரி
(தன்னாட்சி)
சென்னை - 600 005


***நெறியாளர்***


**முனைவர் வீ. அசோகன்,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.
இணைப்பேராசிரியர்
தமிழ்த்துறை
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை - 600 005






**தமிழ்த்துறை**
**மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)**
**சென்னை - 5.**

**ஜுன் 2011**

# நிறைவுரை

சங்ககாலம் தமிழர்களின் பொற்காலம். வாழ்வாங்கு வாழந்து நாகரிகத்தையும் பண்பாட்டையும் பெரிதும் போற்றி வளர்த்த மக்களின்வளமார்ந்த காலம். முடியடை வேந்தர்களால் ஆளப்பட்ட நிலையில் மன்னர்கள் நீதி வழுவாது செந்நெறியில் நின்று குடிகளைக் காத்த காலம். மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம் என்று மன்னனை மக்கள் இறையாகப் போற்றிய காலம்.

மக்கள் நிலத்தின் அடிப்படையில் வாழ்ந்து தாங்கள் உழுது விளைவித்து தாமும் உண்டு பிறர்க்கும் கொடுத்து விருந்தோம்பினர். சுற்றத்தழுவி அறத்தின் வழியே பொருளை ஈட்டிய இன்பம் எய்தினர். காதலர்களாக தோழி, பாங்கன் வழியேயும், தாமே அன்பு நிலையில் எதிர்பட்டும் களவு மணம் பூண்ட நிலையிலும், காதலால் மழலையரைப் பெற்று வீட்டையும், நாட்டையும் போற்றினர்.

மக்கள் அரசாங்கத்திற்கு முறையாக வரி செலுத்தினர். குடவோலை முறையால் தேர்வு செய்தனர். ஐம்பெருங்குழு, எண் பேராயம் போன்றவற்றின் துணையோடு குடிகளை மன்னர்கள் காத்தனர்.

இரவலர்களும், புலவர்களும் தம்முடைய இசைப்பாடல் திறமையால் விறலியர் சூழ மன்னனை வாழ்த்திப் பொருளைப் பெற்று, தான் பெற்ற பொருளைத் தமக்கு மட்டும் கொள்ளாமல் எல்லோர்க்கும் கொடுத்து மகிழ்வான வாழ்க்கை வாழ்ந்தனர்.

**சங்ககால மக்கள்**

1. இல்லறத்திலிருந்து விருந்தோம்பலில் சிறந்து அறத்தோடு கூடிய வாழ்க்கை நடத்தி தான் பெற்ற பொருளை பிறர்க்கும் கொடுத்து தானும் மகிழ்ந்தனர். மக்கள் தெய்வ நம்பிக்கை மிக்கவர்களாக மன்னனின் மாட்சிமைக்குக் கட்டுப்பட்டு குடவோலைத் தேர்தல் மூலம் ஆட்சி அதிகாரம் அமையப் பாடுபட்டார்கள்.

ஆடவர்கள் தாங்கள் செய்த தொழிலமைப்பால் கொல்லர், தச்சர், கருமார், பொற்கொல்லர், வணிகர் என்ற நிலையில் தங்கள் கடமையான தொழில்களைச் செய்து வருவாய் ஈட்டினர்.

மகளிர் பால், வெண்ணெய், மோர், தயிர் போன்றவற்றை விற்றும், ஆடு மாடுகளை மேய்த்தும் குடும்ப வருவாய்க்குத் துணை செய்தனர். ஆடவரும் மகளிரும் ஒத்த தலைவனும், தலைவியும் இயற்கைப் புணர்ச்சியில் ஈடுபட்டு பொருள் தேடி, பொருளைப் பெற்று தலைவியோடு கற்பொழுக்கம் பூண்டனர். சிலர் பரத்தமை ஒழுக்கம் பூண்டமையால் தலைவி ஊடலுக்கு ஆட்பட்டு பின்னர் அன்பால் இல்லறத்தில் ஈடுபட்டனர்.

மகளிர் இல்லறக் கடமைகளைச் செய்து ஆடவர்கள் போன்று வீரமும் பெற்று போர் என்றால் தன் வீட்டார் அனைவரும் செருமுகம் செல்வதில் இன்பம் கண்டனர்.

**சங்ககால மன்னர்கள்**

1. குடிமக்களைக் காத்தலில் காவலனாய், நல்ல பாதுகாவலனாய் விளங்கினர். புலவர்களைப் போற்றி மகிழ்ந்தனர். தான் நீண்ட நாள்

வாழ்வதைவிட புலவர் வாழ்ந்தால் போதும். மேலும் பல பாடல்கள் அருந்தமிழுக்குக் கிடைக்குமெனக் கருதி அரிதின் கிட்டிய நெல்லிக் கனியையும் புலவர்க்குத் கொடுத்து மகிழ்ந்தனர்.

2. காட்டில் வாழ்ந்த மறைவான வாழ்க்கையின்போது தன்னைக் காண வந்த புலவர்க்குத் தன் தலையை வெட்டிச் சென்று பரிசு பெற வாய்ப்பளித்தனர்.

3. தன்னை அடைக்கலமாக வந்த புறாவுக்காகத் தானே துலாக்கோலில் ஏறி புறாவுக்கு அடைக்கலம் தந்தவர்.

4. கன்றை இழந்த பசுவிற்காகத் தன் ஒரே மகன் என்றும் பாராமல் தேர்க்காலில் இட்டு பசுவின் துயரைத் துடைத்தனர்.

5. 'குன்றா' என்னும் மலை மீது ஏற கண்ணுக்கு எட்டிய தூரம் வரை புலவர்க்குப் பரிசாகத் தந்தனர்.

6. அஃறிணையாகிய முல்லைக் கொடி கேட்காமலேயே தான் ஏறி வந்த தேரையே வழங்கினர்.

7. அறியாமல் கணவன் வீட்டிலிருக்க அவன் இல்லையெனக் கதவைத் தட்டிய குற்றத்திற்காக தன் கையையே வெட்டித் தண்டனைக்குத் தன்னை உட்படுத்திக் கொண்டனர்.

8. 'அந்தனர், பசுக்கள், பெண்கள், பிணியுடையோர் அப்பாற் செல்க' என முரசறிந்து இரு மன்னர்கள் நேருக்கு நேர் போர் புரிந்தனர். இரவு நேரத் தாக்குதலின்றி பாசறை அமைத்து அடுத்த நாள் போரில் வெல்வது குறித்த சிந்தனை கொண்டிருந்தனர்.

9. புலவர்கள் தன்னைப் பாடி வந்தபோது இரவலர்க்கு முந்நூறு ஊர்களையும் பரிசிலாகத் தந்தனர்.

10. குளிரால் நடுங்குகிறது எனக் கருதி தன்னுடைய போர்வையை மயிலுக்குப் போற்றி மகிழ்ந்தனர்.

ஒருநாள் சென்றாலும், பலநாள் சென்றாலும், பல ரோடு சென்றாலும் தலைநகர் போன்று பரிசுகளை இரவலர்க்கு வழங்கினர். ஒரு வேளை உணவுக்காக இரந்து சென்றவர்க்கும் யானையையே பரிசாகத் தந்தனர்.

**புலவர்கள்**

1. வள்ளல்களையும், மன்னர்களையும் சீறியாழ், பேரியாழ் போன்ற இசைக்கருவிகள் கொண்டு மகிழ்வித்து பொருளைப் பரிசாகப் பெற்றனர். தான் பெற்று வந்த பொருளை மனைவியிடம் தந்து எல்லோர்க்கும் கொடுத்து மகிழ்ந்தமையால் யாண்டும் நரை, திரை தோன்றாத திடத்தைப் பெற்றனர்.

2. நெடுங்கிள்ளி - நலங்கிள்ளி இடையே நடக்க இருந்த போரைத் தடுத்தார்கள்.

3. தொண்டைமானுக்கும், அதியமானுக்கும் இடையே நடைபெற இருந்த போரைத் தடுத்து நாட்டில் அமைதி காண வழிகண்டனர்.

4. ‘புலமைச் சிறப்பால் எத்திசை செல்லினும் அத்திசை சோறே’ என்று மன்னர்களைப் பாடிச் சென்று பொருள் பெற்று தான் பெற்ற பொருளின் சிறப்புகளை எடுத்துரைத்து தங்களைப் போன்ற புலவர் பெருமக்களை அவ்வள்ளல்கள் பால் ஆற்றுப்படுத்தினர்.

5. இறைக்கொள்கையால் முருகனிடம் ஆற்றுப்படுத்தினர். திருமாலையும், முருகனையும், வையை நதியையும் பல்வேறு சிறப்புகளையும் போற்றி புலமையால் வளமான தமிழை வளர்த்து தமிழ்ச்சங்கம் காண்பதற்கு துணை நின்றனர்.

6. பைந்தமிழ்ப் புலவனின் பாட்டுக்கு இறைவனையே பாய் சுருட்டிக் கொள்ளுமாறும், பாய் படுத்துக் கொள்ளுமாறும் ஆணையிட்டனர்.

7. புலவர்கள் தம்மைப் பாடுதலையே மன்னர்கள் பெறுவதற்கரிய பரிசாகக் கொண்டார்கள். புலமைக்காக கவரி வீசி புலவர்க்கு நீண்ட உறக்கம் காண வழிவகை கண்டனர்.

**சங்ககால மகளிர்**

1. ஒப்பனைக் கலையிலும், சீர்மிகு ஆடைகள், அணிகலன்கள், நறுமணப் பொருட்கள் ஆகியவற்றைக் கொண்டு தங்களை அழகுபடுத்தும் கலையில் தேர்ச்சி பெற்றிருந்தனர்.

2. இலவங்கம், பட்டை, மிளகு, சீரகம், வசம்பு, மஞ்சள், சந்தனம் போன்ற மணப்பொருட்களை மணப்பொருளாகவும், மருந்துப் பொருளாகவும், சமையல் பொருட்களாகவும் பயன்படுத்தும் திறம் பெற்றவர்களாய் விளங்கினர்.

3. தம் கூந்தலை நறுமணப்பொருட்களால் அலங்காரம் செய்து நறுமணம் மிக்க மலர்களைத் தொடுத்து மாலையாகக் கட்டியும், கூந்தலில் அணிந்தும் மகிழ்ந்தனர்.

4. தலைவனின் பிரிவின்போது பூக்களைச் சூடாது; தங்களை அழகுபடுத்திக் கொள்ளாத பிரிவுத் துயரில் தன்னை இணைத்தும் கொண்டனர்.

5. இல்லறக் கடமைகளை ஆற்றி, கொண்டவனின் குறிப்பறிந்து, முதியோர்களைப் போற்றி தெய்வ நம்பிக்கையுடன் இறைவழிபாடி நெல்லையும், மலரையும் தூவி இறைவழிபாடு செய்தனர்.

6. தலைவனின் வருகையை விரிச்சி கேட்டல் வழியே அறிந்தனர்.

7. பிரிவால் வாடிய போதும் தன் துயரை ஆற்றியிருந்தனர். தலைவன் வருகையால் கூடி இன்புற்றனர்.

8. தலைவனின் புறவொழுக்கத்தைக் கடிந்தனர்.

**சங்ககால மக்களின் சமுதாயச் சூழல்**

1. முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்னும் நானில மக்களும் தங்களின் தொழிலமைப்பு, நிலத் தன்மைக்கேற்ற வகையில் விளை பொருட்களை உருவாக்கினர்.

2. மிகுதியான விளைந்த விளைபொருட்களைத் தங்கள் தேவைகளுக்கு மிகுதியாக உருவாக்கிய பொருட்களைப் பண்டமாற்று விலையில் பொருட்களைக் கொடுத்துத் தங்களுக்குத் தேவையான பொருட்களைப் பெற்றுக் கொண்டனர்.

சமுதாயத்தில் அமைதியும், ஒற்றுமையும் பண்டிகை, திருமணம், விழாக்காலங்களில் நிலவியது. போர் என்றால் நாடு காக்கும் பணிகளில்

தங்களை முழுமையான ஈடுபடுத்திக் கொண்டார்கள். புலவர்களைப் புரவலர்கள் போற்றினர். சங்கம் வைத்து மன்னர்கள் தமிழைப் போற்றினர்.

## ஆய்வுப் பயன்கள்

1. சங்ககாலம் வீரமும், ஈரமும் விளைந்த காலமாக விளங்கியது. மக்கள் தங்கள் குடும்ப, சமுதாய ஒழுங்கு முறைகளைப் பேணிக் காக்கும் திறன் பெற்றவர்களாய் விளங்கினர்.

2. காதலால் அன்புடைய பெருமக்கள் இணைந்து இல்லறம் நல்லறமாக்கிட கனவு கண்டனர். பொருள் தேடிப் பெண்ணை மணம் முடிக்கும் நிலையிருந்தது. திருமணச் சடங்குகள் மங்கல மகளிரால் நிகழ்த்தப்பட்டது. இல்லறக் கடமைகளைத் தலைவன், தலைவி போற்றினர்.

3. குடிமக்கள் செய்யும் தொழில்களைச் சார்ந்த நிலையில் சேர்ந்து வாழ்ந்தனர். கொல்லர், கருமார், தச்சர், வணிகர், வேளாளர் என்ற உள்பிரிவுகள் இருந்தமையால் மக்களின் தேவைகள் அவர்கள் வழிநிறைவேறியது.

4. மன்னன் தன்கீழ் வாமும் மக்களுக்காக நீதிமுறைகள் தவறாது செங்கோலாட்சி புரிந்தனர். கற்றவர்கள் போற்றப்பட்டனர். இரவலர்கள் தாங்கள் விரும்பிய வண்ணம் பரிசுகளைப் பெற்றனர்.

5. முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்னும் பகுதிகளில் அவரவர்க்குரிய ஒழுக்க நெறிமுறைகளோடு இல்லறம் போற்றினர்.

6. பண்டமாற்று முறை சிறப்புற்றிருந்தது.

7. குடவோலை மூலம் தேர்தல்கள் நடத்தப்பட்டது. நிலங்கள் அளக்கப்பட்டது. அரசுக்கு வரிகள் மூலம் வருவாய் கிட்டியது.

8. மன்னனும், மக்களும் விழாக்கள், விருந்துகளில் பங்கேற்றனர். கள், மது அருந்துதல் தவிர்க்க முடியாததாக இருந்தது.

9. மக்கள் சைவம், அசைவம் உணவுமுறைகளைக் கொண்டிருந்தனர்.

10. போர் இல்லாத காலங்களில் காவியக்கலை, ஓவியக்கலை, சிற்பக்கலை, கட்டிடக் கலை, சித்திரக்கலை சிறப்புற்றது.

11. மனிதநேயம் மண்ணில் தழைத்தோங்கியது. தனக்கென வாழாது பிறர்க்கென வாழ்ந்தனர்.

12. மக்கள் திருடர் பயமின்றி வாழ்ந்து வந்தனர். நியாயமான வழிகளில் பொருள் ஈட்டினர். வந்த விருந்தினர்களைப் போற்றி இனிவரும் விருந்தினர்களை எதிர்நோக்கியிருந்தனர்.

13. ஆடவர்கள் இல்லறக் கடமைகளுடன், நாட்டைக் காக்கும் போர் அறம் புரிந்தனர்.

14. நால்வகை படைகளின் துணையோடு தன் நாட்டைக் காத்தும், தன் நாட்டு எல்லையைப் பெருக்கியும் மன்னர்கள் சிறக்க ஆட்சி செய்தனர்.

15. போர் முரசு ஒலித்தாலே வீட்டுக்கொருவர் நாடுகாக்கப் போர் அறம் பூண்டனர்.

16. இருப்போர் இரப்போர்க்கு ஈந்தனர்.

17. புரவலர்கள் புலவர்களைப் போற்றி மகிழ்ந்தனர்.

18. நிலத்தின் அடிப்படையில் இயற்கையையே தெய்வமாக வழிபட்ட மக்கள் நாளடைவில் உருவ வழிபாட்டை உருவாக்கி, உருவ வழிபாட்டிற்கு துணை புரியும் கோயில்களைக் கண்டு கற்களில் கலை வண்ணம் கண்டனர்.

19. குளந்தொட்டு வளம் பெருக்கி நாட்டைச் செல்வச் செழிப்பாக்கினர்.

20. போர் இல்லாத காலங்களில் மக்களும், மன்னர்களும் பல்வேறு கலைகளில் ஆர்வம் காட்டியதன் பயனாக கோயிற் கலையும், சிற்பக் கலையும், சித்திரக் கலையும், நாட்டியக் கலையும், ஓவியக் கலையும் வளர்ச்சி பெற்றது.

21. மக்களின் சிந்தனைகளில் சாதி, மதம், இனம் என்ற பாகுபாடுகள் நீங்கி 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற சிந்தனையால் நாடும் அவர்கள் பேசிய மொழியும் வளர்ச்சி பெற்றது. கடல் வணிகத்தால் பிற நாட்டாருடன் தொடர்பு கொண்டனர். செல்வம் என்பது சிந்தையின் நிறைவு எனக் கொண்டு குடிகளை மன்னர்கள் செங்கோல் வழுவாமல் காத்தனர்.